1/2

# திருமுறை மலர்கள்

(மூன்றாம் பாகம்)

'வாகீச கலாநிதி'

**கி. வா. ஜகந்நாதன்**







அல்லயன்ஸ்

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)

1/2

## பொருளடக்கம்

## II ஞானக் கொழுந்து





# அன்பின் உருவம்

பெரிய கூட்டம். இறைவனுடைய திருமுன் அவனுடைய ஆரருளைப் பெறவேண்டுமென்ற ஆசையாலே கூடிய கூட்டம் அது. எல்லோரும் சிவ சின்னங்களை அணிந்திருக்கிறார்கள். நெற்றியிலே திருநீறு; உடம்பெல்லாம் திருநீறு. கழுத்திலும் தலையிலும் உருத்திராட்சமாலை. கைகளைத் தலைமேல் வைத்துக் குவித்துக் கொண்டிருக்கிறார்கள். சிவபெருமானுடைய திருநாமங் களை உரக்கச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். போற்றி, போற்றி என்று வணங்குகிறார்கள்; சய சய என்று வாழ்த்துகிறார்கள்.

இந்தக் கூட்டத்தோடு சேராமல் இரண்டுபேர் தனியே நிற்கிறார்கள். அவர்கள், கூட்டத்தில் உள்ள சிவநேசச் செல்வர் களைக் கூர்ந்து கவனிக்கிறார்கள்.

''ஆ! எவ்வளவு பெரியவர்கள்! இவர்களிடத்தில் உள்ள சிவ பக்தியை என்னவென்று சொல்வது!'' என்று ஒருவர் வியந்து பேசினார். அந்த இருவரில் அவர் இளைஞர்; மற்றவர் முதியவர்.

இளைஞர் கூறியதைக் கேட்டு முதியவர் முறுவல் பூத்தார்; ''நீ எப்படி அறிந்தாய்?'' என்றார்.

''அவர்களுடைய கோலமும் கையைத் தலைமேல் குவித்திருக்கும் நிலையும் இறைவனை வாழ்த்துகின்ற வாழ்த்தும் அவர்களுடைய அன்பை வெளிப்படுத்துகின்றனவே! அவர்களைப் பார்த்தாலே அன்பின் உருவங்களாகக் காட்சி அளிக்கிறார்களே!''

''அன்புக்கு உருவம் உண்டா? அது குணம் அல்லவா?''

''ஆனாலும்...'' இளைஞர் பேச வகை தெரியாமல் விழித்தார்.

முதியவர் மறுபடியும் புன்னகை பூத்தார். ''ஆம், அன்பு குணந்தான்; அது காட்சிப் பொருள் அன்று; கருத்துப் பொருள். அதைக் கண்ணால் காண முடியாது. இவர்களுடைய வேடமும் செயலும் பேச்சும் அன்பை நினைப்பூட்டுகின்றன. அதனால் இவர்களை அன்பர்கள் என்று எண்ணுகிறாய்.''

''அது உண்மைதான். அன்புக்கு இவர்கள் செயல்கள் அடையாளங்களாக இருக்கின்றன.''

''இத்தனை பேரும் உண்மையான அன்பர்கள் என்று சொல்ல முடியாது. அன்பைப் புலப்படுத்தும் அடையாளங்கள் உண்டு. ஆனால் அடையாளங்கள் இயற்கையாக அமைவன சில; செயற்கையான உள்ளவை சில.''

''எனக்குத் தெளிவுபடவில்லை'' என்றார் இளைஞர்.

''அதோ அங்கே மூலையில் தூணோடு ஒட்டியபடி இருக்கும் அன்பரைப் பார். பக்கத்திலே சென்றாகிலும் பார்த்து விட்டு வா. உடம்பைக் கவனி. கையைத் தலையின் மேல் குவித்திருப்பதைக் கண்டு வந்துவிடாதே. அவர் உடம்பின் மேலுள்ள மயிர்க்கால்களைக் கவனித்து விட்டுவா'' என்று முதியவர் சொன்னார்.

இளைஞர் அவ்வாறே அந்தத் தூணருகே சென்றார். மெல்ல அங்கே சற்று நின்று பார்த்தார். அந்தப் பக்தர் கண்ணை மூடிக்கொண்டே, ''சிவ சிவ சிவ சிவ சய சய போற்றி போற்றி!'' என்று சொல்லிக்கொண்டிருந்தார். இளைஞர் அவர் திருமேனியைப் பார்த்தார். இளைத்து உலர்ந்து என்பு எழுந்து இயங்கும் யாக்கை அது. அதில் மேலாகப் பார்க்கிறவருக்கு ஒரு கவர்ச்சியும் இராது. இளைஞர் கூர்ந்து கவனித்தார். மயிர்க் கால்களையே கவனித்தார். ரோமங்கள் குத்திட்டு நின்றன. சிலீர் சிலீர் என்று அடிக்கடி மயிர்க்கூச்சிடுவதை அவர் கண்டார். அது மாத்திரம் அன்று. அவர் உடம்பில் சிறு நடுக்கமும் உண்டாகி யிருந்தது. பக்கத்திலிருந்த வேறு சிலரைக் கண்டார். அவர்கள் கொழு கொழுவென்று பருத்த மேனியுடையவர்களாக இருந் தார்கள். ஆனால் அவர்களுடைய மேனியில் இந்தப் புளகம் உண்டாகவில்லை. மெலிவாக இருந்த பக்தர் மெய்தான் அரும்பியது; விதிர்விதிர்த்தது.

இளைஞர் மீட்டும் முதியவரிடம் வந்தார். ''நீங்கள் சொன்னபடியே சென்று பார்த்தேன். அவருக்கு அடிக்கடி மயிர்க்கூச்சு ஏற்படுகிறது; உடம்பு நடுங்குகிறது'' என்றார்.

''எல்லோரிடமும் இந்த இரண்டும் இருக்கின்றன என்று நினைக்கிறாயா?''

''இல்லை. அருகில் இருந்த சிலரைப் பார்த்தேன். அவர்களிடம் இந்த வெளியீடுகளைக் காணவில்லை.''

''இப்பொழுது வேற்றுமை தெரிகிறதா? இவ்வளவு கூட்டத்திலும் உண்மையான அன்பர் சிலரே இருக்கிறார்கள் என்ற உண்மை தெரிகிறதா?''

இளைஞர் விடை சொல்லாமல் நின்றார். இன்னும் அவருக்கு முழுத் தெளிவு உண்டாகவில்லை.

''அழகும் அன்பும் உடைய காளை ஒருத்தனிடம் காதல் கொண்ட மங்கை ஒருத்திக்குப் பல வகையான அநுபவங்கள் அந்தக் காதல் உணர்ச்சியினாலே உண்டாகும். தன் காதலனை நினைக்கும்போது உடம்பில் மயிர்க்கூச்செரியும். காதலனைக் காணும்படி நேர்ந்தால் குபீர் குபீர் என்று புளகம் போர்க்கும்; உடம்பில் சிறு நடுக்கமும் காணும். உடம்பில் உள்ள உறுப்புக்களெல்லாம் முறுக்குத் தளர்ந்து நெகிழ்ந்து போகும். இது காதலின் அடையாளம். காதல் என்பது உள்ளத்தில் இருக்கிற குணம். பக்தியும் அத்தகையதே. அந்தக் குணங்கள் மலரும்போது உணர்ச்சி விஞ்சும். அப்போது உடம்பில் இத்தகைய விளைவுகள் ஏற்படும். இவை முயற்சியின்றித் தாமே வெளியாகின்றன; இவற்றையே மெய்ப்பாடுகள் என்று சொல்வார்கள். கோபம் உள்ளவனுக்குக் கண் சிவப்பது, சோம்பல் உள்ளவனுக்குக் கொட்டாவி வருவது, அச்சம் உள்ளவனுக்கு உடம்பு நடுங்குவது முதலியன வெல்லாம் உணர்ச்சியின் விளைவாக உடம்பிலே தோன்றும் மெய்ப் பாடுகள். இயற்கையாகத் தோன்றும் இந்த மெய்ப்பாடுகளோடு, நினைந்து செய்யும் செயல்களும் சேரும். செயல்களும் பேச்சும் உள்ளத்தில் மலர்ந்துள்ள உணர்ச்சியின் விளைவாக இருக்கும். மெய்ப்பாடுகள் இயற்கையாக அமைபவை; பேச்சும் செயலும் நினைந்து செய்பவை. உண்மையான உணர்ச்சியை இயற்கை

யான மெய்ப்பாடுகளிலிருந்து கண்டு பிடித்துக் கொள்ளலாம். காதலிக்கு உள்ள அன்பு போன்றதே இறைவனிடம் பக்தனுக்கு உள்ள அன்பும். இரண்டு உணர்ச்சி களிலும் சில மெய்ப் பாடுகள் பொதுவாக அமையும்.''

''மற்றவர்களும் இறைவனை நினைந்து கை கூப்பு கிறார்கள்; வாழ்த்துகிறார்கள். அவை அன்பின் அடையாளங்கள் அல்லவா?''

''அன்பு காரணமாகக் கைகூப்புவதும் வாழ்த்துவதும் அன்பர்களிடத்திலே நிகழும். ஆனாலும் அன்பு இல்லாமலே இந்த இரண்டையும் செய்ய முடியும். இவை நினைந்து செய்கின்றவை. உண்மையான தாயும் தன் குழந்தையை அணைத்துக் கொள்கிறாள். அதனிடத்தில் உள்ள அணியைக் கவர விரும்புபவளும் அணைத்து முத்தம் கொடுக்கிறாள். இருவருடைய செயல்களும் ஒன்றாகவே தோன்றுகின்றன. ஆயினும் தாயின் செயலே உண்மையான அன்பினால் அமைவது.''

''இந்தக் கூட்டத்தில் இரு வேறு வகையினர் இருக் கிறார்கள் என்று சொல்கிறீர்கள்.''

''ஆம். அதை நீயே பார்த்தாயே. கையைத் தலைமேல் வைத்து, போற்றி, சயசய போற்றி என்று மாத்திரம் சொல்பவர்கள் ஒரு சாரார்; மெய் அரும்பி, விதிர் விதிர்த்து, வணங்கிப் போற்றுகிறவர்கள் ஒரு சாரார்.''

''இன்னும் என்ன என்ன வேறுபாடுகள் இருக்கின்றன?'' என்று ஆர்வத்தோடு கேட்டார் இளைஞர்.

''மற்றொரு சோதனை சொல்கிறேன். அதையும் கவனித்து வா. முன்பு அவர்களுடைய மெய்யைக் கவனித்தாய். இப்பொழுது அவர்களுடைய உறுப்புக்களைக் கவனித்து வா.''

''அவர்களுடைய கையையும் தலையையும் கண்டு தானே வந்தேன்?''

''அது போதாது. உடம்பிலே சிறந்த உறுப்புத் தலைதான். ஆனால் அந்தத் தலையிலும் முகத்தில் இருக்கிற கண்களே சிறந்தவை. உலகத்தில் வாழும் மக்களுடைய கண்

பார்வையைக் கொண்டே அவர்களுடைய இயல்பைச் சொல்லி விடலாம். இப்போது இவர்களுடைய கண்களை ஆராய்ச்சி செய்.''

''எப்படி ஆராய்ச்சி செய்வது? பெரிய கண், சிறிய கண், கரிய கண், சிவந்த கண் என்று அக் கண்களின் உருவத்தையும் நிறத்தையும் ஆராயச் சொல்கிறீர்களா?''

''இல்லை, இல்லை. கண் என்று சொன்னது தவறு; பார்வை என்று சொல்லியிருக்க வேண்டும். இவர்களுடைய பார்வைகள் எங்கெங்கே பதிந்திருக்கின்றன என்று ஆராய்ந்து பார். இதையும் நுட்பமாக ஆராய வேண்டும்'' என்று சொல்லியனுப்பினார்.

இளைஞர் சென்றார். இப்போது பார்வைகளை ஆராய்ச்சி செய்யும் வேலையில் ஈடுபட்டார். கூட்டத்தில் ஒருவர் தம்முடைய மார்பைப் பார்த்துக் கொண்டிருந்தார். மற்றொருவர் தம் ருத்திராட்ச மாலையைப் பார்த்துக் கொண்டிருந்தார். வேறு ஒருவர் அருகில் நின்றவனுடைய ஆடையைக் கவனித்துக் கொண்டிருந்தார். பின்னும் ஒருவர் எங்கோ ஒரு மூலையை நோக்கினார். இப்படி வெவ்வேறு இடங்களில் பார்வையைச் செலுத்தினவர்கள் பலர். சிலர் இறைவனைப் பார்த்துக் கொண்டிருந்தனர். இந்த வேறுபாடுகளையெல்லாம் கண்ட இளைஞர் முதியவரிடம் வந்து தாம் கண்டதைச் சொன்னார்.

''முன்பு மெய்ப்பாடுகளாகிய இயற்கை விளைவும், கை கூப்பி வாழ்த்துவதாகிய செயற்கை விளைவும் ஒருங்கே ஒருவரிடம் இருப்பதைக் கண்டாய். அப்படிச் சிலர் இந்தக் கூட்டத்தில் இருக்கக்கூடும். இப்போது அவர்களுடைய பார்வையிலிருந்து இரு வேறு வகையினர் இங்கே இருக்கிறார்கள் என்று தெரிந்து கொண்டாய்.''

''உண்மை. இறைவனைப் பார்க்கிறவர்கள் ஒரு சாரார்; மற்றவற்றைப் பார்க்கிறவர்கள் ஒரு சாரார்.''

''அப்படிச் சொல்லக்கூடாது. எல்லோரும் இறைவனைப் பார்ப்பார்கள். ஆனால் இறைவனை மாத்திரம் பார்த்துக் கொண்டே இருப்பவர்கள், இறைவனையும் மற்றப் பொருள்

களையும் பார்ப்பவர்கள் என்று இரண்டு பிரிவாகப் பிரிக்கலாம். இறைவனைப் பார்ப்பவர்களிலும் இரு வேறு வகையினர் உண்டு.''

''அது என்ன வகை?''

''அதற்கும் ஓர் ஆராய்ச்சி நடத்த வேண்டும்'' என்று சொல்லி முதியவர் சிரித்தார்.

''உண்மையைக் காண எத்தனை ஆராய்ச்சி நடத்தினாலும் நடத்த வேண்டியதுதானே? சொல்லுங்கள். செய்கிறேன்.''

''கண் பார்வையைப் பார்த்து வந்து சொன்னாய். இறைவனுடைய கோலத்தைக் காண்பவர்களை இன்னும் கூர்ந்து கவனித்து வா. இறைவன் கோலத்தில் எந்த எந்தப் பகுதியைப் பார்க்கிறார்கள் என்பதைக் கூர்ந்து அறிந்து வா. தூணருகில் நிற்கும் அன்பர் கண்ணைத் திறந்தால் எங்கே பார்க்கிறார் என்பதை நுட்பமாகப் பார்த்துத் தெரிந்துகொண்டு வா.''

இளைஞர், கூட்டத்தினரை அணுகினார்; நுட்பமாக ஆராய்ந்தார். இறைவன் வாகனத்தைக் கவனிப்பாரும், இறைவன் மேனியை மேலும் கீழும் உற்று நோக்குவாரும், இறைவன் திருமுக மண்டலத்தைப் பார்ப்பவரும், அவனுடைய திருவடிகளையே காண்பவருமாக அன்பர்கள் இருந்தைக் கண்டார். தூணருகில் மெய் அரும்பி விதிர் விதிர்த்து நின்ற வரைக் குறுகினார். நல்ல வேளையாக அவர் கண் இப்போது மலர்ந்திருந்தது. அந்தக் கண் பார்வையைக் கவனித்தார். அது எம்பெருமானுடைய திருவடியிலே பதிந்திருந்தது. சில கணங்கள் அந்தப் பார்வை அப்படியே நின்றது. உடனே குபுக்கென்று அந்தக் கண்களிலிருந்து நீர் ததும்பியது. அன்பர் இப்போது தாரை தாரையாகக் கண்ணீர்விடத் தொடங்கினார்.

*மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து*
*உன்விரை ஆர்கழற்கு என்*
*கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி.*

*(விதிர்விதிர்த்து - நடுங்கி. விரை ஆர் கழற்கு - மணம் பொருந்திய திருவடியைக் கண்டு அதன்பொருட்டு.)*

அந்த மெய்யன்பருடைய நிலையைக் கண்டு இளைஞர் உருகிப் போனார். முதியவரிடம் ஓடி வந்தார். ''நீங்கள் சொல்வது உண்மை. கண் காட்டி விட்டது உண்மை அன்பை'' என்று வியப்பினால் கூவினார்.

''என்ன கண்டாய்?'' என்று கேட்டார் முதியவர்.

''கண்டறியாதன கண்டேன். இறைவனையே காணும் கூட்டத்தினரிலும் வேறுபாடு கண்டேன். அவனுடைய பல்வேறு அழகுகளைக் கண்டு அவர்கள் இன்புறுகிறார்கள். அந்த மெய்யன்பரோ இறைவனுடைய திருவடியையே உற்று நோக்கிக் கொண்டிருந்தார்.''

''நீ உண்மையை உணர்ந்துவிட்டாய். அன்பர்கள் இறைவனுடைய பேரழகில் ஈடுபட்டு அதனைக் கண்டு இன்புறுவார்கள். ஆயினும் அவனுடைய திருவடியில்தான் அவர்களுக்கு நாட்டம். அதுதான் அவர்களுக்குப் பற்றுக்கோடு. இறைவனுடைய பெருமையை அவனுடைய உறுப்புகள் யாவும் காட்டுகின்றன. ஆயினும் அப்பெருமானை அடையும் அன்பர்களுக்கு உரிய பற்றுக் கோடாக இருப்பது அவன் திருவடி.யே. மரத்தின் கிளைகளும் கொம்புகளும் வளார்களும் இலைகளும் பலவாக இருந்தாலும் அதற்கு நீர் வார்க்க வேண்டுமானால் அடியில் உள்ள வேரிலேதான் வார்ப்பார்கள். அன்பர்களும் இறைவன் அடியையே நோக்கியிருப்பார்கள்.''

''நல்ல உவமை சொன்னீர்கள்! அந்தத் திருவடியிலே நாட்டங்கொண்டு அவர்களும் கண்ணீர் விடுகிறார்கள்.''

''இறைவனுடைய திருவடியைப் பற்றிக் கொள்வதனால் அன்பர்களுக்கு அடியார்கள் என்றும், திருவடி சம்பந்திகள் என்றும் பெயர் வந்தன. தோளார், கையார், முகத்தார் என்று சொல்வது வழக்கம் அல்லவே. இறைவன் திருமேனி அழகைக் கண்ணாரப் பருகி இன்புற்றாலும் கடைசியில் அமைதி பெற நாடிப் புகுமிடம் திருவடிதான். உண்மை அன்பர்கள் அத்திருவடியை நோக்கியே கும்பிடுவார்கள். அந்தக் கழற்கே தலைமேற் கைகூப்பி வணக்கம் புரிவார்கள். அந்தக் கழலையே பாராட்டுவார்கள்.''

''அந்த மெய்யன்பர் இறைவன் கழலையே கண்டார். உன் விரையார் கழல் வெல்க என்று வாழ்த்தினார்.''

''ஆம், இறைவன் கழல் நறுமணம் பொருந்தியது. தேவர்களும் அன்பர்களும் பல பல மலர்களால் அருச்சித்துப் போற்றும் அடிகள் அல்லவா?* அன்பர்களுடைய மலரின் நறுமணமும் உள்ளத்தின் அன்பு மணமும் சார்ந்து சார்ந்து மணப்பது. அதுவன்றி இயற்கையாகவே ஞானம் மணக்கும் திருவடி அது. அதுவே ஞான மயமானது.** ஞான மணமும் மலர் மணமும் வீசும் இறைவன் பூம்பதத்தை விரையார் கழல் என்று சொல்வது மிகவும் பொருத்தமானது.''

''அந்த மெய்யன்பர் கண்ணீர் விடுகிறாரே!''

''விடுகிறார் என்று சொல்லக்கூடாது. அவராக நினைந்து முயன்று விடுவது அன்று அது. மற்றவர்களிடம் அதைக் காண முடியாது. கண்ணீர் தானே ததும்புகிறது. அது இயற்கையான மெய்ப்பாடு. மெய்யிலே புளகமும் நடுக்கமும் இயற்கையாகத் தோன்றியது போலக் கண்ணீரும் இயற்கையான விளைவு; பொய்யன்பர்களிடம் காண முடியாது.

அன்பிற்கும் உண்டோ அடைக்கும்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்

என்று வள்ளுவர் சொன்னார். கண்ணால் பார்க்கும் பார்வையில் முயற்சி இருக்கிறது. ஆனால் கண்ணீர் ததும்புவது முயற்சி யினால் வருவது அன்று; உண்மையான அன்புணர்ச்சியின் விளைவாகத் தானே உண்டாவது அது. கைகுவிப்பதாகிய செயல் யாவரிடமும் பொதுவாக இருந்தாலும், மெய்யரும்புதலும் விதிர்விதிர்த்தலும் மெய்யன்பரிடமே காண முடியும். கண் பார்வையில் பிறவற்றைப் பாராமல் இறைவனையே நோக்குகிறவர்கள் இறைவன்பால் நோக்கமுடையவர்கள். அவர்களிலும் அவன் கழலைக் காண்பவர்கள் தலையானவர்கள். கழலைக் கண்டு கண்ணீர் விடுகிறவர்கள் மிக மிக உத்தம மானவர்கள்.''

---

* *'இறைவன் திருவடி எல்லாப் பொருள்களையும் கடந்து நின்றன வாயினும், அன்பர்க்கு அணியவாய் அவர் இட்ட நறுமலரான் வெறிகமழும் என்பது போதர வெறியார் கழல் என்றார்.'*
*-திருக்கோவையார், 256, உரை.*

* *''தொண்டர்கண் டண்டிமொண் டுண்டிருக் கும்சுத்த ஞானமெனும், தண்டையம் புண்டரிகம்.''*
*-அருணகிரியார்*

''மெய்யான அன்பர்கள் மிக அரியரென்று தெரிகிறது. பொய்யான வேடதாரிகளே பலர் போலும்!''

''வேடதாரிகள் என்று சொல்ல வேண்டாம். பொய்யான வாழ்க்கையிலே மோகம் கொண்டவர்கள் உலகத்தில் மிகுதியாக இருக்கிறார்கள். இறைவனை அணுகும்போதுகூட அந்தப் பொய் அவர்களை விட்டு விலகுவதில்லை. அடியார்களுடைய கூட்டத்தில் கலந்து கைகுவித்து வாயார வாழ்த்தும் பழக்கம் அவர்களிடம் உண்டாக உண்டாக அந்தப் பொய் நிலை மெல்ல மெல்லக் கழலுகின்றது. பொய்யான பற்றும், பொய்ப் பொருளில் மோகமும் முற்றும் ஒழியும்போது இறைவனிடம் முறுகிய அன்பு தலைப்படுகிறது. அதுவரையில் மற்றவர்களைக் கண்டு, அவர்கள் செய்கிற காரியங்களை இவர்களால் செய்ய இயலும். மெய்யன்பர்கள் தலையின்மேல் கை குவிப்பதைக் கண்டு தாமும் கைகுவிப்பார்கள். அவர்கள், 'போற்றி சய சய போற்றி' என்று வாழ்த்துவதைக் கண்டு தாமும் வாழ்த்து வார்கள். ஆனால் அவர்களுக்கு உண்டாகும் புளகமும் நடுக்க மும் இவர்களுக்கு உண்டாவது இல்லை. கண்ணீர் ததும்புவ தில்லை. நாளடைவில் உண்மையன்பர்களோடு சேர்ந்து சேர்ந்து இவர்களுக்கும் அன்பு உதயமாகிறது. காந்தத்தோடு உராயும் இரும்புக்கும் காந்த சக்தி அமைவதுபோல இவர்களுக்கும் அந்த மெய்ப்பாடுகள் சில சமயங்களில் உண்டாகின்றன. இவர் களுடைய உள்ளத்தில் பொய் கரையக் கரைய அந்த மெய்ப் பாடுகள் மிகுதியாகின்றன. நமக்கு இன்னும் இறைவன் திருவருள் கிடைக்கவில்லையே என்ற புழுக்கம் உள்ளே தோன்றுகிறது. நெஞ்சம் வெதும்புகிறார்கள். வேதனையினால் உண்டாகும் இந்தப் புழுக்கத்தினால் உள்ளத்தில் உள்ள மாசு கரைகிறது; தேய்கிறது. பொய் தவிர்ந்து போற்றுகிறார்கள். முன்பு உலகியல் வாழ்வில் இவர்களுடைய கரணங்கள் ஈடுபட்ட முறையே வேறு; இப்போது அன்பர் கூட்டத்திற் கலந்த பிறகு நிகழும் நிகழ்ச்சிகளே வேறு.''

''நான் அதை உணர்கிறேன். இவர்களுடைய உள்ளம் வெதும்புகிறது; அதன் பயனாகப் பொய் தவிர்கிறது; இவை மனத்தில் உண்டாகின்றன. இவர்கள் உடம்பு நெகிழ்கிறது; புளகம் அரும்புகிறது; மேனி விதிர்விதிர்கிறது; கண் கழலை நோக்குகிறது; நீரைச் சொரிகிறது; இவை உடம்பில் நிகழும்

செயல்கள். 'இறைவனே போற்றி! உன் திருவடி வெல்க! உன் அருள் வெல்க! போற்றி சயசய போற்றி' என்று வணங்கி வாழ்த்துகிறார்கள்; இவை வாக்கில் நிகழும் செயல்கள். பொய் தவிராத காலத்தில் இவர்கள் உடம்பும் கண்ணும் கையும் தலையும் யார் யாரையோ வணங்கின. என்ன என்னவோ மெய்ப் பாடுகளை உடையனவாக இருந்தன. இவர்கள் நெஞ்சங்கள் எதுஎதற்காகவோ வேதனையுற்றன. இவர்கள் வாய் என்ன என்னவோ பிதற்றின. இப்போது மெய்யன்பு தலைப்படவே பொய்ச் செயலும் பொய்ச் சொல்லும் பொய் எண்ணமும் தவிர்ந்தன. இந்த மாற்றம் எனக்கு நன்றாகப் புலப்படுகிறது.''

இளைஞர் முகமலர்ச்சியுடன் பேசினார். புதிய உலகத்தைக் கண்டவரைப் போன்ற வியப்பில் மூழ்கியிருந்தார்.

''இப்போது அந்த மெய்யன்பரைப் போய் மறுபடியும் பார்த்துவிட்டு வா; அவர் என்ன சொல்கிறார்? கேட்டு வந்து சொல்'' என்று முதியவர் இளைஞரை அனுப்பினார்.

மூலையில் தூணுக் கருகில் அன்பின் உருவமாக நின்றிருந்த அடியாரைக் குறுகினார் இளைஞர். ''ஆண்டவனே! பல காலமாக நான் இப்படியே இருக்கிறேனே. நெகிழாமல் நிற்கிறேனே! உடையாய்! என்னைக் கண்டு கொள் அப்பா!'' என்று அவர் கூறியதை ஆராய்ச்சியிலே புகுந்த இளைஞர் கேட்டார். கேட்டதை முதியவரிடம் வந்து சொன்னார்.

''மூன்று கரணங்களையும் இறைவன் திறத்திலே ஈடுபடுத் தும் பயிற்சியில், இடையிடையே பொய் வந்து ஈர்க்கும்; அன்பு நெறியில் தளர்ச்சி உண்டாகும். அந்தத் தளர்ச்சிக்கு இடம் கொடுக்காமல் மேலும் மேலும் இறைவன்பால் ஈடுபடுவார்கள் மெய்யன்பர்கள். அவரிடத்தில் கண்ட மெய்ப்பாடுகளும் செயல்களும் உரைகளும், அவரிடம் உள்ள நினைவுகளும் அன்புமயமானவை. இந்த நிலை அவரிடம் சிறிதும் நெகிழ வில்லை.''

''பின், என்னைக் கண்டுகொள் அப்பா என்கிறாரே; ஏன்?''

''இறைவன் மீது அவருக்குள்ள பெருங்காதலை அது காட்டுகிறது. அன்பின் வேகத்தால் ஏங்கி நின்று அவர் பேசு

கிறார். 'இறைவன் எத்தனையோ செயல்களைச் செய்கிறான். தன்னை அணுகி வேண்டுவார் வேண்டும் பொருளை அளவறிந்து வழங்குகிறான். ஐந்தொழிலை நடத்துகிறான். அவ்வளவு செயல்களில் ஈடுபட்டிருக்கும் அவனுக்கு இந்த நாயேனைக் காண நேரம் ஏது? மகா ஞானியரும் யோகியரும் அன்பர்களும் அவனுடைய அருளுக்காக ஏங்கி நிற்கும்போது இந்த எளியேன் அவன் கண்ணில் படுவேனா!'' என்ற ஏக்க உணர்ச்சியால் அப்படிப் பேசுகிறார். அது அன்பின் அறிகுறி. 'எத்தனையோ பேர்களைப் பார்த்துப் பல செயல்களைச் செய்யும் நீ எளியேனையும் கண்டு உனக்கு அடியனாகக் கொள்ளவேண்டும் அப்பா!' என்று சொல்கிறார். அவர் அவன் தான் தன்னை உடையவன் என்று கண்டுகொண்டார். அவ னுடைய உடைமையே தாம் என்பதையும் கண்டு கொண்டார். உடையவன் தன் உடைமையை மறந்திருக்கலாமா? 'இதோ உன் உடைமை இங்கே இருக்கிறது. இதைக் கண்டு கொள்' என்று தம் அடிமை நிலையையும் இறைவனுடைய உரிமை நிலையையும் உணர்ந்து பேசுகிற பேச்சு, 'உடையாய்! என்னைக் கண்டு கொள்' என்னும் பேச்சு.''

★

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து
உன்விரை ஆர்கழற்குஎன்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பிஉள்ளம்
பொய்தான் தவிர்ந்துஉன்னைப் போற்றி
சயசய போற்றிஎன்னும்
கைதான் நெகிழ விடேன்உடை
யாய்! என்னைக் கண்டுகொள்ளே.

*(உடம்பில் புளகம் அரும்பி, நடுங்கி, உன்னுடைய மணம் நிரம்பிய திருவடிக்கு என் தலையின்மேல் கையை வைத்து வணக்கம் புரிந்து, கண்ணீர் ததும்பி, உள்ளம் வேதனையினால் புழுங்கி, பொய்யான பற்றையும் உணர்ச்சிகளையும் நீங்கி, உன்னை வணங்கி, 'வெல்க வெல்க! போற்றி' என்னும் ஒழுகலாற்றைச் சிறிதும் தளர விடமாட்டேன். உடையவனே! என்னை இவன் நம் அடியான் என்று கண்டு அறிந்து என்னை ஏற்றுக் கொண்டருள்.*

*மெய் - உடம்பு. தான்: அசை. அரும்பி - புளகம் அரும்பி; மயிர்க்கூச்செறிந்து. விதிர் விதிர்த்து - நடுங்கி. விரை - மணம். கழல் - காலில் அணியும் வீர வெண்டயம்; அது இங்கே திருவடிக்கு ஆயிற்று; ஆகு பெயர். கழற்கு - கழலின் பொருட்டு. ததும்பி - பொங்கி. வெதும்பி - புழுங்கி; வேதனை அடைந்து. போற்றி - வணங்கி. இரண்டு போற்றிகளையும் அன்பருடைய வார்த்தைகளாக வைத்தும் பொருள் சொல்லலாம். சய - ஜய; வெல்க, கை - ஒழுக்கம். நெகிழ - தளர. கொள் - ஏற்றுக்கொள்.)*

★

**மா**ணிக்கவாசகர் பாடியருளிய திருவாசகத்தில் திருச்சதகம் என்னும் பகுதியில் உள்ள நூறு பாடல்களில் முதற் பாடலாக விளங்குவது இப்பாட்டு. திருச்சதகத்துக்கு முன் சிவ புராணம், கீர்த்தித் திருவகல், திரு வண்டப் பகுதி, போற்றித் திருவகவல் என்ற நான்கு நெடும்பாடல்கள் உள்ளன. போற்றித் திருவகவலை அடுத்து நிற்பது திருச்சதகம். அந்தத் திருவகவல்,

> போற்றி போற்றி புராண காரண
> போற்றி போற்றி சயசய போற்றி!

என்று முடிகிறது. தொடர்ந்து வரும் திருச்சதகத்தின் முதற் பாட்டாகிய இதில் அதன் கடைசியடியிலுள்ள சொற்கள் வீணையின் ஒலி இழைவது போலக் கேட்கின்றன.

> போற்றி சயசய போற்றி என்னும்
> கைதான் நெகிழவிடேன்.

மெய் புளகம் போர்ப்ப, நடுக்கம் உண்டாக, கையைத் தலையின்மேல் வைத்து, கண்ணீர் வார, சயசய போற்றி என்று வாழ்த்தி நிற்கும் அன்பருடைய கோலம் இந்தப் பாட்டைப் படிக்கும்போது நமக்குப் புலனாகிறது. இவை கண்ணாற் காணும் காட்சிகள். இவற்றோடு உள்ளம் வெதும்புதலும் பொய் தவிர்த்தலும் தளர்ச்சியின்றி நிற்றலுமாகிய பண்புகளும் கருத்துக் குட் பதிகின்றன. அன்புக்கு உருவம் இல்லை; ஆனாலும் அதன் விளைவுகளையெல்லாம் ஒருங்கே காணும்போது, ''இதுதான் அன்பின் உருவம்!'' என்று சொல்வதில் தடை என்ன?

★

# கரந்து நில்லாக் கள்வன்

அவர் ஒரு சிவ பக்தர். பேராசையுள்ள சிவ பக்தர். உலகத்துப் பொருள்களிலே பேராசை இல்லை. தமக்கு மேன்மேலும் அன்பு வளர வேண்டும் என்னும் பேராசை உடையவர். அவருடைய அன்பு நிலையைக் கண்டாலே, ''இப்படி இருப்பவர்கள் உலகத்தில் யார்!'' என்று நமக்கு வியப்பு உண்டாகும். ஆனால் அவரோ, ''நான் என்ன அன்பு செய்துவிட்டேன்! நான் இன்னமும் செய்யுமாறெல்லாம் செய்ய வில்லையே! இறைவன் அந்த நிலையில் என்னை வைத்தருள வில்லையே!'' என்று மனம் நைந்து சாம்புவார்.

காலையில் எழுந்து எங்கே மலர்ச் செடிகள் உண்டென்று நாடிச் தேடிச் செல்வார். சிவபெருமானுடைய தலங்கள் எங்கு உண்டோ அங்கெல்லாம் அவரைப் பார்க்கலாம். பல வகை யான மலர்களைப் பறிப்பார். பறித்துக் கோதுநீக்கி ஆய்வார். என்ன என்ன மலர்கள் இறைவனுக்கு உரியன என்று சாத்திரங் களை ஆராய்வார்; புராணங்களை ஆராய்வார்; அன்பர்களைக் கேட்பார். இப்படிப் பலவாறாக ஆய்ந்த மலர்களையெல்லாம் தொகுத்து இறைவனுக்கு அருச்சனை செய்ய முற்படுவார்.

ஒரு நாள் இரண்டு நாள் செய்கிற காரியம் அன்று இது. எப்பொழுதும் இதுவேதான் அவருக்கு வேலை. 'இறைவ னுடைய இந்தத் தலத்துக்கு இன்று போக வேண்டும்; இன்ன இன்ன மலர்களையெல்லாம் கொண்டு போக வேண்டும்; இத்தனை அருச்சனை செய்ய வேண்டும்' என்று அவர் எப்பொழுதும் நினைத்துக்கொண்டே இருப்பார்; நினைத்த படியே செய்வார்.

பரந்துபல் ஆய்மலர் இட்டு.

இது ஒரு நாளும் முட்டுப்படாமல் நடந்து கொண்டே வருகிறது. இறைவனுடைய அடியிலே அருச்சனை செய்து அதனை வணங்குவதே அவர் வேலை.

முட்டாது அடியே இறைஞ்சி.

ஒரு நாள் அவரை ஒருவர் கண்டார். ''ஐயா, நீர் எப்போதும் இவ்வளவு பரபரப்போடு மலர்களையெல்லாம் குவித்து ஒருநாள் கூடத் தடை இல்லாமல் ஆண்டவனுடைய திருவடிக்கு அருச்சனை செய்து விழுந்து விழுந்து வணங்கு கிறீரே; உம்முடைய வாழ்க்கை எப்படி நடக்கிறது? நீர் எப்படிச் சம்பாதிக்கறீர்? உமக்கு யார் பொருள் கொடுக்கிறார்?'' என்று கேட்டார். அந்த அடியவர் பேச ஆரம்பித்தார்.

''பொருள் ஈட்டுவதைச் சொல்கிறீர்களா? யாரைக் கேட்டால் நமக்கு வேண்டிய பொருள் கிடைக்கும் என்று நினைக்கிறீர்கள்?'' என்று திரும்பிக் கேட்டார்.

''ஏன்? எத்தனையோ செல்வர்கள் இருக்கிறார்கள். நாம் செய்கிற வேலையை வாங்கிக்கொண்டு கூலி கொடுக்கிறவர்கள் இருக்கிறார்கள். அவர்களிடத்திலே சென்று வேலை செய்து வேண்டியவற்றைப் பெறலாமே!'' என்றார் நண்பர்.

அதைக் கேட்ட பக்தர் சற்றுப் புன்னகை பூத்தார். ''நான் சோம்பேறி. எனக்குப் பிறருடைய உள்ளம் விரும்பும்படியாக வேலை செய்ய முடியாது. என்ன செய்வது?'' என்றார்.

''அப்படியானால் அன்புடையவர்களிடத்திலே போய் எனக்கு இது வேண்டும் என்று கேட்கலாமே!'' என்று நண்பர் சொன்னார்.

''கேட்கலாம் நான் கேட்கும் பொருளெல்லாம் கொடுக்கிற மனிதன் இந்த உலகத்தில் இருக்கிறானா?'' என்று கேட்டார்.

''ஏன் இல்லை?'' என்று நண்பர் சொன்னார்.

''மனிதனுக்கு எத்தனை பேராசை என்று உமக்குத் தெரியாதா? யார் நமக்கு ஒரு பொருளைக் கொடுக்கிறாரோ, அவருக்கே பல ஆசை இருக்குமே! தாமே குறைவுடையவர்,

குறையில்லாதபடி நமக்கு எப்படித் தருவார்?'' என்று சொன்னார் அந்தப் பக்தர்.

''ஆண்டவனை வழிபடுகிறீரே; அவன் மாத்திரம் தந்து விடுவானா?'' என்று நண்பர் கேட்டார்.

''நிச்சயமாகத் தருவான். நாம் எதைக் கேட்கிறோமோ அவற்றையெல்லாம் தருவான். அந்த நம்பிக்கையோடுதான் எத்தனையோ பேர் ஆண்டவனிடம் அடைக்கலம் புகுகிறார்கள். யார் தன்னிடத்திலே வந்து பூசனை புரிந்து வழிபடுகிறார்களோ அவர்களுக்கு எளியனாகி, அவர்கள் கேட்கின்ற எல்லா வற்றையும் கொடுக்கின்ற பெருவள்ளல் அல்லவா எம் பெருமான்!'' என்று மனம் உருக உருகப் பேசினார் அந்தப் பக்தர்.

''எல்லாரும் அப்படிச் சொல்லக் காணோமே. இறைவன் வாழ்க்கையில் சோதனையே உண்டாக்குகிறான் என்றல்லவா பேசுகிறார்கள்?'' என்றார் நண்பர்.

''அது அறியாதவர்கள் கூற்று. இறைவன் எல்லோருக்கும் எல்லாவற்றையும் தந்துவிடமாட்டான். அவன் பெரிய கள்வன். எல்லாருக்கும் மறைந்து நிற்கும் கள்வன். சாத்திரத்தை மாத்திரம் ஓதிக்கொண்டிருக்கிறவர்களுக்கு மறைந்திருப்பான். தோத் திரத்தை வெளிப்படையாகச் சொல்லிக் கொண்டிருக்கிறவர் களுக்கும் மறைந்திருப்பான். ஆகமத்தை அறிந்தவர்களுக்கு அந்த ஆகமத்திற்குள்ளே இருந்து மறைந்திருப்பான். உண்மையான அன்பு இல்லாதவர்கள் கரடியாகக் கத்தினாலும் வேறு எந்த வகையில் .முயற்சி பண்ணினாலும் அவனுடைய திருவருளைப் பெறுவது அரிது. எல்லாருக்கும் கள்வனாக ஒளிந்து நிற்கின்றவன் அவன்.

''அந்தக் கள்வனையும் மயக்கக் கூடியவர்கள் அன்பர்கள். அவர்கள் எதைக் கேட்டாலும் அளிக்கிறவன். 'இவனை நாம் இடைவிடாமல் மலரால் அருச்சித்து எதைக் கேட்டாலும் கொடுத்துவிடுவான்' என்று அன்பர்கள் அணுகுகிறார்கள்.''

''அப்படி அவர்கள் எண்ணுகிறார்கள் என்பது அவனுக்குத் தெரியுமோ?''

''நன்றாகத் தெரியும். அவர்களுடைய உள்ளத்தில் இருக்கிறவனுக்கு அது தரியாதா? அங்கே அவன் கரந்து நிற்க மாட்டான். அவர்கள் இரப்பவற்றையும் கரவாமல் தந்தருள்வான்.''

''இறைவனிடம் அன்பு வைக்கிறவர்கள் இப்படி எண்ணலாமா?''

''தாய் பல தின்பண்டங்களைப் பண்ணி வைத்திருக் கிறாள். அவற்றைக் கண்டு குழந்தை ஆசைப்படுகிறது. நாம் செய்தவற்றைத் தின்ன இது ஆசைப்படுகிறதே என்று எந்தத் தாயாவது சினம் அடைவாளோ? அன்பர்கள் வேண்டியவற்றை இறைவன் கொடுக்கிறதில் வியப்பு ஒன்றும் இல்லை. அப்படிக் கொடுக்கின்ற வள்ளலையன்றி வேறு யாரைப்போய் இறைஞ்சுவது?'' என்று பக்தர் கூறி முடித்தார்.

பரந்துபல் ஆய்மலர் இட்டுமுட்
டாதுஅடி யேஇறைஞ்சி
இரந்தஎல் லாம்எமக் கேபெற
லாம்எனும் அன்பர் உள்ளம்
கரந்துநில் லாக்கள்வனே!

*(பல இடங்களுக்குச் சென்று ஆராய்ந்து எடுத்த பல மலர்களை அருச்சித்து இடையீடு இன்றித் தன் திருவடியை வணங்கி இரந்த எல்லாவற்றையும் நமக்கென்று பெற்றுக்கொள்ளலாம் என்று எண்ணும் அன்பர்களின் உள்ளத்தில் மறைந்து நில்லாத கள்வனே!*

*பரந்து-பல இடங்களிற் சென்று; பரபரப்புடன் என்றும் சொல்லலாம். ஆய்மலர்-ஆராய்ந்த மலர்கள். முட்டாது-இடையீடு இன்றி. இறைஞ்சி- வணங்கி. கரந்து-மறைந்து.)*

★

அன்பர்களிடத்தில் இத்தனை அன்புடையவனாக இருக்கின்ற ஆண்டவனைப் பணியாமல், வாழ்த்தாமல், அவனை நினைந்து உருகாமல், வீணாக யார் யாரையோ நம்புவதில் பயன் என்ன? அவனுடைய திருவடிக் கண்ணே உண்மையான அன்பு இடையீடில்லாமல் இருந்தால் நமக்கு எதனாலும் குறைவே உண்டாகாது. அந்த அன்பைத்தான் நாம் அவனிடத்திலே யாசிக்க வேண்டும். ''எனக்கு அது வேண்டும்.

இது வேண்டும்' என்று கேட்பதற்கு முன்னாலே, ''எனக்கு உன்னுடைய அன்பு வேண்டும்'' என்று யாசித்தால், அதன் பிறகு இறைவன் வேண்டியவற்றையெல்லாம் தருவான். இறைவனுடைய அன்பர் கூட்டத்துக்குள்ளே ஒருவனாக அமர்ந்துவிட்டால் பிறகு எது கேட்டாலும் தருவான்.

கேட்பதற்கு எல்லாருக்கும் தெரியும். உலகிலுள்ள மக்கள் எல்லோரும் எத்தனையோ பொருள்கள் வேண்டுமென்று இறைவனைக் கேட்டுக்கொண்டுதான் இருக்கிறார்கள். அவர்கள் கேட்பதற்கு முன்னாலே ஒன்று செய்ய வேண்டும். அவன்பால் அன்புடையவராக வேண்டும். அப்படியானால்தான் அவனைக் கேட்கும் உரிமை கிடைக்கும். ஆனால் அவர்களுடைய உள்ளத்தில் வெறும் ஆசை இருக்கிறதே அன்றி அன்பு இல்லை.

இறைவனுடைய திருவடியில் முறுகிய அன்பு தோன்றிவிட்டால் அப்புறம் கேட்பன எல்லாம் பலிக்கும். வண்டியிலே ஏறின பிறகுதான், ''ஒரு மணி நேரம் போனோம்; பத்து மைல் கடந்துவிட்டோம்'' என்று சொல்ல முடியும். வண்டியில் ஏறாமல் கீழே நின்றுகொண்டு ஒரு மணி கழித்துப் பார்த்தால், ''அடடா! இருக்கிற இடத்திலேயே இருக்கிறோமே'' என்றுதான் சொல்லும்படி இருக்கும். இறைவனுடைய அன்பு வண்டியில் ஏறின பிற்பாடுதான் நாம் எது கேட்டாலும் கிடைக்குமே அன்றி அதற்கு முன்னால் கேட்பன எல்லாம் கிடையா.

இதில் மற்றோர் அதிசயம்: வண்டியிலே ஏறின பிறகு அவன் கேட்கிற கேள்வியே வேறு விதமாகப் போய்விடும்; அவனுடைய ஆசையே மாறிவிடும். உலகில் இருக்கின்ற மக்கள் எல்லாவற்றையும் கேட்பார்கள். அவர்கள் உள்ளம் ஆசை நிரம்பியது. அன்பர்களோ எல்லாவற்றையும் கேட்ப தில்லை. பெரும்பாலும் தங்களுடைய வாழ்க்கைக்கு வேண்டியவை இவை என்று எண்ணிக் கவலையடைவதோ கேட்பதோ இல்லை. ''இறைவனே நமக்கு வேண்டியவற்றைத் தருவானே. குறிப்பறிந்து தருகின்ற கொடையாளியாகிய அவனிடத்தில் இன்னது வேண்டும் என்று சொல்வது பைத்தியக் காரத்தனம்'' என்றுதான் நினைப்பார்கள்.

ஒருகால் அவர்கள் ஏதேனும் கேட்டுவிட்டால் அது மிகச் சிறியதாகத்தான் இருக்கும். எல்லா ஐசுவரியங்களையும் தேவர்களுக்கும் மற்றவர்களுக்கும் தந்து காப்பாற்றுகின்ற பேரருளாளனாகிய ஆண்டவன் பக்தர்கள் கேட்கின்ற சிறிய பொருளைத் தராமலா போவான்?

''இரந்த எல்லாம் கொடுக்கிறான்'' என்று சொன்னால், ''கேளாததைக் கேட்பார்கள். இறைவனாலே கொடுக்க முடியாததைக் கேட்பார்கள். அப்போது என்ன செய்வது?'' என்று நினைக்கக் கூடாது. எது கேட்டாலும் இறைவன் தருவான். ஆனாலும் தங்களுக்கு நன்மை தராத பொருளை அவர்கள் கேட்கவே மாட்டார்கள். கேட்பதே மிக அருமையாக இருக்கும்.

ஆசைப்படுவதற்கு முன்னாலே அன்பு செய்ய வேண்டும். அன்பு செய்த பிறகு, எதைக் கேட்டாலும் தருவான். இடையீடில்லாத அன்பு யாருக்கு இருக்கிறதோ அவர்கள் எப்பொழுது எதைக் கேட்டாலும் தருவான். சில காலம் அன்பு வைத்துச் சில காலம் மறந்திருந்தால் அன்பு வைத்த காலத்தில்தான் கேட்ட பொருள் கிடைக்கும். எப்பொழுது கேட்டாலும் எது கேட்டாலும் கிடைக்க வேண்டுமானால் எல்லாச் சமயத்திலும் ஆண்டவனிடத்திலே அன்பு இருக்க வேண்டும். அன்பு இடையீடில்லாததாக இருந்தால் இரந்த வெல்லாம் நமக்குக் கிடைக்கும்.

> நின் வார்கழற்கு அன்பு எனக்கு
> நிரந்தர மாய் அரு ளாய்

என்று கேட்கிறார் மாணிக்கவாசகர். இந்த அன்பைக் கேட்ப தற்குக் காரணம், இரந்தவெல்லாம் எமக்கே பெறலாம் என்ற நோக்கம் அன்று. அந்த நோக்கம் தவறு. இறைவனிடத்திலே அன்பு செய்வது இறைவனுடைய திருவருள் கிடைக்க வேண்டும் என்ற ஒன்றுக்குத்தான். ஏதேனும் வேண்டுமானால் கேட்கலாம்; கிடைக்கும். அது நடுவிலே வந்த செய்தி. இறைவனிடத்தில் அன்பு உடையவனாக இருப்பதே ஒரு பெரிய இன்பம்.

இடையீடில்லாத அன்பு எதற்காக வேண்டும்? இறைவனைத் தொழுவதற்காகத்தான். அதை மாணிக்கவாசகர் சொல்லுகிறார்.

நின் கழற்கு அன்பு எனக்கு
நிரந்தர மாய் அரு ளாய்நின்னை
ஏத்த முழுவதுமே.

'என்னுடைய வாழ்நாள் முழுவதும் உன்னைப் பூரணமாக ஏத்துவதற்காக அன்பு வேண்டும். பிறிதொன்றை ஏத்தாமல் நின் திருவடிகளையே ஏத்துவதற்காக எனக்கு அன்பு வேண்டும். அது நிரந்தரமாக இருக்க வேண்டும்' என்று வேண்டிக்கொள்கிறார்.

பரந்துபல் ஆய்மலர் இட்டுமுட்
டாதுஅடி யேஇறைஞ்சி
இரந்தஎல் லாம்எமக் கேபெற
லாம்எனும் அன்பர்உள்ளம்
கரந்துநில் லாக்கள்வ னேநின்றன்
வார்கழற்கு அன்புஎனக்கு
நிரந்தர மாய்அரு ளாய், நின்னை
ஏத்த முழுவதுமே.

*(வார்கழற்கு-நீண்ட திருவடிகளுக்கு. நிரந்தரமாய்-இடையீடு இன்றி. முழுவதும்-வாழ்நாள் முழுவதும்.)*



# இரண்டு வழிகள்

இரண்டு சாலைகள் பிரிகிற இடத்தில் ஒரு மனிதன் நின்று கொண்டிருந்தான். எந்த வழியாகப் போகவேண்டு மென்பதைச் சற்று யோசித்தான். இரண்டு வழியிலும் இந்தச் சாலை இன்ன இன்ன இடத்திற்குச் செல்லுவது என்ற குறிப்பு இருந்தது. ஒரு சாலையில் **'ஆமாறு'** என்று போட்டிருந்தது. மற்றொரு சாலையில் **'சாமாறு'** என்று போட்டிருந்தது.

ஆதல், சாதல் என்ற இரண்டும் ஒன்றுக்கொன்று நேர் விரோதம். மனிதன் மேலும் வளர்ச்சி பெறுவதை ஆக்கம் என்று சொல்வார்கள். இறந்து போவது சாவு என்பது நமக்குத் தெரியும் மனிதன் நாள் ஆக ஆகத் தான் வளர்ந்து வருவ தாகவே நினைக்கிறான். ஆனால் உண்மையை நோக்கினால் அவன் சாவை நோக்கிப் பிரயாணம் செய்து கொண்டிருக் கிறான். 'இருபது ஆண்டுகள் ஆயின. அதற்கு ஏற்ற வளர்ச்சி அவனுக்கு ஏற்பட்டிருக்கிறது' என்று சொல்வதைக் காட்டிலும், 'மரணம் என்ற முடிவிடத்தைக் குறுகுவதற்கு இருபது ஆண்டு கடந்துவிட்டான்; அந்த மரணத்துக்கும் அவனுக்கும் இடையில் இருபது ஆண்டுத் தூரம் குறைந்துவிட்டது' என்றுதான் கொள்ள வேண்டும்.

நாம் புறப்பட்ட இடத்தைப்பற்றி எண்ணுவதைக் காட்டி லும் போய்ச் சேரவேண்டிய இடத்தைப்பற்றி நினைப்பதுதான் அறிவுடைமைக்கு அழகு. போய்ச் சேருகிற இடம் இன்ன தென்று நமக்கு முதலில் தெரிந்துவிட வேண்டும். நம்முடைய உள்ளத்தில் நல்ல இடத்திற்குப் போவோம் என்று நினைத்துக் கொண்டால் போதாது; அதற்குரிய முயற்சியும் செய்ய வேண்டும்.

இரண்டு சாலைகளும் சந்திக்கின்ற இடத்தில் நிற்கின்ற பிரயாணி ஆக்கத்திற்குரிய வழியில் செல்லுவானேயன்றி

மரணத்துக்குரிய வழியில் செல்லமாட்டான். சாதலைக் காட்டிலும் ஆதல்தான் மனிதனுக்கு விருப்பம். ''உனக்கு மரணமில்லாப் பெருவாழ்வைத் தருகிறேன்; இந்த மருந்தைச் சாப்பிடு; மரணம் வராது'' என்று சொன்னால் அதைச் சாப்பிடு வதற்கு நாம் தயாராக இருக்கின்றோம். தேவர்கள்கூட மரணம் இல்லாத வாழ்வு பெறுவதற்காகத்தான் அமுதத்தை உண்டார் கள். நாமும் அமுதம் கிடைக்குமானால் உண்ணுவதற்குச் சித்தமாக இருக்கிறோம். ஆனால் அந்த அமுதம் கிடைக்கும் இடம் இன்னது என்றுதான் தெரியவில்லை. அது எளிதிலே கிடைத்தால் நாம் உண்ணுவோம். முயற்சி இல்லாமலே கிடைத்தால் ஊக்கத்துடன் உண்ணுவோம்.

உண்மையில், மரணத்தை வெல்வதற்குரிய வழி ஏதாவது உண்டா, இல்லையா? உண்டு. அது தெரியாமல் இருப்பதனால் சாகும் ஆற்றில் நாம் செல்லுகிறோம். ஆதல் என்ற முடிவுக்குக் கொண்டுபோய்ச் சேர்கின்ற வழி வேறு இருக்கிறது. உலகத்தில் உள்ள மக்களில் பெரும்பாலோர் சாதல் என்ற இடத்திற்குத்தான் போய்க்கொண்டிருக்கிறார்கள்; மிக விரைவாகப் போய்க் கொண்டிருக்கிறார்கள். எத்தனைக்கு எத்தனை அவர்களுக்கு ஆற்றலும் அறிவும் இருக்கின்றனவோ அத்தனைக்கு அத்தனை அவர்கள் மிக விரைவாக மரணத்தை நோக்கிச் செல்லுகிறார்கள். அவர்களுடைய சதுரப்பாடெல்லாம், சாமாற்றைச் சார்வதற்கே, மரணத்தை அடைவதற்கே அமைகின்றன.

சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே.

*(சதுராலே-சாமர்த்தியத்தால். சார்வான்-அடைய.)*

**ஆ**மாறு அல்லது ஆதல் என்ற இடத்துக்குச் செல்லுகின்ற வழியிலே அற்புதமான பூஞ்சோலைகளெல்லாம் இருக்கின்றன. அந்த வழியிலே போவதற்குரிய முயற்சியை நாம் செய்ய வேண்டும். நம்முடைய சமுதாயம் அதற்கு நேர் எதிர்ப் பாதையில்தான் செல்லுகின்றது. அதனால் ஆதல் என்ற லட்சியத்தை நோக்கிச் செல்லுகிற பாதையில் அதிகக் கூட்டம் இருப்பதில்லை. எங்கே அதிகக் கூட்டமோ அதுதான் நல்லது என்ற நினைப்பு நமக்கு உண்டாகி இருக்கிறது. ஜனநாயக, காலத்தில் அந்த நம்பிக்கை மிக அதிகமாகப் போய்விட்டது. நல்லதா, அல்லாததா என்று பார்ப்பதைக் காட்டிலும், எத்தனை

பேர் போகிறார்கள் என்று பார்க்கிற நினைவுதான் இந்தக் காலத்தில் நமக்குத் தோன்றிக்கொண்டிருக்கிறது.

உண்மை எப்பொழுதும் உண்மையாகத்தான் இருக்கும். ஆயிரம் பேர் சேர்ந்து உண்மை அல்ல என்று சொல்வதற்காக உண்மை பொய்யாகாது. அப்படித்தான் ஆக்க வழி அல்லது ஆதலைச் சார்கின்ற வழியானது என்றைக்கும் நன்மையைத்தான் பயக்கும். அந்த வழியிலே நடக்கிறவர்கள் மிகச் சிலராகவே இருக்கலாம். ஆனாலும் ஆக்கம் ஆக்கந்தான்; அதைச் சார்வதற் குரிய வழி நன்மையைப் பயப்பதுதான். சொல்லகிறவர்கள் சிலர் என்று அதைக் குறைவாக நினைக்கக் கூடாது. மாணிக்கவாசகரைப் போன்ற சிலர்தாம், ''இது ஆகின்ற வழி'' என்று சொல்லு கிறார்கள். இனி, ஆகின்ற வழி எப்படி இருக்கிறது என்பதைப் பார்க்கலாம்.

★

**ஆ**மாறு என்பது இன்னது என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். ஆக்க நெறி அல்லது நாம் வளர்ச்சி பெற்றுப் பரிபூரணத்தை அடையும் நெறி எதுவோ அதுதான் ஆம் ஆறு. முன்னாலே உள்ள வரையறையின்படி, அநுபவிக்க வேண்டிய துன்பங்களை இப்பொழுது நுகர்ந்து கொண்டிருக்கிறோம். 'மறுபடியும் அடுத்த பிறவி எடுத்து இதைப்போன்ற துன்பத்தையே அநுபவிப்போம். அதற்கு ஏற்ற வகையில் நாம் வாழ்கிறோம்' என்றால், அது ஆம் ஆறு ஆகாது. உலகில் நாம் வரும்பொழுது பிராரப்தம் என்ற வினை மூட்டையைக் கட்டிக்கொண்டு வருகிறோம். நம்முடைய கணக்கில் பெரிய வினைக் குவியல் ஒன்று இருக்கிறது. அதற்குச் சஞ்சிதம் என்று பெயர். அதிலிருந்து ஒரு பகுதியை இந்த வாழ்க்கையில் கரைத்து விடுவதற்காகக் கொண்டு வருகிறோம். அதற்குத்தான் பிராரப்தம் என்று பெயர். ஆனால் நாம் கையிலே கொண்டு வந்ததைக் கரைத்து விடுவதோடு நின்றுவிடுவதில்லை. புதிய மூட்டையையும் சேர்த்துக்கொண்டு போகின்றோம். இந்தப் பிறவியிலே நாமாகச் சேர்த்துக்கொள்ளுகிற வினை மூட்டை அது; அதற்கு ஆகாமியம் என்று பெயர். இப்படி வினைகள் மூன்று விதம்; நம்முடைய கணக்கிலே பலகாலமாகச் சேர்ந்து வருகின்ற மூட்டையாகிய சஞ்சிதம் ஒன்று; இந்தப் பிறவியிலே

அநுபவிப்பதற்காக வரையறை செய்யப்பெற்ற பிராரப்தம் ஒன்று; இந்தப் பிறவியிலே புதிதாக ஏற்றுக்கொள்கிற வினையாகிய ஆகாமியம் ஒன்று; ஆக மூன்று. இந்த மூன்றில் பிராரப்தத்தைக் கரைத்துவிட்டு இறைவனுடைய திருவடியாகிய லட்சியத்தை நினைந்து வாழ்கிற வாழ்வுதான் ஆக்க வாழ்வு. எது நிரதிசய ஆனந்தத்துக்கு அழைத்துச் செல்லுமோ, எந்த நெறியில் சென்றால் துன்பங்களுக்கு அப்பால் உள்ள ஆனந்த நிலையை அடையலாமோ, அந் நெறிதான் ஆக்க நெறி.

அந்த நெறி இன்னதென்று பெரியோர்களெல்லாம் சாத்திரங்களிலும் தோத்திரங்களிலும் காட்டியிருக்கிறார்கள். சாத்திரங்களில் காட்டியவையெல்லாம் சட்டத்தால் சொல்லப் பெறுபவை போன்றன. தோத்திரங்களாகிய தேவாரம் முதலிய வற்றிலே சொன்னவை தங்களுடைய வாழ்க்கையிலே பெரிய வர்கள் அநுபவித்துக் காட்டிய நெறிகள். திருவாசகத்தில் மாணிக்கவாசகர் ஆக்க வழியைக் காட்டுகிறார். ''நான் ஆக்கவழியிலே போகவில்லையே!'' என்று புலம்புகிறார். உண்மையிலே அவர் ஆக்க வழியிலே செல்லுகிறவர். ஆனாலும் அவருடைய அன்பு அப்படிப் புலம்பச் செய்கிறது. அவர் புலம்புவதனாலே ஆக்க வழி இன்னது என்பது நமக்குப் புலப்படுகிறது.

ஆமாறுஉன் திருவடிக்கே அகம்குழையேன்

என்று தொடங்குகிறார். ஆக்க வழிப் பயணத்தில் அடிப் படையான நிலை, உள்ளம் குழைவது. ஆக்கவழியிலே அடி எடுத்து வைப்பவனுக்கு முதல் பக்குவம் உள்ளம் குழைதல். அப்படிக் குழைவதற்கு மூல காரணம் அன்பு. அன்பினாலே உருகவேண்டும். ஆக்கவழி அல்லாத சாதல் வழியிலே செல்லு கிறவர்களுக்கோ மனம் கல்லாக இருக்கின்றது. தம்முடைய நலத்தையே நினைக்கின்ற வன்மை, பிறருடைய நன்மைகளைக் கண்டால் பொறாமைப்படும் வன்மை, உலகில் உள்ள பொருள் களையெல்லாம் நாம் ஆளவேண்டும் என்ற ஆசையினாலே உண்டான வன்மை-இப்படிப் படலம் படலமாக அழுத்திக் கொண்டிருக்கின்ற தீய இயல்புகளால் மனம் கல்லாகிப் பாறையாகி வன்மையாக இருக்கிறது. அத்தகைய மனம் நெகிழ்ந்து கொடுக்க வேண்டும். அந்த நெகிழ்ச்சி உண்டாக

அன்பு என்ற சூடு ஏறவேண்டும். உலகில் உள்ள உயிர்களிடத்தி லெல்லாம் அன்பு பரவினால் அப்பொழுது நெஞ்சு நெகிழும். ஆசை, லோபம், பொறாமை முதலிய இறுகல் தன்மை யெல்லாம் மாறிவிடும்.

பயணம் போகிறவனுக்குப் போகின்ற வழிக்கு ஏற்றபடி சில ஏற்பாடுகள் செய்துகொள்ள வேண்டியிருக்கும். அந்த அந்த வழியிலே போகிறவர்களிடம் சில பொதுவான செயல்களைக் காணலாம். காட்டு வழியிலே போகிறவர்கள் கையில் ஆயுதங்களுடன் செல்வார்கள். கூட்டமாகப் போவார்கள். நிழலும் நீரும் உள்ள சாலை வழியே போகிறவர்கள் அங்கங்கே தாகத்திற்குத் தண்ணீர் அருந்தி மர நிழலில் தங்கி இளைப்பாறிச் செல்வார்கள். இந்தச் செயல்கள் வழியின் இயல்புக்கு ஏற்ப மாறுபடும்.

ஆகின்ற வழியிலே செல்லுபவர்கள் என்ன என்ன செய்வார்கள்? அவர்கள் இறைவன் திருவடியை நினைந்து உள்ளம் குழைவார்கள்; அன்பினால் உருகுவார்கள். அகம் குழைவதை அவர்களுடைய கண்களும் முகமும் பேச்சும் காட்டும். அவற்றில் உருக்கம் உண்டாகும். மணற்குன்றுக்கு அடியிலே தண்ணீர் ஓடினால் அந்தக் குன்று மெல்ல மெல்லக் கரைகிறது. அகம் அன்பினால் குழையும்போது உருக்கம் ஏற்படு கிறது. இவை இரண்டும் உள்ளத்திலே தோன்றும் உணர்ச்சியும் அதனால் விளையும் மெய்ப்பாடும் ஆகும். அடுத்தபடியாக விளைகின்ற செயல்கள் சில உண்டு.

நம் அன்புக்கு உரிய குழந்தை, மனைவி ஆகியவர்களிடம் அன்பைப் பல படியாகக் காட்டுகிறோம். அவர்களுக்கு அலங்காரம் செய்து பார்க்கிறோம். நம் விருப்பத்துக்கு உரிய எல்லாப் பொருள்களையும் அலங்காரம் செய்வதில் நமக்குத் திருப்தி உண்டாகிறது. வீட்டை அலங்கரிக்கிறோம்; உடம்புக்கு அலங்காரம் செய்து கொள்கிறோம்; குழந்தைக்கு ஆடை யணிகள் புனைகிறோம். இறைவனிடத்தில் அன்பு பூண்டு அகம் குழைந்து உருகும் அன்பர்கள் தம் அன்பைப் பல வழிகளில் காட்டுகிறார்கள். இறைவனுடைய உருவத் திருமேனியைப் பூமாலை புனைந்து வழிபடுகிறார்கள். அவனுடைய பெருமையைப் பலவாறு எடுத்துப் பாராட்டிப் புகழ்கிறார்கள்.

இறைவன் தேவர்களுக்கெல்லாம் தலைவன்; மகாதேவன். அவனுடைய பெருமையை நாம் உணர்ந்து அன்பு செய்யும் போது அவன் திறத்தில் இன்னும் என்ன என்ன செய்யலாம் என்று தோன்றிக்கொண்டே இருக்கும். 'அவன் நடக்கு மிடத்தையெல்லாம் மணி பதித்துத் தளம் போடலாமா? அவன் திருவடித் துகளை உடம்பெல்லாம் பூசிக்கொள்ளலாமா?' என்றெல்லாம் எண்ணங்கள் உதயமாகும். அந்த அன்புக்கு இதுதான் செய்யலாம் என்ற வரையறை இல்லை.

''அவன் கோயிலை அலகிட்டுப் பெருக்கவேண்டும்; மெழுகவேண்டும்'' என்று தோன்றும்; தோன்றுவது மாத்திரம் அன்று; அப்படியே செய்வார்கள் பக்தாகள். இறைவனுடைய திருத்தொண்டுகள் பலவற்றில் அவன் கோயிலைத் தூயதாக வைத்துக்கொள்ளவதும் ஒன்று.

மகாத்மா காந்தியடிகள் வீதிகளைச் சுத்தம் செய்து காட்டினார். தேசத் தோண்டர்கள் தோட்டி வேலையையும் செய்யவேண்டும் என்று செயலிலும் செய்தார். தேச பக்திக்கு இத்தகைய செயல்களெல்லாம் அடையாளங்கள் என்பதைக் காந்தியடிகள் செய்து காட்டினார். தெய்வபக்திக்கு அலகிடுதல், மெழுகிடுதல் என்பனவும் அடையாளங்கள் என்பதைத் திருத் தொண்டர்கள் செய்து காட்டியிருக்கிறார்கள். அப்பர் சுவாமிகள் உழவாரத்தொண்டு செய்தார். ஆனந்தத்தால் அன்பர்கள் கூத்தாடுவார்கள். இத்தகைய செயல்கள் இறைவன் அருள் பெற்று மேன்மேலும் ஆக்கம் பெறுவோருக்குரிய அடை யாளங்கள்.

புத்தேளிர்

*கோமான்! நின் திருக்கோயில் தூகேன்*
*மெழுகேன் கூத்தாடேன்.*

★

**மா**ணிக்கவாசகர் ஆகும் ஆற்றில் நிகழும் செயல்கள் இவை என்று சொல்லவில்லை; ஆயினும், 'ஆகுமாற்றிலே சென்று இன்ன செயல்களை நான் செய்யவில்லையே; சாகுமாறே விரைகிறேனே!' என்று இரங்குகிறார். அவரே இரங்கும்போது மற்றவர்கள் போகும்போக்கு என்ன?

ஆமாறுஉன் திருவடிக்கே
அகங்குழையேன்; அன்புஉருகேன்;
பூமாலை புனைந்துஏத்தேன்;
புகழ்ந்துரையேன்; புத்தேளிர்
கோமான் நின் திருக்கோயில்
தூகேன் மெழுகேன் கூத்தாடேன்;
சாமாறே விரைகின்றேன்.
சதுராலே சார்வானே.

*(தேவர்களின் தலைவனே! ஆக்கம்பெறும் வண்ணம் உன்னுடைய திருவடியை எண்ணி அதன் பொருட்டு என் உள்ளம் குழைந்திலேன்; அன்பினால் நான் உருகவில்லை; மலர் மாலைகளைக் கொண்டு உன்னை அலங்காரம் செய்து துதிக்கவில்லை; புகழ்ந்து பாராட்டவில்லை; நின் திருக்கோயிலைப் பெருக்கவில்லை; மெழுகவில்லை; ஆனந்தக்கூத்து ஆடவில்லை; என் அறிவுத் திறத்தால் சென்று சேரும்பொருட்டு மரண வழியிலே வேகமாகச் செல்லுகிறேன்.*

*புனைந்துஅணிந்து ஏத்தேன்-துதித்திலேன். புத்தேளிர்-தேவர். தூகேன்-பெருக்கவில்லை. சதுர்-சதுரப்பாடு; சாமர்த்தியம். சார்வான்-சாரும் பொருட்டு.)*



# அமுதப் பெருங்கடல்

சில புலவர்கள் தம்முடைய புலமைத்திறத்தினாலும் பலவகை அறிவினாலும் அவதானம் செய்வார்கள். ஒரே சமயத்தில் பல காரியங்களைக் கவனிப்பது அவதானம். அஷ்டாவதானம், தசாவதானம், சதாவதானம், சகஸ்ராவதானம் என்று செய்வார்கள். அவதானம் செய்பவர்கள் பலவகையான கேள்விகளுக்குத் தொடர்ச்சியாகப் பதில் சொல்வது வழக்கம்.

புலமை உடையவர்களும் அறிவிலே சிறந்தவர்களுந்தான் இதைச் செய்ய முடியும் என்று நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஒருவகையில் அறிவோடு பொருந்திய அவதானங்களை அவர்களே செய்ய முடியும் என்பது உண்மை. ஆனால் ஒவ்வொரு மனிதனும் பலவகையான அவதானங்களைச் செய்துகொண்டுதான் இருக்கிறான். ஏதேனும் ஒன்றை நினைப்பானானால் அந்த அளவிலே நிற்பதில்லை. பலவகையான நினைப்புக்கள் அவனுடைய உள்ளத்திலே தோன்றுகின்றன. ஒரு கணத்துக்குள் ஆயிரம் சிந்தனைகள் வந்து தோன்றுகின்றன. அப்படியே, பேசும் பொழுதும் ஏதோ ஒன்றைப் பற்றியே நாம் பேசுவதில்லை. அதுவும் ஊரில் திண்ணையிலே இருந்து கொண்டு வம்பு பேசுபவர்களுக்கு ஐந்து நிமிஷத்துக்குள் எத்தனையோ செய்திகள் வந்துவிடும். ஒன்றோடு ஒன்று தொடர்புடைய செய்திதான் பேச்சில் வரும் என்ற வரையறை இல்லை. பலவகையான செய்திகள் கதம்பமாக வந்துகொண்டே இருக்கும். கண்ணினால் பார்க்கிற பார்வையும் அத்தகையது தான். குறித்த ஒன்றையே பார்ப்பது என்பது பெரும் பாலோருக்கு இல்லை. கண்ணை ஓடவிட்டுப் பல பல பொருள்களைப் பார்த்து அதனாலே மகிழ்ச்சியோ துக்கமோ வேறு சிந்தனையோ எழும்படியாகச் செய்வதுதான் பெரும்

பாலான மனிதர்களுக்கு இயல்பு. கண் பார்த்துக் கொண்டே இருக்கும்; மனம் எதையாவது சிந்திக்கும்; வாய் ஏதாவது பேசும்; கை ஏதாவது செய்யும். சிந்தனைக்கும் பார்வைக்கும் பேசுகிற பேச்சுக்கும் சம்பந்தமே இருப்பதில்லை.

இப்படி அகம் வேறு, புறம்வேறு இருப்புதனால்தான் மனிதன் எப்பொழுதும் பிறவிக்குள்ளே ஆழ்கிறான். மனமும் வாக்கும் செயலும் ஒன்றாகவே இருந்தால் ஆத்ம சக்தி விருத்தியாகும். இறைவனுடைய திருவருள் அங்கே வந்து பதியும். இந்த நிலை நமக்கு இருப்பதில்லை. நம்முடைய எண்ணங்களெல்லாம் சிதறுகின்றன; வார்த்தைகளெல்லாம் சிதறுகின்றன; பார்வைகளெல்லாம் சிதறுகின்றன. ஐந்து இந்திரியங்களாலே நுகருகின்ற அநுபவங்களிலும் ஒருமைப் பாடு இல்லை. நம்முடைய வாழ்நாளே சிதறிப் போகின்றது. நூறு வருஷம் ஒருவன் வாழ்ந்தாலும் உருப்படியாகச் சில காரியங்களைச் செய்தோம் என்று சொல்ல முடியாதபடியே பல மக்கள் வாழ்கிறார்கள். ஒன்றை நன்றாகச் சிந்தித்து, அதைப் பற்றிப் பின்பும் பல காலம் சிந்தித்து, மீட்டும் மீட்டும் சிந்தித்து, அதைப்பற்றியே பலமுறை பேசி, அதனுடைய தொடர்பான காரியங்களையே உடம்பினாலே செய்து நிறை வேற்றுவதற்குத் தனி ஆற்றல் வேண்டும்.

எல்லாவற்றுக்கும் மூலமாக இருப்பது மனந்தான். மனம் என்னும் மூலக் கருவியை இயக்கிவிட்டால் அதனிடத்திலிருந்து தோன்றுகின்ற எல்லா எண்ணங்களும் செயலாகவும் பார்வை யாகவும் மோந்து பார்க்கும் செயலாகவும் வேறு விதமாகவும் விளைகின்றன; ஒவ்வோர் இந்திரியத்தின் வாயிலாகவும் உருவம் பெறுகின்றன.

மனத்தில் ஒருமைப்பாடு இருந்தால் மற்றவற்றிலும் ஒருமைப்பாடு இருக்கும். மனமோ ஒரு கணத்தில் பல்லாயிரங் கோடி சிந்தனைகளைச் செய்துகொண்டே இருக்கிறது. மனத்தைக் காற்றினுடைய தத்துவத்திலிருந்து பிறந்ததாகச் சொல்லுகிறது தத்துவ நூல். காற்று எப்பொழுதும் சலித்துக் கொண்டே இருக்கும்; ஓரிடத்திலே நில்லாது. மனம் என்பதே சலனத்தின் உருவம் என்று சொல்லிவிடலாம். மனம் என்று ஒரு தனிப்பொருள் இந்திரியங்களினாலே தெரிந்துகொள்ள முடியாத

தாக இருக்கிறது. இயங்கும்பொழுதுதான் அது மனம் என்ற பெயரைப் பெறுகிறது.

மனத்தை ஒருமைப்படுத்தி, அதனிடம் தோன்றுகின்ற எண்ணங்களை ஒருமைப்படுத்தி, அவற்றின் விளைவாகத் தோன்றுகின்ற பார்வை முதலியவற்றையும் வாக்கையும் ஒருமைப்படுத்திவிட்டால் அப்பொழுது நாம் செய்கின்ற செயல்களுக்கெல்லாம் பன்மடங்கு பயன் உண்டாகும். இறைவ னுடைய திருவருள் இருந்தால் அன்றி இந்நிலை நமக்கு வருவது இல்லை.

இறைவனுடைய திருவருள் எப்படிக் கிடைக்கும்? இறைவனுடைய திருவருளுக்காக ஏங்கி நின்று அன்பு செய்து பல வகையிலே சாதனை செய்தால் அப்பொழுது அவனுடைய திருவருள் கிடைக்கும். கிடைத்த பிறகு நம்முடைய உள்ளமும் உரையும் ஏனைய இந்திரியங்களும் அடைகின்ற மாற்றம் மிக மிக அற்புதமானது. முன்னாலே எப்படி இருந்தோமோ அதற்கு நேர்மாறாக இருப்போம். அப்பொழுதெல்லாம் இருந்தவாறு என்னே என்று வியப்பு உண்டாகும்.

இறைவனுடைய திருவருளினாலே சிதறுண்ட மனத்தை ஒருமை நெறியில் இயக்கி, சிதறுண்ட வாக்கை ஒருமையாக இயக்கி, சிதறுண்ட பார்வை முதலியவற்றை ஒரே திக்கில் செலுத்தி வாழ்ந்தவர்கள் நம்முடைய நாட்டில் பலர் இருந்தார்கள். அவர்களுக்குள் மணிவாசகப் பெருமான் ஒருவர். அவர் இறைவனுடைய திருவளைப் பெறுவதற்காக ஏங்கி நின்றார்; பெற்றார். அந்தப் பெருமானுடைய திருவருளினாலே தாம் பெற்ற இன்பத்தைப் பற்றிப் பெருமிதத்தோடு பேசுகிறார். பல சமயங்களில் தாம் அந்த நிலையினின்றும் சற்றுத் தாழ்ந்ததுபோல அவருக்குத் தோற்றம் உண்டானால், ''ஐயோ, நான் இன்னும் உயர்ந்த நிலைக்கு வரவில்லையே!'' என்று ஏங்குவார். அவருடைய அன்பின் முறுகலான நிலையே அந்த ஏக்கம் உண்டாவதற்குக் காரணம். வேறு சில இடங்களில் இறைவனுடைய திருவருளினாலே தாம் பெற்ற இன்பத்தால் உண்டான பெருமிதத்தோடு களிக்கூத்தாடுவார். எம் பெருமா னுடைய திருவருளை நினைந்து நன்றியறிவோடு பாடுவார்.

★

மாணிக்கவாசகர் மந்திரி பதவியிலே இருந்தவர். ஒரு குடும்பத்தை நிர்வாகம் செய்வதே மிகவும் அருமையாக இருக்கின்ற மனித வாழ்வில் ஓர் அரசனுக்கு வேண்டிய ஆலோசனை சொல்லுகின்ற மந்திரியாக இருந்தால் அவர் எத்தனையோ செய்திகளை நினைக்கவேண்டும்; யோசனை சொல்லவேண்டும்; சூழ்ச்சியிலே வல்லவராக இருக்க வேண்டும். மந்திரிகளுக்கே சூழ்வார் என்ற ஒரு பெயர் உண்டு. எப்பொழுதும் மேல்வரும் காரியத்தைச் சிந்தித்து, முன்னாலே நிகழ்ந்தவற்றின் அநுபவங்களையெல்லாம் சிந்தித்து, இனி எப்படி நடக்க வேண்டும் என்று வரையறை செய்து, அரசனுக்கு அறிவுரை கூற வேண்டியவர்கள் அமைச்சர்கள். நல்ல அமைச்சராக இருந்த மணிவாசகப் பெருமான் தமக்காகச் சிந்தனை செய்ததோடு நில்லாமல் அரசனுக்காவும் சிந்தனை செய்தார். பாண்டிய நாட்டுக்காக பாண்டியன் அரசாட்சிக்காகச் சிந்தனை செய்தார். இறைவனுடைய திருவருளுக்கு ஆளான பிறகு, முன்பு சிதறுண்ட சிந்தனைகளெல்லாம் நின்றன. ஆனால் சிந்தனை முற்றும் அழியவில்லை. இந்த உடம்பு இருக்கும் மட்டும் சிந்தனை ஓயாது; பேச்சு ஓயாது; பார்வை நில்லாது. சிந்தனையைச் சிந்தனையின் போக்கிலேயே விட்டு விட்டால் பிறந்ததனால் ஆகும் பயன் நமக்குக் கிடைக்காது. இறைவனுடைய திருவருள் அந்தச் சிந்தனையை மாற்றியது; வாக்கை மாற்றியது; பார்வையை மாற்றியது. இதைச் சொல்ல வருகிறார் மாணிக்கவாசகர்.

அவர் சிந்தனை இயங்கிக்கொண்டேதான் இருந்தது. இயங்குகின்ற சிந்தனையைத் திடீரென்று நிறுத்திவிட்டால் இந்த உடம்பே மாய்ந்துவிடும். ஆகவே அந்தச் சிந்தனையை நிறுத்தவில்லை. குழந்தை ஏதாவது ஒரு காரியத்தைச் செய்து கொண்டிருந்தால் அதைச் செய்யாதே என்று சொன்னால் அது மேலும் செய்துகொண்டுதான் இருக்கும். அப்படி இன்றி அந்தக் குழந்தைக்கு வேறு வேலை கொடுத்து விட்டால் அது முன்னாலே செய்த வேலையைச் செய்யாது. இறைவன் அப்படிச் செய்தானாம்.

மணிவாசகர் தாமாக இறைவனை நினைக்கவில்லையாம். அவனுடைய திருவருள்தான் அவனை நினைக்கப் பண்ணிய தாம். ''அவனருளாலே அவன் தாள் வணங்கி'' என்று வேறு

ஓரிடத்தில் அவர் சொல்லியிருக்கிறார். அவருடைய சிந்தனையை ஆண்டவன் தனக்கென்று ஆக்கிக் கொண்டானாம். இறைவ னுடைய திருவருளிலே ஈடு பட்டவர்களுக்கு அவர்கள் நினைப்பது, பேசுவது ஆகிய எல்லாமே அவன் மயமாக இருக் கும். எப்படியாவது அவனோடு தொடர்புடைய பொருளையே சிந்திப்பதும் அதைப்பற்றியே பேசுவதுமாக இருப்பார்கள். ''என்னுடைய சிந்தனைகளை யெல்லாம் உனக்காகவே ஆக்கிக்கொண்டாய்'' என்று சொல்லுகிறார் மாணிக்கவாசகர்.

*சிந்தனை நின் தனக்கு ஆக்கி.*

★

'பல வகையான பார்வையில் ஈடுபட்ட என்னுடைய இரண்டு கண்களையும் உன்னுடைய பாத இணைகளில் பொருத்திவிட்டாய். பல பல சபலங்களைக் கொண்ட நாய் போன்ற என்னுடைய கண்களை உன்னுடைய திருப்பாத மலருக்கு ஆக்கினாய். அதுவரைக்கும் அந்தப் பாதத்தைப் பற்றி நான் அறியேன். இப்பொழுது அந்தப் பாதங்கள் பார்ப்பதற்கு அழகாக, நன்மையுடையனவாக, தண்மையுடையனவாக, தாமரை மலர்களைப்போல இருக்கின்றன என்று தெரிந்து கொண்டேன்.'

*..........நாயினேன்றன்*
*கண் இணை நின் திருப்பாதப் போதுக்கு ஆக்கி.*

★

மனிதர்களில் பதவியினாலும், ஆற்றலாலும், பொருள் கல்வி முதலியவற்றிலும் மேல் கீழ் என்ற வேறுப்பாடு இருந்து கொண்டுதான் இருக்கிறது. ஆற்றலில் மேலானவர்கள், கீழானவர்கள் என்று சொல்லுகிறோம். எத்தனைதான் சமரசம் பேசினாலும் செல்வத்தினாலும் பதவியினாலும் உயர்ந்தவர்கள் உயர்ந்த நிலையில் இருக்கிறார்கள்; அவர்கள் தம்மை உயர்ந்தவர்கள் என்று நினைப்பது பெரிதல்ல; அவை தமக்கு இல்லாதவர்கள் தம்மைத் தாழ்ந்தவர்கள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதனால் யார் உயர்ந்தவர்களோ அவர் களுக்கு வந்தனை புரிந்து வாழ்வதே மனித சமுதாயத்துக்கு இயல்பாகப் போய்விட்டது. எவ்வளவுதான் வாதமிட்டாலும்,

அபேதவாதம் பேசினாலும் அவர்களில் பதவியினாலே உயர்ந்த வர்கள் இருக்கிறார்கள். தலைவர்கள் சிலர் இருக்கிறார்கள். அவர்களுக்கு ஏனையோர்கள் வந்தனை செய்கிறார்கள்.

அப்படி யார் யாருக்கோ வந்தனை செய்துவந்த மணி வாசகருடைய நிலை இப்பொழுது மாறிவிட்டது. எல்லா வந்தனைகளையும் இறைவனுக்கே ஆக்கினார். இதை அவர் எப்படிச் சொல்கிறார் என்பது கவனிப்பதற்குரியது.

''உன்னுடைய திருவடித் தாமரை மலர்களுக்கே என்னுடைய வணக்கங்கள் ஆகும்படி நீ செய்தருளினாய்'' என்கிறார்.

வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி.

*

முதலிலே சிந்தனையைத் திருப்பினான் இறைவன். சிந்தனையிலிருந்து கண் பார்வை மாறியது. கருத்தை அகக் கண் என்று சொல்வது வழக்கம்.அகக் கண் மாறியவுடன் புறக்கண் மாறியது. பார்வை மாறினவுடன் பணிய வேண்டும் என்ற நினைவு வந்தது. அதனாலே உடம்பு வளைந்துகொடுத்தது. தலை வணங்கியது. உள்ளம் உணர்ச்சி வசப்பட்டபொழுது முதலிலே பேச்சு வராது. செயல்தான் வரும். செயலுக்கு முன்னாலே மெய்ப்பாடு வரும். அந்தற்குப் பின்பு உணர்ச்சி அமைதி பெற்று விட்டால் அதற்கு ஓர் உருவம் உண்டாகும். வாக்கிலிருந்து உணர்ச்சி மயமான வார்த்தைகள் வெளிவரும்.

எம்பெருமானைத் தம்முடைய உள்ளத்திலே ஏற்றுக் கொண்ட மணிவாசகப்பெருமான் கண்ணாலே அவனுடைய திருவடி மலர்களைக் கண்டார். அந்த மலர்களையே கும்பிட்டார். வணங்கினார். கீழ் விழுந்து நமஸ்காரஞ்செய்தார். உள்ளத்தில் உள்ள பக்தி உணர்ச்சி பொங்கியது. அதனுடைய விளைவாக வாக்கு எழுந்தது. அந்த வாக்கை ஆண்டவனுக்கே அர்ப்பணமாக்கினார். இறைவன் அவருடைய வாக்கை யெல்லாம் தனக்காகவே ஆக்கிக் கொண்டான்.

அதற்கு முன்னாலே வந்த வாக்கெல்லாம் உலக வாழ்க்கை யோடு ஒட்டியனவாக இருந்தன. பல காலம் பிறந்து பிறந்து

வாழ்ந்ததனால் படிந்த வாசனை அது. இறைவனுடைய திருவருளுக்குள் ஒன்றிய பிறகு, சிந்தனை அவனுக்கென்று ஆன பிறகு, கண்ணிணை அவன் திருப்பாதப் போதுக்கு ஆக்கிய பிறகு, வந்தனையும் அத்திருவடி மலருக்கென்று ஆனபிறகு, வாக்கு இறைவனுடைய புகழைப் பேசும் வாக்காகிவிட்டது. அப்பொழுது வருகிற வார்த்தைகளெல்லாம் மணி வார்த்தை என்று சொல்கிறார். அவர் மாணிக்கம் போன்ற வார்த்தை களைப் பேசினவர். அதனால்தான் மாணிக்கவாசகர் என்ற திருநாமம் உண்டாயிற்று. இறைவனே மணிவாசகன் என்று திருநாமம் அளித்ததாகச் சொல்லுவார்கள். எப்படியோ இறைவ னுடைய திருவுள்ளக் கிடக்கையாக இருந்தாலும் சரி, மணி வாசகப் பெருமானுடைய உள்ளக்கிடக்கையாக இருந்தாலும் சரி, திருவாசகத்தைப் படிக்கிறவர்களுடைய கிடக்கையாக இருந்தாலும் சரி, அந்த வார்த்தைகளெல்லாம் இறைவனுடைய வார்த்தைகள்; ஆகையினால் வெறுங்கல்லைப்போல் இல்லாமல் மாணிக்கக் கல்லைப் போலாயின.

வாக்கு உன் மணிவார்த்தைக்கு ஆக்கி.

'தாம் பாடுகிற பாட்டை மணி வார்த்தை என்று தாமே சொல்லிக்கொள்ளலாமா? அது அகங்காரத்தின் விளைவு அல்லவா?' என்ற ஐயம் இங்கே எழலாம். "ஆண்டவனே. நீ எனக்குத் திருவருள் தந்து என்னுடைய வாக்கையெல்லாம் உனக்காக ஆக்கிக்கொண்டாய். உன்னைப்பற்றிய வார்த்தை களாதலின், மணிவார்த்தைகளாயின" என்ற பொருளோடு அவர் சொல்லுகிறார். அவர் பாடுவதனாலே அது மணிவார்த்தை ஆகவில்லை. அப்படி இருந்தால் அது முன்பும் அப்படி இருக்கவேண்டுமே. இறைவனைப்பற்றிப் பாடுவதனாலே அது மணிவாக்கு ஆயிற்று. வேறோர் இடத்திலும்,

மாசில் மணியின் வார்த்தை

என்று பாடுகிறார்.

இறைவன் மாசில்லாத மணி போன்றவன். அந்த மணியைப் பற்றிய வார்த்தையும் மணியைப்போல இருக்கிறது. மாணிக்கம் பிறிதொன்றனாலே ஒளிவிடாமல் இயற்கையாகவே

ஒளி தருவது. அழுக்குச் சாராமல், பக்கத்தில் உள்ள பொருள் களையெல்லாம் காட்டுவதோடு பிறருடைய உள்ளத்தை ஈர்க்கும் ஆற்றல் வாய்ந்ததாக மணி இருக்கும். இந்த மணி வார்த்தையும் ஒளிவிடுவது. உள்ளத்துள் உண்டான ஒளி வாக்கிலே வருகிறது.

> ''உள்ளத்துள் உண்மைஒளி உண்டாயின் வாக்கினிலே
> ஒளிஉண் டாகும்''

என்று புதுமைக் கவி பாரதியார் பாடியிருக்கிறார். சிந்தனை இறைவனுடைய நினைவாக ஆகிவிட்டால் உள்ளத்தில் உள்ள இருள் நீங்கிவிடுகிறது. அக இருள் நீங்குவது மாத்திரம் அன்று; அங்கே ஆண்டவனுடைய ஞான ஒளி விளங்குகிறது. அந்த ஒளி உள்ளத்துள்ளே விளங்கும் பொழுது புறத்திலே தோன்றுகின்ற அத்தனையும் அந்த ஒளியின் விளைவாகத்தானே இருக்கும்?

ஒரு வீட்டுக்குள்ளே விளக்கை வைத்துவிட்டு வெளியில் நின்று பார்க்கிறவர்களுக்கு ஜன்னல் வழியாக வீசுகின்ற ஒளி வேறாகவா இருக்கும்? உள்ளே உள்ள ஒளியின் நிறம் சிவப்பாக இருந்தால் சிவப்பாகவும், பச்சையாக இருந்தால் பச்சையாகவும் வெளியிலே தோற்றும். அதுகாறும் மாயாமலத்தில் அமுந்தி வாழ்கின்ற வாழ்க்கையிலே என்ன என்ன சிந்தனைகள் தோன்றுமோ அவற்றையே உள்ளம் கொண்டிருந்தது. அதனாலே எழுந்த எழுச்சிகள் எல்லாம் அந்த மயல் அளற்றி லிருந்து வருகின்ற காரியங்களாகவே அமைந்தன. அப்பொழுது எழுந்த வாக்கிலே ஒளி இல்லை; இருள் இருந்தது. இருள் தருமா ஞால வாழ்வில் இருள் தரும் சிந்தனைகளால் சிதறிய மனமுடைய வனாக வாழ்ந்த மனிதனுக்கு வாக்கிலே இருள் தான் உண்டாகும். செயல்களிலே மேலும் மேலும் இருளே பொங்கிவரும். ஆனால் சிந்தனை ஆண்டவனுடைய திருவருள் நினைவினாலே உயர்ந்துவிடுமானால் அங்கே ஒளி தோன்று கின்றது. மூலக்கருவாகிய சிந்தனையிலே ஒளி தோன்றி விட்டால் அதன் விளைவாக விளைகின்ற செயல்களிலே ஒளிதான் நிலவும்; அந்த ஒளியின் கதிரே வார்த்தை.

★

சிந்தனையைச் சொல்லி, கண்ணைச் சொல்லி, உடம்பைச் சொல்லி, வாழ்க்கையையும் சொன்னார். அவை மாத்திரம் போதுமா? இவைகளெல்லாம் நாம் செய்கின்ற செயல்கள். நாம் செயலைச் செய்கிறோம். இன்ப துன்பங்களை நுகர்கிறோம். ஒரு மனிதன் வேலை செய்யும் கர்த்தாவாக இருக்கிறான்; போகத்தை அநுபவிக்கின்ற போக்தாவாகவும் இருக்கிறான். இந்த இரண்டு வகையான நிலையும் மனிதனிடம் இருக்கின்றன. இறைவனுடைய திருவருளுக்குள்ளே புதைந்து விட்டால் நம்முடைய செயல்களும் நம்முடைய அனுபவங் களும் மாறிவிடுகின்றன. செயல்களெல்லாம் இறைவனுடைய சார்பிலே செல்லுகின்றன. அப்படியே நாம் அனுபவிக்கின்ற போகங்களெல்லாம் இறைவனோடு தொடர்புடையன ஆகின்றன. சிந்தனையும் பார்வையும் வந்தனையும் வாக்கும் ஆகிய செயல்களெல்லாம் இறைவனுடைய திருவருளினாலே மாற்றம் அடைந்து எல்லாம் அவனைச் சார்ந்தே விளங்கின, மணிவாசகப் பெருமானுக்கு. அவருக்குக் கிடைத்த அனுபவம் எப்படி இருந்தது?

*ஐம்புலன்கள் ஆர வந்தனை.*

அதுகாறும் புலன்களெல்லாம் வெவ்வேறு வகையான அனுபவங்களைக் கொண்டிருந்தன. ஆனால் இப்பொழுது ஆண்டவனுடைய திருவருள் பெற்ற பிறகு அவருடைய ஐம்புலன்களும் இறைவன் மயமாக ஆகிவிட்டன. முன்பு அனுபவித்த அநுபவங்களெல்லாம் வெவ்வேறாக இருந்தது மாத்திரமல்ல; புலனுகர்ச்சியால் நிறைவு ஏற்படவில்லை; அந்த அநுபவங்கள் பூரணமாக இல்லை. இப்பொழுது ஐம்புலன் களும் ஆர்ந்திருந்தன; அநுபவ நிறைவினாலே இன்புற்றன. அந்த இன்ப அநுபவம் உலகத்தோடு பொருந்திய அநுபவம் அன்று.

*ஐம்புலன்கள் ஆர*
*வந்தனை ஆட்கொண்டு உள்ளே*
*புகுந்த விச்சை*
*மாலமுதப் பெருங்கடலே!*

ஐம்புலன்களும் நிறைவு பெற வேண்டுமான ால் எல்லை யில்லாத ஓர் அநுபவம் கிடைத்தால்தான் நிறைவு பெறும்.

உலகிலுள்ள பொருள்கள் யாவும் காலத்துக்கும் இடத்துக்கும் அகப்பட்டன. கால எல்லை, இட எல்லை ஆகிய இரண்டும் உயிர்களுக்கு உண்டு; உயிர் வாழ்க்கைக்கு உண்டு. கால தேச பரிச்சின்னம் என்று அவற்றைச் சொல்வார்கள். இந்த இரண்டுக்குள்ளே அகப்பட்ட அநுபவம் எல்லைக்குள்ளேதான் நின்றுவிடும். மனிதனுக்கு நூறு வயசு என்று எல்லை இருந்தாலும், எல்லா மக்களும் நூறு வயசு வாழ்ந்திருந்து அநுபவத்தைப் பெறுவதில்லை. அப்படிப் பெற்றாலுங்கூட நூறு என்ற எல்லையிலே நின்று விடுகிறது. எல்லையில்லாத அனுபவம் பெறவேண்டுமானால் எல்லையில்லாத பொரு ளோடு சார்ந்திருந்தாலன்றி அந்த அனுபவம் வராது.

ஒரு கிண்ணத்தில் தண்ணீர் வாங்கி ஒருவன் உண்ணுகிறான். அந்தக் கிண்ண நீரை உண்ட பிறகு அவனுக்குத் தண்ணீர் இல்லையாகின்றது.இப்படியே தண்ணீரை நிரப்பிய எந்தப் பாத்திரமாக இருந்தாலும் அதற்கு எல்லை உண்டு. பெரு வயிறன் ஒருவன் எத்தனை தண்ணீரைக் குடித்தாலும் நிறைவு பெறாத தாகம் கொண்டவனாக இருக்கிறான். அப்பொழுது உலகிலுள்ள எல்லைக்கு அகப்பட்ட நீர்நிலை எதனாலும் அவனுடைய வேட்கையைப் போக்க முடியாது. அதைத் தீர்க்க வேண்டுமானால் கடல் ஒன்றினால் தான் முடியும். காரணம்; அவனுடைய தாகம் எல்லையற்றது; கடலும் எல்லையற்றது.

ஐம்பொறிகளின் நுகர்ச்சிகளால் பூரணத் திருப்தி அடையாமல் நாம் வாழ்கிறோம். ஐந்து புலன்களினாலே உண்டான அநுபவங்களுக்கு நிறைவு ஏற்பட்டுவிட்டால் மனிதனுக்கு ஆசை அற்றுவிடும். அந்த அனுபவம் குறைவாக இருப்பதனால் ஆசை மேலும் வளர்கிறது. அது வளரவளரப் பிறவி மேலும் தொடர்கிறது. ஐம்புலன்களாலும் முற்ற முற்ற அனுபவிக்கின்ற ஆற்றல் யாருக்காவது இருக்குமானால் அப்பொழுது அவனுக்கு ஞானம் வந்து விடும். ஆனால் யாருக்கும் புல அநுபவங்களிலே திருப்தி உண்டாவதே இல்லை. முழு நிறைவு உண்டாக வேண்டுமானால் அது உலகத்தோடு பொருந்திய அநுபவமாக இராமல் இறைவனோடு பொருந்திய அநுபவமாக இருக்க வேண்டும். ஆண்டவன் புலன்களுக்கு அப்பாற்பட்டவன், அவன் இந்த உலகத்துக்கு அப்பாற்பட்டவன் என்று சொல்லுகிறோம். ஆனால் ஆண்டவ

னுடைய திருவருள் பெற்றவர்களுக்கு அவன் ஐம்புலன்களும் நிரம்பும்படியான அநுபவத்தைத் தருகிறான். ஐம்புலன்களின் நிறைவு அப்புலன்களை அமைதி பெறச் செய்துவிடும். வயிறு நிரம்ப உண்ட குழந்தை தூங்கிவிடுவதுபோல அவை அப்போது அடங்கிவிடும்.

ஐம்புலன்கள் ஆர
வந்தனை ஆட்கொண்டு உள்ளே
புகுந்த விச்சை
மாலமுதப் பெருங் கடலே!

ஒரு பெரிய கடல் உள்ளத்துக்குள்ளே புகுந்து விட்டது. உயிர்க்குள்ளே புகுந்துவிட்டது. உயிரையெல்லாம் நிரப்பி விட்டது. உயிரையே நிரப்பும்பொழுது உயிருக்கு அடங்கிய புலன்களை நிரப்பாதா? ஐம்புலன்களும் நிரம்பிவிட்டன. அப்படி இறைவன் வந்தான். மணிவாசகரை ஆட்கொண்டான்.

உலகில் இன்ப அநுபவப் பொருள் தருவார் என்று யார் யாரை நாம் நினைக்கிறோமோ அவர்களாலே நமக்கு முழு நிறைவாக அநுபவத்தைக் கொடுக்கும் ஆற்றல் இருப்பதில்லை. இறைவன் அருள் ஒன்றுதான் நிறைந்த அனுபவத்தைக் கொடுக்கும். இது பெரிய வித்தை.

கடல் என்றால் நமக்கு உப்புக் கடல்தான் நினைவுக்கு வருகிறது. பாற்கடல், தேன் கடல், தயிர்க் கடல் என்று வெவ்வேறு கடல்கள் உண்டென்று புராணங்கள் சொல்கின்றன. பாற்கடலில் அமுதம் பிறந்தது. ஆனால் அது முழுமையும் அமுதமாக இருக்கவில்லை. அக்கடலில் பால்தான் இருந்தது. பாலைக் கடைந்து மிக வருந்தித் தேவர்களெல்லாம் ஏதோ ஓர் அளவு அமுதத்தைப் பெற்றார்கள். அந்த அமுதத்தை எதற் கெடுத்தாலும் உவமையாக எடுத்துச் சொல்கிறோம். இறைவனோ அமுதம் நிரம்பின பெருங்கடலாக இருக்கிறான். அது பெரிய கடலானாலும் அடியவர்களுடைய சிறிய உயிருக்குள் புகுகின்றது.

உள்ளே புகுந்த விச்சை மாலமுதப் பெருங் கடலே!

தம் அனுபவ நிலையை நினைத்துப் பேசுகிறார், மணிவாசகர். அந்த அனுபவம் எல்லையற்றதாக இருப்பதால் கடல் என்றார். மிகமிக இன்பமாக இருக்கிறது; ஆதலின் அமுதக்கடல் என்றார். அதன் பெருமை எண்ண எண்ணத் தொலையாததாக இருத்தலின் மாலமுதப் பெருங்கடல் என்றார். அந்தக் கடலைத் தம் அளவில் நின்று அனுபவிக்கும் பொருளாக்கியது அருமையிலும் அரிய செயலாதலின் விச்சை என்று சொன்னார்.

வந்தனை ஆட்கொண்டு உள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே!

★

கொஞ்சம் அந்த அனுபவ நிலையை மறந்து பார்க்கிறார். 'ஆகா! ஆண்டவனுடைய பெருமை என்னே! அவன் மலைபோல் இருக்கிறான் அல்லவா? இந்த நாயேனிடத்திலே அருள்பூண்டு வந்து ஆண்டு கொண்டானே' என்று நினைக்கிற பொழுது இறைவனுடைய பெருமை தெரிகிறது. பெருமை நிரம்பிய பொருளுக்கு மலையைச் சொல்வது வழக்கம். மலைக்கு முன்னாலே மனிதன் நின்றால் தன்னுடைய சிறுமையை நன்றாகத் தெரிந்துகொள்ளுகிறான். உலகிலுள்ள மரம் மட்டை எல்லாப் பொருள்களும் மலைக்கு முன்னாலே மிகமிகச் சிறியவை ஆகின்றன. கண்டாருக்கு மயக்கத்தை, பிரமிப்பை உண்டாக்கக் கூடிய பொருள் மலை. அளக்கலாகா அளவும் துளக்கலாகா நிலையும் உடையது மலை. இறைவன் நமக்கு இன்ப அனுபவம் அருளினான், எளியனாக வந்தான் என்ற நினைவை ஒரு சிறிது மறந்து நினைத்துப் பார்க்கும் போது, 'ஆகா! பெரிய மலை போன்றவன் அல்லவா? எவ்வளவு பெரியவன்!' என்று தோன்றுகிறது. அமுதப் பெருங் கடலே என்று சொன்ன வாக்கினால் உடனே மலையே என்று சொல்கிறார்.

மால்அமுதப் பெருங்கடலே! மலையே!

★

'இவ்வளவு பெரிய மலை போன்ற நீ நாயினேனுக்கு அநுபவத்தைத் தந்து எனக்குள்ளே புகுந்து உன்னையே தந்துவிட்டாயே. இந்த இன்ப அநுபவம் வேறு, நீ வேறு என்பது அல்ல. நீ கொடுத்த கொடைக்கு எல்லையே இல்லை. உன்னைக்காட்டிலும் சிறந்த பொருள் இல்லை. உன்னையே கொடுத்துவிட்டாய்' என்கிறார்.

நின்னைத் தந்தனை

பின்பு, இறைவனுடைய அழகான திருமேனியை நினைக்கிறார். அவன் பாதப்போதுக்கு ஆக்கின கண்ணை உடையவர் அல்லவா? அவன் பாதம் மாத்திரமா போது? அவனுடைய இரண்டு பாதத் தாமரைகளைப் பற்றிக் கொண்ட பிறகு கொஞ்சம் ஏறிட்டு நோக்கினால், அவனுடைய திருமேனி முழுதும் எத்தனை தாமரை! அவனுடைய கை தாமரை; அவனுடைய நாபிக்கமலம் தாமரை; அவனுடைய முழங்கால் தாமரை; அவனுடைய கைகள் தாமரை; அவனுடைய முகம் தாமரை; கண்கள் தாமரை; வாய் தாமரை இதழ். இப்படி அவனுடைய திருமேனி முழுவதும் பல பல தாமரைகள் பூத்த தாமரைக் காடுபோல இருந்ததாம். எம்பெருமானுடைய திருமேனி செம்மேனி.

''சிவனெனும்நாமம் தனக்கே உடையசெம் மேனியம்மான்''

என்று அப்பர் சுவாமிகள் சொல்கிறார். சில சில இடங்களிலே தாமரை இருந்து மற்ற இடங்களிலே கருமை நிறம் இருந்தால் சில தாமரைகள்தாம் இருப்பன போல் தோன்றும். சிவபெருமானுடைய திருமேனியில் பல இடங்களில் தாமரை போன்ற உறுப்புகள் தோன்ற, மற்ற இடங்கள் செக்கச் செவேலென்று இருப்பதனால் எங்கும் மலர் நிரம்பின தாமரைக் காடு பூத்தது போல இருக்கிறதாம். ஆகையினால்,

செந்தாமரைக்காடு அனைய மேனித் தனிச்சுடரே!

என்று சொல்கிறார் மணிவாசகர். தாமரையிலே வண்ணம் இருக்கும். ஆனால் ஒளி மிகுதியாக இராது. இறைவனுடைய திருமேனியில் அழகு, தண்மை, வண்ணம் எல்லாம் தாமரையைப்போல இருப்பதோடு அது சுடரையும் வீசுகிறது.

அவன் அவருடைய உள்ளத்திலே புகுந்தமையினால் அவருடைய வாக்கிலே ஒளி உண்டாயிற்று; செயலிலே ஒளி உண்டாயிற்று. அவன் பெருஞ்சுடராக விளங்குகிறான். அந்தச் சுடரின் தன்மை உலகத்தில் வேறு எந்தச் சுடருக்கும் இல்லை. அது தனியான சுடர். அதில் உண்டாகின்ற ஒளி தனியான ஒளி. அந்த ஒளியினாலே உண்டாகின்ற இன்ப அநுபவம் சிறப்புடையது.

தாமரைக்காடு அனைய மேனித் தனிச்சுடரே!



ஒரு பொருளினுடைய பெருமையை மாத்திரம் சொல்லிக்கொண்டிருந்தால் மனத்தில் ஓரளவுதான் பதியும். ஆனால் அதன் அருகிலே சிறுமையையும் வைத்துச் சொன்னால் அழகாக இருக்கும்; நன்றாகப் பதியும். பெரிய பொருளுக்குப் பக்கத்தில் சிறிய பொருளை வைத்துப் பார்த்தால்தான் பெரிய பொருளின் பெருமை நன்றாக விட்டு விளங்கும். பெரிய திரு உருவத்தைப் படம் பிடிப்பவர்களெல்லாம் அதை அப்படியே பிடிக்கமாட்டார்கள். சிரவண வெண்களும் என்ற இடத்தில் கோமடேசுவரருடைய பெரிய சிலை இருக்கிறது. அதைப் படம் பிடிப்பவர்கள் அதனுடைய பரிமாணத்தைக் காட்டுவதற்காக அருகிலே ஓர் ஆளை நிறுத்தி எடுப்பார்கள். ஆளையும் அந்தத் திரு உருவத்தையும் ஒருங்கே பார்க்கும் பொழுதுதான் அந்த உருவத்தின் பரிமாணம் தெரியும். அதை மாத்திரம் காட்டினால் ஏதோ படத்தில் பெரிதாகத் தோன்றுகிறது என்று நினைப் பார்கள். அதனுடைய அளவு தெளிவாகத் தெரியாது. பக்கத்தில் ஒப்பு நோக்கிப் பார்த்தால்தான் அந்த பெருமை நன்றாகத் தெரிகிறது.

மாலமுதப் பெருங்கடல் தம்முடைய உள்ளத்திலே புகுந்தது என்று மணிவாசகர் பாடினார். செந்தாமரைக் காடு அனைய மேனித் தனிச் சுடர் என்று அதைச் சொன்னார். அதோடு நில்லாமல் தம்மையும் நினைத்துப் பார்க்கிறார். 'நான் இத்தனை கோடி கோடியாக வியாபாரத்தில் குவித்திருக் கிறேனே. நான் வைத்த முதல் என்ன?' என்று ஒருவன் பார்ப்பது போல இருக்கிறது, அந்த நினைவு. ஒன்றும் இல்லாமல் ஏதோ பிச்சைக் காசு வாங்கி ஒரு வியாபாரம் ஒருவன் செய்தான். கோடி கோடியாகச் சம்பாதித்துவிட்டான்.

சம்பாதித்த பிறகு அவன் நினைத்துப் பார்க்கிறான். 'நான் என்ன வைத்திருந்தேன்? ஒரு வெள்ளிக் காசுகூட இல்லையே!' என்று நினைந்து பெருமிதம் அடைகிறான். மாணிக்கவாசகர் அத்தகைய நிலையில் நின்று பேசுகிறார்.

'நான் இம்மைக்கு வேண்டியதையும் செய்யவில்லை; மறுமைக்கு வேண்டியதையும் செய்யவில்லை. ஒன்று இங்காவது சுகமாக வாழவேண்டும்; அல்லது இங்கே உடம்பை வருத்தி விரதமிருந்து தவம் புரிந்து மறுமையிலாவது நன்கு வாழவேண்டும். இரண்டு வகையான முயற்சியும் என்னிடம் இல்லை. நான் இரண்டும் இல்லாதவன்; இரண்டும் கெட்டான். எனக்குத் துணையும் இல்லை. என்னுடைய கரசரணாதி அவயவங்களும் மனமும் நான் மேலும் துன்பப் பிறவியை அடைவதற்குரிய செயல்களையே செய்தன. நின் அருளானந் தத்தைப் பெறுவதற்கு அவை துணையாக நிற்கவில்லை. நான் துணையின்றித் தனியே நின்றேன். நற்செயலுமின்றித் துணையும் இன்றி இரண்டும் கெட்டானாகத் தனியாக வாழும் எனக்கு நீ உன்னைத் தந்தாயே!' என்று அவர் மனமுருகிப் பாடுகிறார்.

இரண்டு இலித் தனியனேற்கே.

'இரண்டு கெட்டான்' என்று உலக வழக்கில் ஒரு தொடர் வழங்குகிறது. தக்கது இன்னது, தகாதது இன்னது என்று அறியும் அறிவில்லாதவன் என்று சொல்வது உண்டு. இம்மை வாழ்வும், மறுமை வாழ்வும் கெட்டவன் என்று சொல்வதே சிறப்பாகும்.

மாணிக்கவாசகரே தம்மை இரண்டும் கெட்டான் என்று சொல்லிக்கொள்ளும்போது மற்றவர்கள் எம்மாத்திரம்!

*சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன்*
*கண் இணைநின் திருப்பாதப் போதுக்கு ஆக்கி*
*வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி வாக்குஉன்*
*மணிவார்த்தைக்கு ஆக்கிஐம் புலன்கள் ஆர*
*வந்தனை ஆட்கொண்டுஉள்ளே புகுந்த விச்சை*
*மால் அமுதப் பெருங்கடலே! மலையே! நின்னைத்*
*தந்தனை, செந் தாமரைக்காடு அனைய மேனித்*
*தனிச்சுடரே! இரண்டுமிலித் தனிய னேற்கே.*

*(என் எண்ணங்களையெல்லாம் உனக்காக ஆக்கிக்கொண்டு, நாய் போன்ற என் இரண்டு கண்களையும் உன் அழகிய பாதமாகிய மலர்களுக்கு அர்ப்பணம் செய்யச் செய்து, என் வணக்கங்களையும் அந்த அடி மலர்க்கே ஆகும்படி செய்து, என்வாக்கை உன் மாணிக்கம் போன்ற ஒளி நிரம்பிய வார்த்தைகளுக்கு ஆக்கி, என் ஐம்புலன்களும் நிரம்பும்படியாக வந்து அடியேனை அடிமையாகக் கொண்டு என் உள்ளே புகுந்த வித்தையில் வல்லமிகப் பெரிய அமுதக் கடலே! மலை போன்றவனே! செந்தாமரைக் காடுபோல உள்ள திருமேனியையுடைய ஒப்பற்ற சுடரே! இரண்டுங்கெட்டானும் துணை இல்லாதவனுமாகிய இந்தத் தனியவனுக்கு நீ உன்னையே தந்துவிட்டாய்.*

*சிந்தனை-எண்ணம். இணை-இரண்டு. போது-மலர். வந்தனை-வணக்கம். ஆர-நிரம்பும்படி. விச்சை-வித்தை. மால்-பெருமை. தனி-ஒப்பற்ற. இரண்டு மிலியாகிய தனியனேனே. இரண்டும் இல் இத்தனியனேன் என்றும் பிரித்துப் பொருள் செய்யலாம். தனியனேன்-துணையின்றித் தனியாக நிற்கும் அடியேன்.)*



# அருமையும் எளிமையும்

ஒரு பெண்ணுக்குக் கல்யாணமான கதையைச் சொல்கிறார் ஒரு மனிதர்; அழகும் அறிவும் பொருளும் மிகப் பெற்ற ஒரு மாப்பிள்ளை கிடைத்ததைச் சொல்கிறார்.

''அந்த மாப்பிள்ளை கிடைத்தது பெண்ணினுடைய அதிருஷ்டந்தான். ஊரில் எத்தனையோ பேர் பெண்களை வைத்துக்கொண்டு மாப்பிள்ளை எங்கே எங்கே என்று தேடிக் கொண்டிருக்கிறார்கள். பணத்தாலோ பதவியாலோ குறைவின்றி மிக உயர்ந்த நிலையில் உள்ளவர்கள் அவர்கள். அவர்கள் இந்த மாப்பிள்ளையைப் பற்றிக் கேட்டிருக்க மாட்டார்கள். ஒருகால் கேட்டிருந்தாலும் பார்த்திருக்க மாட்டார்கள்.''

''என்ன அப்படி உயர்ந்த மாப்பிள்ளை?''

''உயர்ந்தவன் என்று ஒருமுறை சொன்னால் போதாது; ஆயிரந்தடவை சொல்ல வேண்டும். அந்தப் பிள்ளை, யாருடைய கண்ணிலும் தென்படுவதில்லை. பார்க்க வருகிறவர்களுக் கெல்லாம் போக்குக் காட்டி மறைந்து விடுவான்.''

''பின் இவளுக்கு எப்படிக் கிடைத்தான்?''

''அதுதானே சொல்ல வருகிறேன்? அவர்களால் அணுகுவதற்கரிய அவன் இவளைத் தானே வந்து கேட்டு மணந்து கொண்டான். உலகமே அப்போது பிரமித்தது, அவனை எளிதில் காணவே முடியாமல் இருக்கும்போது, அவனே வலிய வந்து மனம் புரிந்தான் என்பதை மற்றவர்கள் எப்படி நம்புவார்கள்?''

''இப்போது அவர்கள் எங்கே இருக்கிறார்கள்.''

''அவரவர்கள் இடத்தில் இருக்கிறார்கள். இன்னும் பெண்ணை அழைத்துக்கொண்டு போகவில்லை. கழுத்தில்

தாலி கட்டியதோடு சரி. எப்போது அழைத்துக்கொண்டு போவானோ தெரிய வில்லை.''

''பெண் பாவம் பொல்லாது. அவள் எப்படித் துடிக்கிறாளோ?''

''அவர் எப்போது வருவார், நான் அவரை எப்போது பார்ப்பேன் என்று ஏங்கியபடியே கிடக்கிறாள் அவள்.''

★

அந்தப் பெண்மணியின் நிலையில் இருந்தார் மணிவாசகர். இறைவன் அவரை ஆட்கொண்டான். அப்பால் அவனுடன் ஒன்றுபடவேண்டும் என்ற ஆசை மீதூர்ந்தது அவருக்கு. அவனைப் பிரிந்து உலக வாழ்வில் ஈடுபடுவதை அவர் விரும்பவில்லை. அவனுடைய அருமைப் பாட்டையும், தம்மைக் கருணையினால் ஆட்கொண்ட எளிமையையும் நினைத்துப் பார்க்கிறார். அவ்வாறு எளிவந்து ஆட்கொண்ட பெருமான் இப்போது அரியனாக இருக்கிறானே என்று எண்ணி ஏங்குகிறார்.

அவன் அரியவன். மிக உயர்ந்த நிலையில் உள்ளவர் களாகிய வானவர்களும் அறியாத கோலம் படைத்தவன். அத்தகையவன் கண் காண வந்து ஆட்கொண்டான். திருத்தில்லையில் யாவரும் காணக் கூத்தனாக விளங்குகிறான். ஆயினும் அவனை எளிதில் அணுக முடியாது. அத்தகையவன் வந்து ஆட்கொண்டான் என்றால் எத்தனை சிறப்பு!

*மேலை வானவரும் அறியாததோர்*
*கோலமே! எனை ஆட்கொண்ட கூத்தனே!*

★

ஒரு பொருள் கிடைக்குமட்டும் அது அரியதாகவும் மதிப்புடையதாகவும் இருக்கும்; அது கிடைத்துவிட்டால் அதன்பால் உள்ள ஆர்வமும் மதிப்பும் குறைந்துவிடும். இது உலகியற் பொருளுக்குரிய நிலை. ஆனால் இறைவன் வந்து ஆட்கொண்டான். அதன் பின்னும் அவன் அரியவனாகவும், பெரியவனாகவுமே தோற்றுகிறான். பெரியவர்களோடு பழகுகிற வர்களுக்கு நாளுக்கு நாள் அவர்களுடைய பண்பு தெரிந்து

கொண்டே இருக்கும்; அவர்களிடம் மதிப்பு உயரும். இழி குணத்தோர்களிடம் பழகப் பழக வெறுப்பு உண்டாகும். இறைவன் ஆட்கொண்டான். அதனால் அவன் எளிய பொருளாகிவிடவில்லை; சிறிய பொருளாகிவிடவில்லை. நாம் அறிந்த பொருள்களுக்குள் நம்மால் எல்லை காண முடியாதவை இரண்டு. ஒன்று இடம்; மற்றொன்று காலம். இடத்தின் எல்லையை எந்த விஞ்ஞானியும் கண்டுபிடிக்கவில்லை. காலம் என்று தொடங்கியது, என்று முடிகிறது என்பதை நினைத்தாலே தலை சுற்றும்.

இறைவன் எல்லையற்ற பொருள்; பெரிய பொருள். எல்லையற்ற பொருளாக உள்ள இரண்டை நாம் அறிவோம். அந்தப் பொருள்களைப்போல அவன் இருக்கிறான் என்று சொல்லலாம். அவை இரண்டுமாகவும் இருக்கிறான். இடத்திற் பெரியது நாம் வாழும் பூமி; இதனையும் உள்ளடக்கிய விசும்பு அதைவிடப் பெரியது. இரண்டும் இறைவனுடைய கோலந்தான்.

ஞாலமே! விசும்பே!

ஞாலமும் விசும்புமாகியவற்றுக்குள்ளே எல்லாம் அடங்கிவிடும். ஞாலம் பிருதுவி தத்துவம்; விசும்பு என்றது ஆகாசம். ஐம்பெரும் பூதங்களில் முதலில் தோற்றுவது விசும்பு; இறுதியில் தோற்றுவது ஞாலம். இவை ஒடுங்கும்போது முதலில் ஞாலமும் இறுதியில் விசும்பும் அடங்கும். பிருதுவி இல்லாத ஒரு காலத்தில் விசும்பு இருக்கும். விசும்பு இல்லாத காலத்தில் எந்தப் பூதமும் இருப்பதில்லை. இறைவனுக்குரிய அட்ட மூர்த்தங்களில் ஐம்பெரும் பூதங்களும் சேரும். முதலையும் முடிவையும் சொன்னதனால் இடையில் உள்ள வற்றையும் சேர்த்து ஐம்பெரும் பூதங்களாக நிற்பவனே என்று கொள்ளலாம். இந்தப் பூதங்களுக்குத் தோற்றம் உண்டு; ஒடுக்கம் உண்டு. இவை வந்து போகின்ற காலம் என்னும் தத்துவம் இன்னும் பெரியது. அந்தக் காலமாகவும் இறைவன் இருக்கிறான்.

இவை வந்து போம், காலமே!

★

'தேவர்களும் அறிய வொண்ணாத கோலமாக இருப்பவன் என்னை ஆட்கொண்டான். அப்படி ஆட்கொண்ட போது எனக்கு எளியவனாக இருந்தான். மீண்டும் அரிய வனாகவே நிற்கிறான். அவனைக் காணாமல் தவிக்கிறேன்' என்று எண்ணுகிறார் மணிவாசகர்; முறையிடுகிறார்.

மேலை வானவ ரும்அறி யாததோர்
கோல மே!எனை ஆட்கொண்ட கூத்தனே!
ஞாலமே! விசும் பே!இவை வந்துபோம்
கால மே!உனை என்றுகொல் காண்பதே?

*(மேலிடத்தில் உள்ள தேவர்களும் அறியாத ஒரு கோலமே! எனக்கு எளியனாக வந்து என்னை ஆளாகக் கொண்ட கூத்தப் பிரானே! ஞாலமாகவும் விசும்பாகவும் இருப்பவனே! இந்தப் பூதங்களெல்லாம் தோன்றி ஒடுங்க நின்ற காலமே! உன்னை அடியேன் மீட்டும் காண்பது எந்த நாளோ?*

*மேலை: ஐ, சாரியை. கோலம்-உருவம். ஞாலம்-பூமி. விசும்பு-ஆகாயம்.)*



# இனி என் செய்வது!

இறைவனிடம் இடையறாத அன்பர்கள் “அவர்கள் எப்போதும் இறைவனையே நினைந்து வாழ்கிறார்கள். இறைவனைப் பற்றி யார் பேசினாலும் அவர்களுடைய கண் களில் நீர் துளும்பும். அவர்கள் உள்ளம் எவ்வளவு மெல்லியது! எவ்வளவு நெகிழ்ச்சியை உடையது! இறைவனுடைய புகழை நினைக்கும்பொழுதெல்லாம் கனலிலே பட்ட மெழுகைப்போல அவர்களுடைய உள்ளம் கரைகிறது.

எத்தனை பிறவி எடுத்தாலும் உலக இன்பத்தில் ஈடுபடுபவர்களுடைய மனம் அப்படி இருப்பதில்லை. படலம் படலமாகப் பற்றும் ஆசையும் கோபமும் பிற தீய குணங்களும் செறிந்து செறிந்து மனம் பாறையாகிப் போய்விடுகிறது. அது நாளாக ஆக இறுகுகிறதே ஒழிய நெகிழ்வதில்லை. ஆனால் இறைவனிடம் அன்பு ஏற்பட்டுவிட்டால் பெரிய ஆச்சரியம் நிகழ்கிறது. அந்தக் கருங்கல் நெகிழ்கிறது; அழல் சேர்ந்த மெழுகுபோல நெகிழ்கிறது.

மனம் நெகிழ்வதை எப்படி அறிவது? ஒருவருடைய துன்பத்தைக் கண்டால் இரக்கம் உண்டாகும். அவர்களுடைய பேச்சில் ஒரு குறைவு தோன்றும். செயலில் மென்மையும் பணிவும் அமையும். அவர்கள் அன்பினால் குழைந்து நெகிழ் வதை அவர்களுடைய உடம்பு, வாக்கு, உள்ளம் எல்லாமே காட்டும்.

மனிதர் கூட்டத்தில் இப்படி இறைவனிடம் அன்பான மனம் கொண்டு அழல் சேர்ந்த மெழுகுபோல இருக்கிறவர் களை மற்றவர்கள் பார்க்கிறார்கள்; பழகுகிறார்கள். ஆனால் அவர்களுடைய அன்பு நிலையை உணர்ந்து கொள்வ தில்லை. ஒருகால் அது அவர்கள் உள்ளத்தில் எப்போதாவது உறைத்தாலும், மறுகணத்திலே விலகிய பாசி மறுபடியும் மூடிக்கொள்வதுபோல, பழைய கடுமையே வந்துவிடுகிறது.

நாமாக உருகாவிட்டாலும் பிறர் உருகுவதைக் கண்டாவது உருகலாம். எவ்வளவுதான் கல்மனம் படைத்தவராக இருந்தாலும் ஒரு வீட்டில் யாராவது இறந்ததற்கு அழுதால், அங்கே செல்லும்போது தம்மையும் அறியாமல் கண்ணில் நீர் வருகிறது. சூழ்நிலையின் வசப்பட்டுச் செயல் செய்வது மனிதனுக்கு உரிய குணம்.

ஆனால், அன்பர்களின் நெகிழ்ச்சியைக் கண்டு நெகிழாதவர்கள் இருக்கிறார்கள். பக்திச் சூழ்நிலை அவர்களுக்கு உறைப்பதில்லை. இரும்புப் பொடியிலே கட்டையை வைத்தால் அப்பொடி அதில் ஒட்டுமா? ஆயிரம் ஆண்டுகள் நீரிலே கிடந்தாலும் இரும்புக்குள் தண்மை ஏறுமா? அப்படியே கல் நெஞ்சர்களுக்குப் பக்தர்களின் அருகில் வாழ்ந்தும் அவர்கள் உள்ளம் நெகிழ்வதில்லை. அது மாத்திரமா? சில சமயங்களில் அந்த அன்பர்களின் செயலைக் கண்டு பரிகாசம்கூடச் செய்கிறார்கள்.

அன்பினால் அகம் கரையும் அன்பர்கள் எப்போதும் இறைவனுடைய திருவடியே இலக்காக இருப்பார்கள். மற்றவர்கள் மின்னுகிற பொன்னைக் கண்டு களித்து அதன் பின்னே சென்று அலைவார்கள். ஆனால் அடியார்களோ மின்னுதலையுடைய பொற்கழலை அணிந்திருக்கும் இறைவன் திருவடியைக் காண்பதே தொழிலாக, அதுவே விளையாட்டாக, அதுவே இன்ப நுகர்ச்சியாக இருப்பார்கள்; அவனடியையே தொழுது வாழ்வார்கள்.

நின்பால் அன்பாம் மனமாய்
அழல்சேர்ந்த
மெழுகே அன்னார் மின்ஆர்
பொன் ஆர் கழல்கண்டு
தொழுதே.



இப்படித் தொழுகிறவர்களுக்கு இறைவன் தரிசனம் தந்தான். அவர்கள் அவனுடைய உபதேசம் பெற்றார்கள். அவனை விட்டுப் பிரிய மனம் இல்லாமல் அவனையே தொடர்ந்தார்கள்; தம்முடைய வீட்டையும் சுற்றத்தாரையும்

விட்டுப் புறப்பட்டுவிட்டார்கள். அவர்களைப் பார்த்துக் கொண்டே இருந்தார்கள் மற்றவர்கள். ஏதோ பைத்தியக்காரக் கூட்டம் போகிறதென்றே நினைத்தார்கள். ஆனால் அவர்கள் போன பிறகு நின்றிருந்த இவர்கள் கண்ட சுகம் என்ன? தினமும் ஒன்றுபோனால் ஒன்றாகக் கவலை வந்து அவர்களைப பிய்த்துத் தின்கிறது. ''இந்த வாழ்வு இவ்வளவுதானா?'' என்று அவர்களிற் சிலருக்கு உணர்வு பிறக்கிறது. 'முன்பே இறை வனைத் தொடர்ந்து போனார்களே, அவர்களோடு சென்றிருக் கலாமே; அவர்களைப் பரிகாசம் செய்தோமே. இங்கே இருந்து ஏதோ சாதிக்கப் போவதாக அல்லவா நினைத்துக் கொண்டிருந்தோம்? இப்போது அவர்கள் போனதை எண்ணி வருந்துகிறோமே' என்று நைகிறார்கள்.

இனிமேல் அந்த வழி தெரியுமா? தாமாக முயன்று போகத்தான் முடியும்? பல பிறவிகளில் இறைவனிடம் அன்பு செய்து அவனைத் தரிசனம் செய்த பெரியவர்கள் அவர்கள். அவர்கள் அடியைப் பின்பற்றிச் சென்றிருந்தால் தாம் பெற்ற இன்பத்தைப் பிறரும் பெறட்டுமென்ற கருணையினால் அவர்கள் அழைத்துக்கொண்டு சென்றிருப்பார்கள். அவர்கள் போன வழியை அறிவதே அருமை; அறிந்து அந்த வழி செல்வது அதைவிட அருமை; சென்றாலும் பல தடைகள் இடையிலே உண்டாகும்; அவற்றை வென்று மேற்போவது மிக அருமை.

பல அன்பர்கள் பிறந்த நிலத்தில் இவர்கள் பிறந்தார்கள். அவர்கள் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தார்கள். அவர்கள் நாளாக ஆக அன்பிலே பழுத்தார்கள். இவர்கள் நெகிழாமல் நின்றார் கள். நெற்பயிர் வளர்ந்து கதிர் முற்றிச் சாய்வதுபோல அவர்கள் பயன் பெற்றார்கள். இவர்கள் நெருஞ்சிப் பூ முள்ளாகப் பழுத்ததுபோலத் தமக்கு ஒரு பயனுமின்றி வளர்ந்து பிறருக்குத் துன்பம் விளைத்தார்கள்.

இப்போது அந்த அன்பர்கள் போனபிறகு, ''நாம் ஏமாந்து போய்விட்டோமே!'' என்று எண்ணி அழுகிறார்கள்.

அழுதேன், நின்பால் அன்பாம் மனமாய்
அழல்சேர்ந்த

மெழுகே அன்னார் மின்னார் பொன்னார்
கழல்கண்டு
தொழுதே உன்னைத்தொடர்ந்தா ரோடும்
தொடராதே.

இப்படி அவர்களுள் ஒருவர் கூறுவதுபோல மணிவாசகர் சொல்கிறார்.

★

இப்போது நினைத்துப் பார்த்தால், 'நாம் ஏன் பிறந்தோம்?' என்று தோன்றுகிறது. காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ளாமல் இருந்துவிட்டார்கள் அவர்கள். 'பயன் பெற வேண்டிய காலத்தில் பிறந்தும், பயன் பெற்றவர்களைப் பார்த்தும், அறிவு பெறாமல் வீணாகப் பொழுதைப் பழுதாக்கிவிட்டாயே!' என்று அவர்கள் உள்ளம் அவர்களைக் குத்திக் காட்டுகிறது.

பழுதே பிறந்தேன்.

இனிமேல் இறைவனை அடைந்து பணிந்து பேறு பெறலாம் என்றால் அதற்கு என்ன உரிமை இருக்கிறது? ''இறைவா! அவர்கள் நின்கழல் கண்டு தொழுதார்கள். அவர்களை ஆட்கொள்ள நீ எழுந்தருளினாய்; அதுபோல் இப்போதும் வரவேண்டும்'' என்று சொல்லலாமா? நேரத்தில் செல்லாமல் வண்டியைத் தவறவிட்ட புத்திசாலிகளல்லவா இவர்கள்? இவர்களுக்கே குற்றம் தெரிகிறது. 'கடவுளிடத்திலே சென்று என்ன உரிமை கொண்டாடிப் பணிவது? கூட்டத்தோடு கூட்டமாக 'எளிதிலே போகும் வாய்ப்புக் கிடைத்தும் கைவிட்ட பாவியர் என்று சொல்லிப் புகுவதா?' என்று எண்ணும்போது இவர்களுக்கு மேலும் மேலும் அழுகைதான் வருகிறது. அன்று இறைவனை நினைத்து நெஞ்சு நெகிழ்ந்து அழ வகையில்லாதவர்கள், இன்று, ''உன்னைத் தொடர்ந்தாரோடும் தொடர்ந்து வரவில்லையே!'' என்று அழுகிறார்கள். ''பழுதே பிறந்தேன்'' என்று அரற்றுகிறார்கள். ''என் கொண்டு உன்னைப் பணிகேனே!'' என்று புலம்புகிறார்கள்.

அவருள் ஒருவராகத் தம்மை வைத்துப் பாடுகிறார் மாணிக்கவாசகர்.

அழுதேன் நின்பால் அன்பாம் மனமாய்
அழல்சேர்ந்த
மெழுகே அன்னார் மின்ஆர் பொன்னார்
கழல்கண்டு
தொழுதே உன்னைத் தொடர்ந்தா ரோடும்
தொடராதே
பழுதே பிறந்தேன்; என்கொண்டு
உன்னைப் பணிகேனே?

[இறைவனே! நின்னிடம் அன்பாக உள்ள மனம் உடையவராகி, நெருப்பைச் சேர்ந்த மெழுகைப்போல உருகுகிறவர்களாகி, மின்னுதலை யுடைய பொன்னாலான கழலை அணிந்த நின் திருவடியைத் தரிசித்துத் தொழுது நின்னைத் தொடர்ந்தவர்களோடும் தொடர்ந்து செல்லாமல் (நான் தனித்திருந்து) அழுதேன்; குற்றம் உண்டாகவே பிறந்தேன். (இனிமேல் உன்னைப் பணிந்து உய்யலாம் என்றால்) என்ன உரிமையைக் கொண்டு உன்னைப் பணிவேன்?

அழல் - நெருப்பு. மின் ஆர் - மின்னுதல் பொருந்திய. பொன்னார் கழல்; அன்மொழித் தொகை. அன்னாராகித் தொடர்ந்தா ரோடும் தொடராதே அழுதேன். பழுதே - குற்றம் உண்டாகும் வண்ணம்; வீணாக எனலும் ஆம். என் கொண்டு - என்ன உரிமையை மேற்கொண்டு; என்ன தகுதியைக் கொண்டு என்பதும் பொருந்தும். பணிகேன் - வணங்குவேன்.]

மாணிக்க வாசகர் இறைவன் குருநாதனாக வர, அவனிடம் உபதேசம் பெற்ற பிறகு, அவன் உடன்வந்த பக்தர்கணங்களோடு மறைய, அதனை ஆற்றாமல் பாடியது இது என்றும் சொல்வது உண்டு.

இறை நெறியில் வாழ்நாளை அமைத்துக் கொண்டு விருப்பு வெறுப்பின்றி இன்னலாலும் சுகத்தாலும் வேறுபாடடையாமல் வாழும் அன்பர்கள் இந்த உலகிலேயே இறைவனுடைய அணிமையில் இருக்கும் இன்பத்தை நுகர் கிறார்கள். அத்தகையவர்கள் எக்காலத்தும் இருக்கிறார்கள். அவர்கள் செய்வன செய்து இந்த உடலைப் போட்டுச்

சென்றபிறகு அவர்கள் புகழுடம்பு இவ்வுலகில் வாழ்கிறது. உடலத்தை நீத்த பிறகு அவர்கள் புகழ் மிகமிகப் பரவுகிறது. அவர்கள் வாழ்ந்த காலத்தில் அவர்கள் அருமையை அறியாமல் இருந்துவிட்டு அவர்கள் மறைந்த பிறகு அவர்களுடைய உண்மை நிலையை உணர்ந்து, ''ஐயோ! அப்போது அவர்கள் போனவழியில் நாமும் செல்லவில்லையே!'' என்று இரங்குபவர்கள் எத்தனையோ பேர். அவர்கள் சொல்வதற்குரிய பாட்டு இது என்று கொண்டாலும் பிழை இல்லை.

★

# ஞான நாடகம்

மணிவாசகர் இறைவனுடைய திருவருளைப் பெற்ற வகையை எண்ணி எண்ணி வியந்து உருகுவதைப் போல வேறு யாரும் உருகியது இல்லை. ஏழை ஒருவனுக்குப் பெருஞ் செல்வம் கிடைத்து போலவும், பட்டினி கிடந்தவனுக்கு உணவு கிடைத்ததுபோலவும், இறைவன அருளைப் பெற்றதனால் உண்டான இன்பத்தில் அவர் களிக்கூத்தாடுகிறார். ''என்னை ஆண்டுகொண்டது என்ன ஆச்சரியம்!'' என்று வியப் படைகிறார்.

உலகத்தில் உள்ள உயிர்க் கூட்டங்களுக்குள் மனிதன் உயர்ந்தவன். மற்றப் பிராணிகளை யெல்லாம் அவன் அடக்கி ஆள்கிறான். உயர்ந்தவர்களாக இருப்பவர்கள் தம்மினும் தாழ்ந்தவர்களுக்கு உதவி புரிந்து தம்முடைய உயர்வை நாட்டிக் கொள்வதுதான் சிறந்த முறை. அப்படியின்றி அதிகாரத்தாலும் அச்சுறுத்துவதனாலும் தம் தலைமையை நிறுவுவது இழிந்த முறை. தம்முடைய ஆற்றலாலும் பதவியாலும் உலகம் முழுவதுக்கும் நன்மை செய்கிறவர்கள் சுரர்கள்; தம்முடைய ஆற்றல் முதலியவற்றால் பிறருக்கு அச்சத்தை ஊட்டுகிறவர்கள் அசுரர்கள். குணத்தால் உயர்ந்தவர்கள் தேவர்களுக்குச் சமானம்.

'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்''

என்று வள்ளுவர் கூறினார் அல்லவா? உயர்ந்தவர்களை உயர்ந்த இடத்தில் வைத்துப் பாராட்டுவது உலக இயல்பு. வானவர்கள் தம்மினும் தாழ்ந்த மக்களுக்கும் பிறருக்கும் உபகாரம் பண்ணுகிறவர்கள். அவர்கள் உயர்ந்த இடத்தில் இருக்கிறார்கள். அவர்கள் வாழும் உலகம் பதினான்கு உலகங்களின் அடுக்கில் மேலே இருப்பது. வான நாட்டில் வாழ்கிறவர்கள் அவர்கள். அவர்களால் நமக்கு மழை கிடைக்கிறது; தீ கிடைக்கிறது;

காற்றைப் பெறுகிறோம். இப்படியிருந்தும் நாம் அவர்களைக் காண முடிவது இல்லை.

இறைவன் தேவலோகத்தையும்விட உயரத்தில் இருப்பவன். இவ்வளவு உபகாரிகளாகிய தேவர்கள் இறைவனுடைய அருளினால்தான் ஏனையவர்களுக்கு நன்மை செய்யும் நிலையில் இருக்கிறார்கள். நாம் வாழும் நாட்டில் போலீஸ் காரன் நம்மைப் பாதுகாக்கிறான்; தண்ணீரைப் பாதுகாக்கும் அதிகாரிகள் தண்ணீர் விடுகிறார்கள்; சாலையை அமைக்கும் வேலைக்காரர்கள் சாலை போடுகிறார்கள். இப்படிப் பல வகையில் தொண்டு செய்கிறவர்களுடைய செயல்களால் மக்கள் நல்வாழ்க்கையைப் பெறுகிறார்கள். போலீஸ்காரர் முதலிய வர்கள் தாமாகவே தம் வேலையைச் செய்வதில்லை. அரசாங்கத் தில் ஊதியம் பெற்று அதன் ஆணைக்கடங்கி நடக்கிறார்கள். நல்லவர்களாக இருந்தால் கரும்பு தின்னக் கூலி கிடைத்ததே என்று மகிழ்ச்சியோடு தங்கள் வேலையைச் செய்வார்கள். இல்லையானால் வாங்குகிற சம்பளத்துக்கு எவ்வளவு உழைக்க வேண்டுமோ அப்படி உழைப்பார்கள். பொல்லாதவர்களாக இருந்துவிட்டால் கிடைக்கும் சம்பளம் போதாதென்று லஞ்சம் வாங்கி, மக்களுக்கு இன்பம் விளைவிப்பதற்கு மாறாகத் துன்பம் உண்டாக்குவார்கள். தேவர்கள் தம் கடமையை உணர்ந்து இறைவன் ஆணையின் வழி நடந்து உலகுக்கு உபகாரம் செய்கிறவர்கள். அதிகாரிகள் அரசாங்கத்தை மறந்து தாமே தம் மனம் போனபடி நடந்தால் அராஜகம் உண்டாகும். அப்போது அவர்களை அரசாங்கத்தார் கடுமையாக ஒறுப் பார்கள். அப்படியே தேவர்கள் சில சமயங்களில் செருக்குற்று இறைவன் பெருமையை மறந்து விடுவார்கள். அப்போது இறைவன் அவர்களுக்குத் தண்டனை அளிப்பான். அவர் களுடைய இன்ப வாழ்வுக்கு அசுரர்களால் இன்னல்கள் உண்டாகும்படி செய்து அறிவு புகுத்துவான். இறைவனுடைய பெருமையை நன்கு உணர்ந்து எக் காலத்தும் அவனுக்கு அடிமையாக வாழவேண்டும் என்ற நினைப்பு, அவ்வளவு பெரியவர்களாகிய வான நாடர்களுக்கும் இருப்பது இல்லை. அதனால் இன்னும் இறைவனுடைய ஆற்றல் முழுவதையும் அவர்கள் அறிந்ததில்லை.

வான நாடரும் அறியொணாத நீ.

வான நாடருக்கே அறியும் ஆற்றல் இல்லையென்றால் மற்றவர்களைப்பற்றி என்ன சொல்வது! மிகமிக உயரமாக இருக்கிறவனே ஒரு மரத்தின் கனியை எட்டிப் பறிக்க இயல வில்லை; அவனினும் குறைந்த உயரம் உள்ளவன் எப்படிப் பறிக்கப் போகிறான்?

தேவர்கள் கிடக்கட்டும். கடவுளைப் பற்றிய செய்தி களைப் பெரியவர்கள் நமக்குச் சொல்கிறார்கள். தம்முடைய அநுபவத்தால் உணர்ந்தவற்றைச் சொல்கிறார்கள். ''வேதத்தின் முடிவாகிய உபநிஷத் இப்படிச் சொல்கிறது'' என்று அடிக்கடி மேற்கோள் காட்டுகிறார்கள். எந்தப் பெரியவர் இறைவனைப் பற்றிப் பேசினாலும், அவருடைய அநுபவம் மற்றவர்களி னின்றும் வேறுபட்டாலும், ஒரு விஷயத்தில் எல்லோரும் ஒன்றாகப் பேசுகிறார்கள்.

''உபநிஷத் இப்படிச் சொல்கிறது'' என்றே ஒவ்வொரு வரும் பேசுகிறார்கள். 'அவர்கள் வெவ்வேறு வகையாகச் சொல்கிறார்களே; அவர்கள் யாவரும் மேற்கோளாகக் காட்டும் உபநிடதத்தையே அணுகிக் கேட்கலாம்' என்று எண்ணி அதனை அணுகினாலோ, அது ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு விதமாகச் சொல்கிறது. எப்படி இறைவனுடைய திருவருள் பெற்றவர்கள் வேறு வேறாகத் தம் அநுபவங்களை விரித்து உரைக் கிறார்களோ, அப்படியே உபநிஷத்தின் பகுதி ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமாக இறைவனைப்பற்றி பேசுகிறது. இப்படிப் பேசிவிட்டு, ''அவன் அறியொணாதவன்'' என்றும் முறையிடு கிறது. ''இது அன்று; அது அன்று'' என்று சொல்லத் தெரிகிறதே ஒழிய, ''இதுதான்!'' என்று சுட்டிச் சொல்வதற்கு அதனாலும் முடிவதில்லை.

*''அல்லை யீதல்லை யீதென மறைகளும் அன்மைச்*
*சொல்லி னால்துதித் திளைக்கும்இச் சுந்தரம்''*

என்று பரஞ்சோதி முனிவர் சொல்கிறார்.

தேவர்களுக்குத் தெரிய அரிய பொருளாக இருக்கும் ஆண்டவன் எல்லோருக்கும் அறிவு தரும் மூல பண்டாரமாகிய மறையின் ஈறாகிய உபநிடத்தங்களுக்கும் அறிவரியவனாக இருக்கிறான். உபநிடதங்கள் அவனைப் பற்றியே பேசுகின்றன.

அவனுடைய சூழ்நிலையையெல்லாம் சொல்கின்றன. ஆனால் அவனைத் தொடர்ந்து சென்று சுட்ட இயலாமல் நின்று விடுகின்றன.

மறையில் ஈறும்முன் தொடரொணாத நீ.

★

நெட்டையாக இருக்கிறவன் மரத்தில் உள்ள கனியை எட்ட முடியாமல் நின்றாலும் குட்டையாக இருக்கிறவன் அறிவாளியாக இருந்து, மரத்தில் ஏறிப் பழத்தைப் பறிக்கலாம் அல்லவா? வான நாடருக்கு அரியவனாகிய இறைவனைத் தம்முடைய அறிவைக்கொண்டு கண்டு பிடிக்கிறவர்கள் யாரேனும் இருக்கலாமோ? அப்படியும் யாரும் இல்லை. எந்த நாட்டில் எவ்வளவு அறிவோடு இருந்தாலும், யட்சர், கின்னரர், கந்தருவர் என்று பல பல பேரோடு பல இடங்களில் இருக்கும் யாரும் அவனை அறிய முடியாது.

ஏனை நாடரும் தொடரொணாத நீ

★

இவ்வளவு உயரத்தில் யாரும் அறிய ஒண்ணாத நிலையில் இருக்கிறான் என்றால் யாருக்கு என்ன பயன்? மரத்தின் உச்சிக் கொம்பில் ஒரு பழம் பழுத்திருக்கிறது. அதை யாரும் எட்டிப் பறிக்க முடியாது. மரத்தின் மேல் ஏறியும் பறிக்க முடியாது. அப்படியானால் அந்தப் பழத்தை உண்ணுவது எப்படி? பழம் தானே கனிந்து உதிர்ந்தால் அதை உண்ணலாம். கீழே நிற்பவன் முயற்சி ஒன்றும் இல்லாமல் கனி தன் இயல்பினாலே முதிர்ச்சி பெற்று அவன் கைக்குக் கிடைக்கும் படி கீழே விழுகிறது. இறைவனும் கருணை முதிர்ச்சியினால் அடியவர்களை ஆண்டுகொள்ள இறங்கி வருகிறான்.

மாணிக்கவாசகர் தம்மை இறைவன் ஆண்டுகொண்ட பெருங்கருணையை நினைத்து வியக்கிறார். 'இறைவனுடைய அருளைப் பெறவேண்டுமானால் என்ன என்னவோ செய்ய வேண்டும் என்றல்லவா சொல்கிறார்கள்? ''புலன்களை அடக்கி, உண்ணாமல் உறங்காமல் வெப்பத்தையும் குளிரையும் பொறுத்துத் தவம் செய்யவேண்டும். குளங்களில் நீராடிக்

கோயிலை வலம்வந்து விரதம் இருந்து ஜபம்செய்து தியானம் புரிந்து அவன் அருளைப் பெறவேண்டும்'' என்று சொல் கிறார்களே! இறைவன் என்னை ஆண்டு கொண்டான். அதற்காக நான் ஒன்றும் செய்யவில்லை. என்னைப் பல வகையான இடையூறுகளுக்கு உள்ளாக்கிப் பிறகு எனக்கு அறிவை உண்டாக்கி அவன் என்னை ஆட்கொள்ளவில்லை. இனிதாக ஆண்டுகொண்டான். காய் கறிகளைக் காம்பு நீக்கித் தோல் நீக்கிச் சமைத்து உண்பதுபோல அவன் செய்யவில்லை. பழுக்காத மாங்காயானாலும் அதன்மேல் ஆசையுள்ள பையன் அப்படியே அதைக் கடித்தாற்போல இறைவன் செய்தான். அவனுடைய அடியானாகும் முறை எனக்கு இனிதாக இருந்தது. என்னை ஆட்கொண்டதனால் அவனுக்குத் தான் இன்னாமை உண்டாகியிருக்க வேண்டும். எனக்கோ இனிமையை அன்றி வேறு ஒன்றும் இல்லை. அவன் எவ்வளவு இனிமையாக ஆண்டுகொண்டான்! அதை நினைக்கும்போதே எனக்கு வியப்பு மீதூர்கிறது.' இப்படியெல்லாம் சொல்வதற்குப் பதிலாகச் சுருக்கமாக, ''ஆ ஆ! என்ன வியப்பு! என்னை எம்பெருமான் இனிதாக ஆண்டுகொண்ட விதத்தை எவ்வாறு சொல்வேன்!'' என்கிறார். ''என்னை ஆண்டு கொண்டவாறு-'' என்று ஆச்சரியத்தில் மூழ்கி வாக்கியத்தை முடிக்காமலே நிறுத்துகிறார்.

வான நாடரும் அறியொ ணாதநீ
மறையில் ஈறும்முன் தொடரொ ணாதநீ
ஏனை நாடரும் தெரியொ ணாதநீ
என்னை இன்னிதா ஆண்டு கொண்டவா!

*(வான நாடர் - தேவர். மறையில் ஈறு - வேதாந்தம்; உபநிடதங்கள். ஏனை - மற்ற. இன்னிதா - இனிதாக; செய்யுள் விகாரம்; ஓசையின் பொருட்டு இனிதா என்பது இன்னிதா என்று வந்தது. ஆண்டு கொண்டவா; ஆண்டு கொண்டவாறு என்னே என்று விரிப்பதற்குரியது.)*

★

இறைவனுடைய திருவருளால் அவனுக்கு ஆளாகிய பிறகு, சற்றே பழைய நிலையை நினைத்துப் பார்க்கிறார் மாணிக்கவாசகர். நெடுந்தூரம் கடந்து வந்தவன் எங்கெங்கே தங்கினோம் என்று எண்ணிப் பார்க்கிறது போலப் பார்க்கிறார்.

ஒன்று தெளிவாகத் தெரிகிறது. அப்போது இறைவனை உணராமல் வீணே பொழுது போக்கியதும், இப்போது அவனருளிலே கரைந்து இன்புறுவதுமாகிய இரண்டுமே இறைவன் அருளாணையின் வழியே நடந்தவை என்பதை இப்போது உணர்ந்திருக்கிறார். பழைய நிலை ஒன்று; இப்போதுள்ள நிலை ஒன்று; அந்த நிலையினின்று இந்த நிலைக்கு வந்தபோது இருந்த நிலை ஒன்று. துன்பம் நிறைந்த தென்கரையில் இருந்தார். பிறகு ஓரிடத்தில் ஏறி ஆற்றைக் கடந்தார். இப்போது இன்பம் நிறைந்த வடகரையில் நிற்கிறார். இந்த மூன்று நிலைகளையும் பற்றி இப்போது நினைத்துப் பார்க்கும்போது ஆச்சரியத்தின்மேல் ஆச்சரியமாக இருக்கிறது.

முதலில் இருந்த நிலை என்ன? அதை ஊனின் நாடகம் என்று சொல்கிறார். இந்த உடம்பு எப்படி எல்லாமோ கூத்தாடியது. அக்காலத்தில் செய்த காரியங்கள் யாவும் ஊனை வளர்க்கச் செய்தவையே. சோற்றை எடுத்து வாயில் போட்டுக் கொள்வதுதான் ஊனை வளர்க்கச் செய்யும் செயல் என்று நாம் நினைக்கிறோம். அந்தச் சோற்றைச் சமைக்க அரிசி வாங்கி வருகிறோம்; அதுவும் உடம்பை வளர்க்கச் செய்வதுதான். அரிசி வாங்குவதற்காகப் பணம் சம்பாதிக்கிறோம்; அதுவும் ஊனுக்காக ஆடும் நாடகந்தான். பணம் சம்பாதிப்பதற்காகப் பலரிடம் போய் அவர்கள் புகழைப் பாடுகிறோம்; அதுவும் ஊன் நாடகந்தான். பின்னாலே நமக்கு நிறையப் பணம் வருமென்று இப்போது பணத்தைச் செலவழிக்கிறோம்; அந்தச் செயலும் உடம்புக்காக ஆடும் கூத்துத்தான்.

> "போற்றியோ போற்றியோ என்று புதுச்செல்வம்
> தோற்றியார் கண்எல்லாம் தொண்டேபோல் - ஆற்றப்
> பயிற்றிப் பயிற்றிப் பல உரைப்ப தெல்லாம்
> வயிற்றுப் பெருமான் பொருட்டு"

என்பது ஒரு பழம்பாட்டு. இறைவன் திருவருளை நினையாமல் உலகியலிலே எத்தனைவகை முயற்சிகள் செய்தாலும் அவை யனைத்தும் இந்த உடம்புக்கு இன்பம் தரச் செய்வனவாகவே முடியும்.

உடம்புக்காகக் கூத்தாடியதையெல்லாம் இப்போது எண்ணினால் சிரிப்பாக வருகிறது; என்ன பைத்தியக்காரத்தனம்

என்று தோன்றுகிறது. இறைவன்தான் அந்த நாடகம் நடக்கும்படி செய்தான் என்ற உணர்வு இப்போது உண்டாகி விட்டது. அவன் திருவருள் ஆணை இப்படி ஆட்டுகிறது என்று அப்போதே தெரிந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்! அது தெரியாமல் ஆண்டவன் ஆட்டினான். அவனுடைய மாயையை என்னவென்று சொல்வது!

ஊனை நாடகம் ஆடுவித்தவா!

*(ஊனை - உடம்பை. ஆடுவித்தவா - ஆடும்படி செய்தவாறு என்ன ஆச்சரியம்.)*

★

**ஊ**னின் நாடகம் ஒருவிதமாக ஓயத் தொடங்கியது. உள்ளம் உருகியது. இறைவன்பால் காதல் ஏறஏற இந்த உருக்கம் மிகுதியாயிற்று. எவற்றை இன்பம் என்று எண்ணி ஓடி நாடி நின்றாரோ அவற்றை இப்போது நாடுவதில்லை. இப்போது அவற்றின் நினைவே தோன்றுவதில்லை. எப்போதும் இறைவனுடைய நினைவுதான். தம் சிறுமையை எண்ணி நெகிழ்ந்தார்; இறைவனது கருணையை எண்ணி உள்ளம் உருகினார். உடம்பு என்ற ஒன்று இருப்பதே இப்போது தோன்றவில்லை. ஊன் உருகி உள்ளொளி பெருகியது. எல்லாம் இறைவன் மயமாகக் கண்டார். அநுபவிக்கும் பொருளை எல்லாம் இறைவனாகவே உணர்ந்தார். இறைவனையே நுகர்ந்தார். முன்பு இருந்த நிலை என்ன! இப்போது இருக்கும் நிலை என்ன! என்ன வியப்பு இது!

உருகி நான்உனைப் பருக வைத்தவா!

*(பருக வைத்தவா - பருகவைத்தவாறு என்னே!)*

★

ஊன் நாடகம் ஆடியது ஒரு நிலை. பிறகு உருகி இறைவனைப் பருகும் நிலை அடுத்தது. இப்போது அப்படிப் பருகி அமைதி பெற்று நிற்கிறார். இப்போதும் அவர் பேசுகிறார், நினைக்கிறார், செயல் செய்கிறார். இவை யாவும் ஞானமணம் வீசுகின்றன. உண்மையான இன்பத்தில் அமைந் தனவாக இருக்கின்றன. இப்போது உடம்புக்குத் தலைமை போயிற்று; உள்ளத்துக்குத் தலைமை போயிற்று; உயிருக்கும்

தலைமை போயிற்று. உயிர் இத்தகையது, அதனை ஆட் கொண்ட தலைவன் இத்தகையவன் என்ற ஞானம் வந்தபிறகு, அந்தத் தெளிவிலே பிறந்த செயல்களில் நான் என்பது இல்லை; எனது என்பதும் இல்லை; ஞானத் தெளிவில் பிறக்கும் உரையும் நினைப்பும் செயல்களுமாக வாழ்க்கை அமைந்து விட்டது. அன்றும் உலகில் வாழ்ந்தார்; இன்றும் உலகில் வாழ்ந்தார். ஆனால் அன்று உலகத்தில் அவர் கரைந்து நின்றார்; இன்றோ அவருக்குள் உலகம் கரைந்துவிட்டது. அன்று அஞ்ஞானத்தால் ஊன் கூத்தாடியது; இன்று ஞானந்தான் நின்று நிலவுகிறது. அன்று நடந்தது ஊனின் நாடகம்; அல்லது அஞ்ஞான நாடகம்; இன்று நடப்பது ஞான நாடகம். ஞானம் தலைப்பட்டவுடன் உலகத்தில் இருந்த இச்சைகளெல்லாம் நைந்து ஒழிந்தன. ஊனின் நாடகத்தில் இச்சையே சூத்திரமாக இருந்தது. இன்று அது அறுந்துவிட்டது. ஞான நாடகத்தில் அதற்கு வேலை இல்லை.

இந்த ஞான நாடகம் ஆடும்படி பண்ணியதும் இறைவன் திருவருள்தான். இதற்கு முன் நிகழ்ந்தவற்றைவிட இதுதான் பெரிய ஆச்சரியம்.

ஞான நாடகம் ஆடு வித்தவா,
நைய வையகத் துடைய இச்சையே!

*(ஆடுவித்தவா - ஆடச்செய்தவாறு என்னே! வையகத்துடைய இச்சை நைய ஞான நாடகம் ஆடுவித்தவாறு என்னே!)*

'இறைவன் வானவர்க்கும் மாமறைக்கும் ஏனை யோருக்கும் காண்பதற்கு அரியன். அவன் காண்பதற்கு எளியனாக வந்து ஆண்டுகொண்டான். அதற்குரிய தகுதி இல்லாததனால் ஒறுத்துப் பணி கொள்ளாமல் இனிதாகவே ஆண்டுகொண்டான். இது ஆச்சரியம்! முதலில் உடம்பைத் தலைமையாகக் கொண்டு கூத்தாடினேன்; அப்படி ஆடச் செய்தவன் அவன். அப்படி ஆட்டினது வியப்பு! பிறகு தன்னை நினைந்து உருகச்செய்து படிப்படியாக ஆட்கொண்டு தன்னைப் பருகச்செய்வித்தான். இது அதைவிட வியப்பானது! முடிவாக எல்லா இச்சைகளும் போக நான் ஞான மயமாக நின்று செயல்புரியும் ஞானக் கூத்தனாகும்படி அவன் செய்தான். அதுதான் வியப்புக்கெல்லாம் பெருவியப்பு! என்று மாணிக்கவாசகர் பாடுகிறார்.

வான நாடரும் அறியொ ணாதநீ
மறையில் ஈறுமுன் தொடரொ ணாதநீ
ஏனை நாடரும் தெரியொ ணாதநீ
என்னை இன்னிதாய் ஆண்டு கொண்டவா!
ஊனை நாடகம் ஆடு வித்தவா!
உருகி நான்உனைப் பருக வைத்தவா!
ஞான நாடகம் ஆடு வித்தவா,
நைய வையகத் துடைய இச்சையே!

*(வானில் உள்ள தேவர்களும் அறியமுடியாத அரிய பொருளாக உள்ள நீ, வேதத்தில் ஈறாக உள்ள உபநிடதங்களும் தொடர இயலாத நீ, மற்ற எந்த இடத்தில் உள்ளவரும் அறிய ஒண்ணாத நீ, எளியேனை இனிதாக வந்து ஆண்டு கொண்டவாறு என்ன வியப்பு! நின் அருள் பெறாததற்கு முன் உடம்பைக் கூத்தாடும்படி செய்தவாறு என்னே! பிறகு உன்னை எண்ணி உருகி உன்னை இன்பப் பொருளாக அநுபவிக்க வைத்தவாறு என்னே! முடிவில் வையகத்தில் எனக்கிருந்த இச்சை அனைத்தும் மங்க ஞானக் கூத்தை ஆடும்படி செய்த வண்ணம் என்ன ஆச்சரியம்!*

*அறிய ஒணாத என்பவை அறியொணாத என வந்தன; தொகுத்தல் விகாரம்; தொடரொணாத, தெரியொணாத என்பவையும் அத்தகையனவே. ஊன் - உடம்பு. பருக - அநுபவிக்க. வையகத்துடைய - வையகத்தினது. இச்சை - ஆசை.)*



# அம்மானைப் பாட்டு

இப்பொழுது மணிவாசக நாயகியின் காதலைப் பார்க்கலாம்.

மாணிக்கவாசகப் பெருமான் எம்பெருமானிடம் அளவற்ற காதல் கொண்டவர். அவருடைய பக்தி, அழகிய காதலன் ஒருவனிடம் பருவம் வந்த மடமங்கை ஒருத்தி கொண்ட காதலைப் போன்றது. இவ்வாறு பக்தி செய்வதைச் சன்மார்க்கம் என்று சொல்லுவார்கள்.

இறைவனை வழிபடுகின்ற நெறிகள் நான்கு. அவை தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்பன. எசமானனிடம் ஊழியன் பணிவாக நின்று ஏவல் செய்து அன்புடன் கடமை ஆற்றுவதுபோல நிற்பது தாச மார்க்கம், அல்லது அடிமை நெறி. தந்தையினிடம் அன்புடைய பிள்ளை அன்பு வைப்பதுபோல அமைவது சற்புத்திர மார்க்கம், அல்லது சேய் நெறி. நட்புடைய தோழனிடம் அன்பு கொள்வது போன்றது சகமார்க்கம், அல்லது தோழமை நெறி. காதலன் காதலியிடையே உள்ள உறவு முறையைப் போல அன்பு செய்வது சன்மார்க்கம், அல்லது காதல் நெறி. மாணிக்கவாசகர் பிறப்பால் ஆடவராக இருந்தாலும் பாவனையினால் தம்மை ஆண்டவனுடைய காதலியாக்கிக் கொண்டு அன்பு செய்து சன்மார்க்க நெறியிலே நின்றவர்.

இறைவன் மாணிக்கவாசகரைத் திருப்பெருந்துறையில் ஆட்கொண்டான். அத் தலம் இப்போது ஆவுடையார் கோயில் என்று வழங்குகிறது. மணிவாசகப் பெருமான் திருவவதாரம் செய்தது திருவாதவூர். அது நல்ல தலம், அவர் பலகாலம் பாண்டியனுக்கு அமைச்சராக இருந்து வாழ்ந்த இடம் மதுரை. அது பாண்டியநாட்டுத் தலங்களுக்குள் மிகச் சிறந்தது. இறைவன் அவரை அவர் பிறந்த தலத்திலே ஆட்கொண்டி

ருக்கலாம்; அல்லது உத்தியோகம் செய்த மாபெருந் தலமாகிய மதுரையிலே ஆட்கொண்டிருக்கலாம். மதுரைக்கு அருகிலும் பல தலங்கள் உண்டு. அவ்விடங்களிலும் மாணிக்கவாசகருக்கு அருள் செய்திருக்கலாம். அவ்வாறெல்லாம் செய்யாமல் மதுரைக்கும் வாதவூருக்கும் நெடுந்தூரத்தில் இருக்கும் திருப் பெருந்துறைக்கு வரச்செய்து ஆட்கொண்டான். அப்படிச் செய்ததில் ஒரு பொருத்தம் இருக்கிறது.

ஆண்டவனுக்குப் பல திரு நாமங்கள் உண்டு. ஒவ்வொரு திருநாமமும் எம்பெருமானுடைய குணச்சிறப்பால் அமைந்தது. ஒவ்வொன்றும் ஒவ்வோர் இயல்பைச் சிறப்பாகச் சுட்டி நிற்பது. ஒவ்வொரு தலத்திலும் இறைவன் சிறப்பாக ஒரு திரு நாமம் விளங்க எழுந்தருளியிருக்கிறான். திருப்பெருந்துறையில் ஆத்மநாதன் என்ற திருநாமத்தோடு விளங்குகிறான்.

மாணிக்கவாசகர் நாயகியின் நிலையில் நின்றார். மணமாகாத கன்னிப்பெண்ணாகிய இந்த மணிவாசக நாயகியை இறைவனாகிய நாயகன் ஆட்கொண்டருள வேண்டும். ஆடவன் ஒருவன் திருமணம் செய்துகொள்ளும்போது அதற்கென்று தனியே கோலம் புனைந்து வருவான். அவன் வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறு செயல்களை ஆற்றுபவன். அவற்றிற்கு ஏற்றபடி அவ்வப்போது வெவ்வேறு கோலங்களைக் கொள்பவன். வேட்டை ஆடும் கோலத்தில் இருக்கும்போது வேட்டை ஆடுவான. ஆட்சி புரியும்போது திருமுடி தரித்துச் செங்கோல் ஏந்தியிருப்பான். மணம் புரியும்போது மணவாளக் கோலம் பூண்டு மணையில் இருப்பான். இறைவனுடைய கோலங்கள் பல. அவனுடைய பெயர் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கோலத்தை நினைப்பூட்டுகிறது. ஆத்மநாதன் என்பது மணவாளக் கோலத்தை நினைக்கச் செய்கிறது எப்படி என்று பார்க்கலாம்.

உலகில் உள்ள உயிர்களையெல்லாம் பசுக்கள் என்று சொல்வார்கள். அவற்றுக்கெல்லாம் தலைவனாகிய இறை வனைப் பசுபதி என்பர். உயிர்கள் உடம்பு பெற்று வாழ் கின்றன. அந்த உடம்பு ஆண் என்றும் பெண் என்றும் இரண்டு வகையாக அமைந்திருக்கிறது. பெண்களே ஆடும் நாடகத்தில் பெண் ஒருத்தி ஆண் வேஷம் போடுகிறாள்; மிகவும் நனறாக

நடிக்கிறாள். அவள் அணிந்திருக்கும் ஆடை ஆண் அணியும் ஆடை. குரலைக்கூட மாற்றிக் கொண்டு ஆணைப் போலவே பேசுகிறாள். ஆனாலும் அவள் ஆணாக மாறமுடியாது. பெண்ணாக நடித்தாலும் ஆணாக நடித்தாலும் யாவரும் பெண்களே. ஆண் உடை அணிந்தமையால் பெண் ஆணாகி விடமாட்டாள். அந்த நாடகம் கலையும் வரையில் இந்த உண்மை தெரியாது. மேடை நாடகத்தில் உடையினால் பெண் ஆணாகத் தோற்றுவது போலப் பிரபஞ்ச நாடகத்தில் உடம்பி னால் ஆண் என்றும் பெண் என்றும் தோற்றம் அமைகிறது. உண்மையில் உயிர்க் கூட்டம் அத்தனையும் பெண்மை உடையவர்களே. உடலால் ஆண் போலவும் பெண் போலவும் இருந்தாலும் உயிரால் பெண்களே. அனைவருக்கும் நாயகனாக இருப்பவன் ஒருவன். அவன் ஒ்ருவன்தான் ஆண் மகன்.

நாம் எல்லாம் புருஷ வேஷம் போட்டுக் கொண்டவர்கள். உண்மையில் இறைவன் ஒருவன்தான் புருஷன். அவனையே புருஷன், புருஷன் என்று வேதம் சொல்கிறது. புருஷ வேஷம் உடம்பால் தரித்துக் கொண்டு நாம் புருஷர் என்று சொல்லிக்கொண்டு நம்மாலேதான் எல்லாம் ஆகின்றன என்று சொல்கிறோம் அல்லவா? உண்மையான அரசன் ஒருவன் இருக்க, வேறு ஒருவன் அவனுடைய முடியையும் மற்ற வற்றையும் புனைந்து கொண்டு நான்தான் அரசன் என்று சொல்லிக் கொண்டிருந்தால் அவனை நல்லவன் என்று சொல்லுவோமா? அவனை அதமன் என்று சொல்வோம். அப்படி வேஷம் புனைந்து அதையே மெய்யென்று சாதிக்கும் நாம் அதமர்கள். உண்மையான புருஷனும் உத்தமனுமாக இருப்பவன் இறைவன் ஒருவனே. அதனால் அவனைப் புருஷோத்தமன் என்று சொல்லுகிறார்கள்.

பசுவாகிய பெண்ணுக்குப் பதியாகிய இறைவன் நாயகன். நாடகத்திலும், கதையிலும், 'பிராண நாயகரே!' என்ற தொடர் அதிகமாக அடிபடுகிறது. யார் பிராணனுக்கு நாயகர் என்று அறியாமல் பேசுகிறது அது. பிராணனாகிய நாயகிக்கு நாயகன் கடவுள். அவன்தான் உண்மையான பிராண நாயகன். பிராணன் அல்லது உயிருக்கு ஆத்மா என்பது ஒரு பெயர். ஆத்மா நாயகி; அதற்கு நாதன் இறைவன். தான் ஆத்மாக்களுக்கெல்லாம் நாதன் என்பதை நினைவூட்டுகிறான் திருப்பெருந்துறையில்

எழுந்தருளியிருக்கும் ஆத்மநாதப் பெருமான். பசுவாகிய நாயகிக்கு நான் பதி என்று சொல்லிக் கொண்டிருக்கிறான். அந்தத் தலம் அவனுடைய மணவாளக் கோலத்தை, பிராண நாயகியை ஆட்கொள்ளும் உரிமையை, புலப்படுத்தும் இடம். ஆதலால் அங்கே மாணிக்கவாசக நாயகிக்குக் கல்யாணம் நடைபெற்றது. இதில் எவ்வளவு பொருத்தம் இருக்கிறது!

★

திருமணம் ஆகிவிட்டது. மணிவாசக நாயகி தன் நாதனைக் கண்டுகொண்டு அவனால் ஆட்கொள்ளப் பெற்றாள். இன்னும் குடித்தனம் வைக்கவில்லை. எப்போதும் அவனையே நினைந்து கொண்டிருக்கிறாள். வேலை செய்தாலும் விளை யாடினாலும் அவன் நினைப்புத்தான்; அவன் பேச்சுத்தான். எப்படியாவது ஒரு சம்பந்தத்தைக் கொண்டு வந்து அவனைப் பற்றி பேசுவாள். புதிதாகக் கல்யாணமான பெண்களுக்கு இது இயல்புதானே?

''இன்று அம்மானை ஆடலாம்; வாருங்கள்'' என்று தன் தோழியர்களை அழைக்கிறாள் காதலி. தன் காதலனுடைய பெருமைகளைக் கண்டவர்களோடு பேச நாணமாக இருக்கும். உள்ளம் கலந்து பழகுகிற தோழிகளோடு விரித்து விரித்துச் சொல்லாம்.

அம்மானை விளையாட்டு நடைபெறுகிறது. மூன்று அம்மானைக் காய்களை வைத்துக் கொண்டு மேலே போட்டும் கையால் பிடித்தும் அம்மானையை ஆடுவார்கள். பெரும்பாலும் மூன்று பெண்கள் சேர்ந்து விளையாடும் ஆட்டம் இது. அதனால் மூவர் அம்மானை என்றும் ஒரு பேர் இதற்கு வழங்கும். மணிவாசக நாயகி தன் காதனுடைய பெருமை களைப் பாடி ஆடுகிறாள். மற்றவர்களும் பாடி ஆடுவார்கள். ஆனால் அவர்களுக்கு ஆட்டந்தான் முக்கியம்; பாட்டு அதற்கு அடுத்தபடியுள்ளதுதான். இங்கோ ஆட்டத்தைவிடப் பாட்டுத் தான் முக்கியம்.

மணிவாசகர் ஆட்டத்தை வெறும் பாவனையில்தான் ஆடினார். ஆனால் பாட்டை மாத்திரம் உண்மையாகவே பாடிவிட்டார். ஒரு நாடகத்தில் ஒருவன் பலபல செய்கைகளைச்

செய்கிறான். அரசனைப் போல வேஷம் போடுகிறான். அருகில் நிற்கும் சேவகனை மிரட்டுகிறான். நடுவில் அவன் கொடுக்கும் பாலைக் குடிக்கிறான். ஆட்டமெல்லாம் முடிந்துவிட்டது. அவன் அரசனுக்குரிய உடைகளைக் கழற்றி விடுகிறான். அவன் நடித்த போது செய்த செயல்கள் யாவும் வெறும் நடிப்பு; உண்மை அல்ல. ஆனால் பால் குடித்ததோ, நடிப்போடு சேர்ந்த ஒன்று; ஆனாலும் அது உண்மையாகவும் ஆகிவிட்டது; அவன் நாடகத்துக்காகக் குடித்தாலும் குடித்த பால் பொய் அன்று. அதுபோல அம்மானை ஆட்டத்தைப் பாவனையிலே நடத்திய மணிவாசகர் அந்தப் பாவனையிலே பாடிய பாட்டு நாமும் பாடும்படி வெளிப்படையாக உருவம் பெற்று விளங்குகிறது.

★

பெண்கள் மென்மையான இயல்புடையவர்கள். அம்மானையாடும் மெல்லியலார்கள் ஆடும்போது நிகழும் நிகழ்ச்சிகளை முதலில் மணிவாசகர் கற்பனைக் கண்ணால் காணுகிறார். நேரேயும் உலகில் பார்த்தவர் அல்லவா?

அம்மானை ஆடும் பெண்கள் கொடிகள் அசைவது போல அசைகிறவர்கள். கையில் அம்மானைக் காய்களை வைத்து ஆடும்போது முதலில் கைதான் இயங்குகிறது. அம்மானையை மேலே எறிந்து மறுபடியும் வாங்கி மீட்டும் மீட்டும் எறிவதனால் கைகள் மேலும் கீழும் வந்து அசைகின்றன. அந்த அழகிய கைகளில் அணிந்திருக்கின்ற வளைகள் ஒன்றோடு ஒன்று மோதிச் சிலம்புகின்றன. அவர்கள் விளையாடும் இடத்தை அணுகாமல் சற்றுத் தூரத்திலிருந்து கவனித்தாலே அவர்கள் அம்மானை ஆடுவது புலப்படும்; கைகளில் அணிந்துள்ள வளைகளின் ஒலி அதனைப் புலப்படுத்தும். இன்னும் சற்று அணுகி நோக்கினால் அந்தப் பெண்கள் அம்மானை ஆடும்போது அவர்களுடைய மேனி எப்படியெல்லாம் அசைந்து கொடுக்கிறது என்று தெரியும்.

அம்மானை ஆடும்போது அம்மானைக் காய்கள் மேலே போகின்றன. அவற்றை நிமிர்ந்து பார்க்கிறார்கள். கையில் விழும்போது கையைப் பார்க்கிறார்கள். இப்படி நிமிர்ந்தும் தாழ்ந்தும் பார்ப்பதால் அவர்கள் காதில் அணிந்த குழைகள் ஆடுகின்றன. அந்தக் காலத்தில் மகளிர் காதில் இறுகக்

குழையைப் போட்டுக்கொண்டிருக்கமாட்டார்கள். கனமுள்ள குழைகளை அணிவதனால் காதுகள் தாழ்ந்திருக்கும். முகம் அசையும்போது குழைகள் ஊசலைப்போல ஆடும். அம்மானை ஆடுகையில் மேலும் கீழும் பார்ப்பதனால் முகம் அசைய, தாழ்ந்த குழைகளும் ஆடுகின்றன.

கையார் வளை சிலம்பக் காதார் குழை ஆட.

★

இந்த விளையாட்டில் ஊக்கமாக இருக்கும் மகளிருக்கு உண்டாகும் களிப்பை அளவிட முடியுமா? தலையை மேலும் கீழும் ஆட்டுகிறார்கள். களிப்பினால் தலையை அசைக்கிறார்கள். அப்போது அவர்கள் குழல் புரள்கிறது. நெடுங்கூந்தலை உடையவர்கள் அவர்கள். குழலை நீண்ட முடிச்சாக முடிந்திருந்தும் அது புரளுகிறது. உவகை மிகுந்தால் குழல் அவிழ்ந்து புரள்வதும் உண்டு.

அந்தக் கூந்தலிலே மங்கலத்துக்கு அறிகுறியாக மலர்க் கொத்தைச் சூடியிருக்கிறார்கள். அவை அப்போது அலர்ந்த மலர்கள்; மணம் நிரம்பித் தேன் பொங்கும் மலர்கள். தலை அசைவதனால் மலர்கள் அசைகின்றன. அவற்றில் உள்ள தேன், கட்டுக்குலைந்து பாய்கிறது. தேன் உள்ள இடத்தில் வரவேற்பு இன்றியே வரக் காத்திருக்கின்றன வண்டுகள். அவை வந்து மொய்க்கின்றன; இன்னிசை முரலுகின்றன.

மையார் குழல் புரளத் தேன் பாய வண்டு ஆர்ப்ப.

''நம்முடைய ஊர்ப் பெண்கள் அம்மானை ஆடும்போது தலையிலிருந்து தேன் பாயுமா? தேன் பாய, அதில் வண்டுகள் பாய்ந்து ரீங்காரம் செய்யுமா! வளை சிலம்புவதும், குழை ஆடுவதும், குழல் புரள்வதும் இயற்கையாக இருக்கின்றன. அவற்றிற்குமேல்...?'' இப்படி ஒரு கேள்வி எழலாம்.

மணிவாசகப் பெருமான் இங்கே உண்மையாக அம்மானை ஆடவில்லை. தம் உள்ளத்துக்குள்ளே தம்மைப் பெண் ஆக்கிக்கொண்டு, நினைவு எழுகின்ற மனத்தைத் தோழியாக்கிக் கற்பனையினால் ஆடுகின்ற ஆட்டம் இது. அந்தக் கற்பனையில் எவை எவை இனிய பொருள்களோ

எவை எவை அழகிய பொருள்களோ அவற்றையெல்லாம் சேர்த்து வைத்துப் பாடுகிறார்.

இயல், இசை, நாடகம் என்னும் மூன்றிலும் நாடகம் மிகுதியான இன்பத்தைத் தருவது. நாடகம் வாழ்க்கையைப் போல இருக்க வேண்டும் என்று நாடக நலம் தெரிந்தவர்கள் சொல்கிறார்கள். வாழ்க்கையைப் போல இருப்பதுதான் நாடகமே ஒழிய வாழ்க்கையே நாடகம் ஆகாது. வாழ்க்கையில் அழகுள்ள பொருள்களும் அழகில்லாத பொருள்களும் இருக்கும். அழகும் இனிமையும் உள்ள பொருள்களை யெல்லாம் ஒருசேரத் தொகுத்துக் காட்டுவதுதான் நாடகம். அழகில்லாதனவும் இனிமையற்றனவுமாகத் தோற்றும் சில பொருள்கள் அழகும் இனிமையும் உள்ளவற்றினால் விளையும் இன்பத்தை மிகுவிக்கவே நாடகங்களில் வரும். நாடக வழக்கு என்று தொல்காப்பியத்தில் ஒரு தொடர் வருகின்றது. அங்கே இளம்பூரணர் என்ற உரையாசிரியர், ''நாடக வழக்காவது சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதல்'' என்று எழுதுகிறார். கற்பனையும் அத்தகையதே. கற்பனையாகச் சொன்ன செய்தி வாழ்க்கைக்குப் புறம்பாகத் தோன்றாது. ஆனால், அப்படியே மனித வாழ்வு அமைவ தில்லை.

வாழ்க்கையில் இனிமையாக இருப்பவற்றைத் தொகுத்துச் சொல்வது கற்பனைக் கவிஞர்களுக்கு உள்ள சிறப்பு. நாம் இனிமை காணாத பொருள்களிலும் இனிமையைக் கண்டு உணர்த்தும் ஆற்றல் அவர்களிடம் இருக்கிறது.

மணிவாசகர் சிறந்த கவிஞர். அவர் அழகுப் பிழம்பான பெருமானைப் பாடும் பாட்டில் அழகிய காட்சியை நிறுவிக் காட்டுகிறார்.

உலகத்தில் உள்ள அழகற்ற பொருள்களை நம்மால் மாற்ற முடியாது. ஆனால் கற்பனையால் நம்முடைய உள்ளத்திலே படைக்கும் பொருள்களை யெல்லாம் அழகழகாகப் படைக் கலாம்; நம்முடைய விருப்பத்துக்கேற்ற வண்ணம் இனிமை யாகப் படைத்துக் கொள்ளலாம். அப்படிப் படைத்துக் கொள்வதற்கும் ஒரு பண்பு வேண்டும். அழகற்ற பொருள் களைக் கண்டு கண்டு அந்த வாசனையினாலே, திடீரென்று

கற்பனை செய்யப் புகுந்தால் அழகற்ற பொருள்களே நமக்கு முன் வந்து நிற்கும். நம் கண்ணை மூடிக்கொண்டால் இருட்டுத் தானே தெரிகிறது? இன்பமும் அழகும் அமைதியும் உள்ள வற்றையே நினைத்துப்பார்க்கப் பயிற்சி வேண்டும்; தெம்பு வேண்டும். அது நமக்கு இருப்பதில்லை. கவிஞர்களுக்கும் கலைஞர்களுக்கும் பக்தர்களுக்கும் அந்தத் தெம்பு இருக்கிறது.

மணிவாசகர் அந்த தெம்பு உடையவர். கற்பனையிலே அழகிய பொருள்களைக் காணும் ஆற்றல் பெற்றவர். அகக் கண் மூலம் கடவுளையே காணும் திறமுடையவர். அவர் கற்பனையில் அம்மானை ஆடுகிறார். அழகான பொருள்களை யெல்லாம் தொகுத்து வைத்து ஆடுகிறார். அழகிய தோழிகளை உட்கார வைக்கிறார். அவர்கள் தம் கைநிறைய வளைகளை அணிந்து காதில் குழை பூண்டு விளங்குகிறார்கள். குழலில் மலர்கள் மணக்கின்றன. அவை வாடிய மலர்கள் அல்ல; தேனைச் சொரியும் பூக்கள். தேன் அவற்றிலிருந்து ஊற ஊற வண்டுகள் அவற்றில் வந்து மொய்க்கின்றன. தேனை உண்டு பாடுகின்றன. அழகான கற்பனை அல்லவா? கற்பனையில் பொருத்தமும் அழகும் இருந்தால்தான் நம் மனத்துக்குள் சுவை உண்டாகும். அப்படிச் செய்வதுதான் சிறந்த கவிதை.

★

மணிவாசகப் பெருமான் உலகில் மகளிர் ஆடும் விளையாட்டை மாத்திரம் நினைக்கவில்லை. எம்பெருமானை நினைத்துப் பிறகே இந்த விளையாட்டை நினைத்தார். அம்மானை விளையாட்டை ஆடுவதற்கே காரணம் எம் பெருமான் பெருமையைப் பாடுவதற்குத்தானே? தோழிமார்கள் கையில் உள்ள வளை சிலம்பவும் காதிலே உள்ள குழைகள் ஆடவும் மையார் குழல் புரளவும் தேன் பாயவும் அதில் வண்டுகள் மொய்ப்பவும் அம்மானை ஆடுகிறார்கள். வண்டின் ரீங்காரச் சுருதி போட்டாகிவிட்டது. இனிப்பாடவேண்டியது தானே?

இதுவரைக்கும் அவர்களுடைய புற அழகு தெரிந்தது. மணிவாசக நாயகியோடு இருந்து விளையாடும் தோழிமார்கள் புற அழகு மட்டுமா உடையவர்கள்? மணிவாசக நாயகி எப்படி இருக்கிறாள்? கையார் வளையும் காதார் குழையும் மையார்

குழலும் உடையவள்தான். அவற்றால் மட்டும் பெருமை வந்துவிடாது. எம்பெருமானிடம் உள்ள காதலிலே ஊறிக் கிடக்கும் உள்ளத்தை உடையவள் அவள். மற்றத் தோழிகளும் அப்படியே உள்ளவர்கள். அது எவ்வாறு புலப்படுகிறது? அவர்கள் உள்ளத்தில் உண்டாகும் காதல் உணர்ச்சி அவர்கள் பாடும் பாட்டிலே புலனாகிறது.

பெண்கள் விளையாடும்போது அவர்களை அறியாமலே பாட்டு வரும்; அவர்கள் உள்ளத்தில் உள்ள உணர்ச்சிக ளெல்லாம் திரண்டு பாட்டாக வரும். கட்டு ஏதும் இல்லாமல் மனம் உல்லாசமாகக் கற்பனை வானத்திலே திரிய விளை யாடும் விளையாட்டு ஆதலால் கருத்து அவிழ்ந்து பாட்டாக மலர்கிறது. இந்தப் பெண்களுக்கோ இறைவனுடைய நினைவையன்றி வேறு ஒன்றும் இல்லை. அதனால் அவர்கள் பாடும் பாட்டு வேறு எதைப்பற்றியும் இருக்க நியாயம் இல்லை. இறைவனைப்பற்றியே பாடுகிறார்கள்.

இறைவனுடைய திருமேனிக் கோலத்தைப் பாடு கிறார்கள். அவன் பேரழகன். செம்மேனி எம்மான்; செய்யான். அதன்மேல் தூய வெண்ணீற்றை அணிந்திருக்கிறான்.

செய்யானை வெண்ணீறு அணிந்தானை.

★

அழகனாக மாத்திரம் இருந்தால் பெண்களுக்கு ஒருவனிடம் காதல் பிறக்காது. அவன் ஆண்மையுடையவனாக, வீரனாக, வெற்றி மிடுக்கு உடையவனாக இருக்கவேண்டும். இறைவன் பேராண்மை உடையவன். அவனை வெல்வார் யாரும் இல்லை. தன்னுடைய ஆற்றலாலும் பிறவற்றாலும் எல்லாரினும் சிறந்து நிற்கிறவன் அவன். அவனை ஒத்தவர் யாரும் இல்லை. தனக்கு உவமையில்லாத தலைவன் அவன். அவன் ஒருவன்தான் தலைவன்; ஏக சக்கராதிபதி. அகில புவனத்தில் உள்ளவர்களும் அவனுக்கு அடங்கினவர்கள். அங்கங்கே சில சில கூட்டங்களுக்குத் தலைவர்களாக இருந்து ஆணை செலுத்துகிறவர்கள் யாவரும் அவன் வைத்த ஆட்கள். தம்மிடம் ஏவல் புரிபவர்களை நோக்கும்பொழுது அவர்கள் தலைவர்கள். ஆனால் இறைவனை நோக்கும்போது அவர்கள்

குறைவு இல்லாதவன். தன்னை அணுக அஞ்சுவாருக்கும் நீண்டு சென்று வழங்கும் வண்மையை உடையவன் என்பதைத் துதிக்கை காட்டுகிறது.

இறைவனுடைய திருவருளைப் பெறவேண்டும் என்ற நாட்டம் பிறவாமல் நம்மை மலத்தில் அழுத்துவதற்குக் காரணமாக இருப்பது நம்முடைய பொறிகள். இந்தப் பொறி களின் வாயிலாக நுகரும் நுகர்ச்சிக்கு அடிமைப்பட்டு அந்த நுகர்ச்சியே வாசனையாகப் படிய, அதனால் பிறந்து பிறந்து உழல்கிறோம். ஐம்பொறிகளின் குறும்பை அடக்க வேண்டுமா னால் ஞானம் உண்டாகவேண்டும். இறைவனுடைய திரு வருளால் ஞானம் உண்டாகும். ஞான தாதாவாகிய விநாயகன் ஐம்பொறிகளையும் அடைத்து அருள் செய்ய ஐந்து கரங்களைப் பெற்றிருக்கிறான்.

''உரன்என்னும் தோட்டியான் ஓர் ஐந்தும் காப்பான்
வரன்என்னும் வைப்பிற்கோர் வித்து''

என்று வள்ளுவர் வாய்மலர்ந்தார். ஐம்பொறிகளாகிய மதயானையை அடக்கும் அங்குசத்தையும் பாசத்தையும் தன் கரங்களில் வைத்திருக்கிறவன் கணபதி. மற்ற யானைகள் பாசத்தையும் அங்குசத்தையும் கண்டால் அஞ்சும், கணபதியோ அவ்விரண்டையும் தன் திருக்கரத்திலே கொண்டவன். அவை கட்டுப்படும் யானைகள். இவனோ கட்டுப்படாத யானை மட்டும் அன்று; ஐம்பொறிகளாகிய யானைகளைக் கட்டுப் படுத்தி, அவற்றால் அஞ்சிக் கட்டுப்பட்ட உயிர்களைப் பாசத்தி னின்றும் விடுவிப்பவன். மற்ற யானைகளுக்குக் காமத்தால் மதம் புறப்படும். கணபதிக்கோ அருளாகிய மதம் மலரும்.

''கருணையென்னும் வெள்ளமதம் பொழிசித்த வேழம்.''

கை செயலுக்கு அறிகுறி. கை என்ற சொல்லுக்கே செயல் என்ற பொருள் உண்டு; கையறல் என்ற தொடரால் அது விளங்கும். ஐந்து ஙககள் உடையவன் என்பது ஐந்து தொழிலை உடையவன் என்பதற்குரிய அறிகுறியுமாகும். படைப்பு, காப்பு, அழிப்பு, மறைப்பு, அருளல் என்னும் ஐந்துக்கும் தலைவன் ஐங்கரன்.

யானைத் தலை பெரியது. அறிவுக்குத தலை அடையாளம். மற்றவர்களுக்கெல்லாம் உள்ள தலைகளைவிடக் கணபதிக்குப் பெரிய தலை இருக்கிறது; அவன் யாவரினும் பெரிய அறிவுடையவன் அல்லவா? ஞானத்தின் இருப்பிடம் அவன்; முற்றறிவுடைய மூர்த்தி.

அவனுக்கு யானையைப்போல இரண்டு கொம்புகள் இருந்தும் ஒன்றை ஒடித்துவிட்டான். இப்போது இருப்பது ஒற்றைக் கொம்புதான். மற்ற யானைக்கும் தனக்கும் வேறுபாடு தோற்றும்படி ஒற்றைக் கொம்புடன் விளங்குகிறான். அக்கொம்பு மூன்றாம் பிறைச் சந்திரனைப் போல மாசு மறுவற்று வெண்மை யாய் வளைவையுடையதாய் விளங்கு கின்றனது.

விநாயகன் தன் கொம்புகளில் ஒன்றை ஒடித்துக் கயமுகாசுரனைச் சங்காரம் செய்தான்; மேரு மலையில் பாரதத்தை எழுதினான். நல்லோருக்குத் தீங்கு பயக்கும் அசுர சக்திகளை ஒடுக்கிக் கல்லையும் பதப்படுத்தும் ஆற்றல் அக்கொம்புக்கு உண்டு. இறைவனுக்கு நிக்கிரகம், அநுக்கிரகம் என்ற இரண்டு ஆற்றல்கள் உள்ளன. அவை பகையினாலும் நட்பினாலும் அமைவன அல்ல. அருளால் செய்வனவே அவை இரண்டும். குணமற்ற பிள்ளையை அடித்தும் குணமுள்ளவனை அணைத்தும் வளர்க்கும் தாய்போல் இருப்பவன் அவன். அடித்தலுக்கும் அணைத்தலுக்கும் காரணமாக இருப்பது தாயினுடைய அன்பே ஆகும். அவ்வாறே நிக்கிரகம், அநுக் கிரகம் இரண்டுக்கும் மூலம் அருள்தான். நிக்கிரகத்துக்குக் காரணமானதை மறக்கருணை யென்றும், அநுக்கிரகத்துக்குக் காரணமானதை அறக்கருணையென்றும், கூறுவர்.

விநாயகருடைய கொம்புகள் இரண்டில் ஒடித்த கொம்பு மறக் கருணையையும், ஒடிக்காத கொம்பு அறக்கருணையையும் குறிப்பன. அடிபணியும் அன்பருக்கு மறக்கருணை தோற்றாது. அறக் கருணையை நினைவுறுத்தும் ஒற்றைக் கொம்புதான் தெரியும், இந்துவின் இளம் பிறையைப் போலக் கண்ணுக்குக் குளிர்ச்சியாய்த் தோற்றம் அளிக்கும். நமக்கு அருள்புரிவான் என்ற எண்ணத்தால் உள்ளம் குளிருமல்லவா?

ஐந்த கரத்தனை* ஆனை முகத்தனை
இந்து இளம்பிறை போலும் எயிற்றனை.

*(ஐந்து திருக்கரங்களை உடையவனை, ஆனை முகம் உடையவனை, சந்திரனது இளம்பிறையைப் போன்ற ஒற்றைக் கொம்பை உடையவனை.)*

★

**வி**நாயகக் கடவுள் சிவபெருமானுடைய குமாரன், கடவுள் ஒருவனேயானாலும் தன்னை வழிபடுபவர்களுடைய நாட்டத்துக்கு ஏற்ப வெவ்வேறு திருவுருவம் கொண்டு காட்சி அளிக்கிறான். அவன் எடுக்கும் ஒவ்வொரு கோலத்திலும் தனித்தனியான சில இயல்புகள் சிறப்பாகப் புலப்படும். சிவபெருமான் தந்தை, விநாயகன் அவனுடைய பிள்ளை என்ற உறவு, உலகில் உள்ள தந்தை மகன் என்ற உறவு முறையைப் போன்றதன்று. கங்கையில் உள்ள நீரைத் தமக்குப் பயன்பட வேண்டும் என்ற கருத்தினால் ஒரு வெள்ளிக் குடத்தில் எடுத்துக் கொணர்ந்த வைத்துக்கொள்கிறார் ஒருவர். அவர் அதை வெள்ளிக்குடத்து ஜலம் என்று சொல்வார். அந்த நீரையே கங்காஜலம் என்றும் சொல்லலாம். இரண்டுக்கும் வேறுபாடு இல்லை. சிவபரஞ்சுடரின் இயல்புகளை எண்ணும் பக்தர் களுக்கு விநாயகன் வேறு அல்லன் என்ற உண்மை தெரியும். ஆயினும் விநாயகன் என்று தனியே வைத்து வழிபடும்போது பரம்பொருளின் இயல்புகளிற் சிலவற்றைச் சிறப்பாகவும் அழுத்தமாகவும் எண்ணும் நிலை உண்டாகிறது.

---

* *ஐந்து கரத்தனை என்றது: ஐந்தாவது கரமெனப்படும் துதிக்கை பிரணவாகாரமாதலால் அதனைச் சிறப்பித்தற்கே; அன்றியும் தேவிபஞ்சப் பிரணவங்களில் முதன்மை பெற்ற மஹா ஸாரஸ்வத பீஜமாகிய ஐங்காரத்தை முன்னர் அமைத்துப் பின்னர் ஆகாச வாசகமாகிய தகரத்தையும், பரமசிவ வாசகமாகிய உகரத்தையும் அமைத்த முறைபற்றிச் சகல சப்தமயப் பிரபஞ்சத்திற்கும் ஆதாரமாகிய சிதம்பரத்தின்கண் 'ஆகாச சரீரம் ப்ரஹ்ம' என்று வேதாந்தம் கூறியவாறு அதன் மயமாய், அதிற் கருணானந்தத் திருமேனி கொண்டருளிய பரமசிவத்தினது திவ்ய சொரூப இலக்கணம் அமைந்தது. -திருமந்திரம், மா.வே.விசுவநாத பிள்ளை பதிப்பு, 1912.*

தன்னை எண்ணாதவருக்கு இடையூறுகளையும், எண்ணு வாருக்கு இடையூறு நீக்கத்தையும் உண்டாக்குபவன் என்று விக்கினேசுவரனைச் சொல்வார்க்ள. அது அவனது சிறப்பியல்பு. யானை தீங்கும் புரியும்; நன்மையும் புரியும் அல்லவா?

சிவபிரானுடைய குமாரனாகிய விநாயகன் ஞானக் கடலின் ஓர் அலை. ஞானக் கடல் சிவபிரான்; அவனுடைய குமாரன் அதன் அலை. அலை என்று தனியே பெயர் சொன்னா லும் அது கடலினின்றும் வேறு என்று சொல்லலாமா?

நந்தி என்பது சிவபிரானுக்கு ஒரு பெயர். விநாயகன் அந் நந்தியின் மகன். நந்தி ஞானக் கற்பகம் போல நிற்பவன்; அக் கற்பகத்தின் கொழுந்தாக விளங்குபவன் கணபதி.

நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினை.*

*(சிவபிரானுடைய திருக் குமாரனை, ஞானமென்னும் கற்பக மரத்தின் கொழுந்து போன்றவனை.)*

★

**வி**நாயகனைப் பார்க்கும்போது முதலில் அவன் துதிக்கையும் மற்றக் கைகளும் தெரிகின்றன; ஐந்து கரத்தன் என்று போற்றுகிறோம். பிறகு பெரிய ஆனைமுகம் காட்சி அளிக்கிறது. ஒற்றைக் கொம்பையும் காண்கிறோம். ஐம் பொறியை அடக்கும் ஞானத்தை வழங்கும் வள்ளல், பேரறி வுடையவன், அநுக்கிரக சக்தி யுடையவன், பரம சிவத்தின் கான் முளை, ஞான சொரூபி என்றெல்லாம் தெரிந்து கொண்டோம். அந்த எண்ணங்கள் யாவற்றையும் நம்முடைய புத்தியிலே வைத்துப் பார்க்கிறோம். ஒருவன் சிறந்தவன் என்ற அறிவு உண்டானால் நமக்கு அவனிடம் மதிப்பு ஏற்படும். அப்படி ஏற்பட்டால் நாம் அவனிடம் பணிவாக நடக்கத் தொடங்குவோம். இங்கே கணபதியின் இயல்புகளைச்

---

* *ஞானக் கொழுந்தினை என்றது: அவர் திருமேனி சுத்த சைதன்ய மயமென்று குறித்தற்கு; அது மூலாதாரத்தின்கண் யோகி களின் பாவனா ரூபமாய் அமைதலால் என்க.-திருமந்திரம், மா.வே.விசுவநாத பிள்ளை பதிப்பு.*

சிந்தித்துப் பார்த்தோம்; புத்தியில் வைத்தோம். அப்போது அவனிடத்தில் பக்தி தோன்றுகிறது. உடனே, அவனைப் பணிய வேண்டும் என்ற உணர்வு எழுகிறது. அவன் திருவடிகளில் விழுந்து வணங்குகிறோம்.

திருமூலர் அவன் இயல்புகளைப் புந்தியில் வைத்தார்; பின்பு அவன் அடியைப் பணிந்து வணங்குகிறார்.

புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

*(புத்தியில் வைத்துத் திருவடிகளைப் பணிகின்றேன்.)*

★

'ஐந்து கரமும் ஆனை முகமும் பிறையைப் போன்ற ஒற்றைக் கொம்பும் உடையவன் விநாயகன்; அவன் சிவகுமாரன்; ஞான சொரூபி. அதனைத் தியானித்து அவன் திருவடியை வணங்குகிறேன்' என்று திருமூலர் பாடுகிறார்.

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்து இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்துஅடி போற்றுகின் றேனே.

*(இந்து-சந்திரன். வடசொல் ஆதலின் உகரம் முற்றுகரமாகக் கெடாமல் நின்றது. எயிறு-கொம்பு; எயிற்றன்-கொம்பை உடையவன். புந்தி; புத்தி யென்பதன் திரிபு. ஐந்து கரத்தன் முதலிய யாவும் விநாயகனையே குறித்தன.)*

இவன் அருளுவான் என்ற நம்பிக்கையோடு கணபதியை அணுகுவதால், அந்த நம்பிக்கையை அருளும் ஐங்கரங்களை முதலில் சொன்னார். தன்னிடம் ஒன்று இல்லாதான் பிறனுக்கு எவ்வாறு கொடுக்க இயலும்? இவன் பிறருக்கு அளிக்கும் பொருளாகிய அறிவு நிரம்பப் பெற்றவன் என்பதற்கு ஆனைமுகத்தன் என்று பின் கூறினார். கொடுக்கும் கையும், பொருளும் உடையவனானாலும் அருளும் இயல்பு உண்டோ என்று ஐயுறுவாருக்கு, அநுக்கிரக சக்தியுடையவன் என்பதை உணர்த்த, இளம் பிறை போலும் எயிற்றன் என்றார். இவன் இப்படி இருப்பதற்கு அடி எங்கே எனின்; நந்தி மகன் என்றார். நந்திக்கும் இவனுக்கும் உள்ள தொடர்பு எத்தகையதோ என்பாருக்கு ஞானக் கொழுந்து என்றார்.

இத்தகைய பெருமானை வெறு நிலத்தில் விளைய . விடாமல் புத்தியாகிய நிலத்தில் வைத்துப் போற்றுவேன் என்றார். கரமும் முகமும் எயிறும் அவன் பெருமைகளைக் காட்டினாலும் அவை புந்தியிலே வைத்தற்குரியனவே யன்றி, யான் பற்றிக்கொள்வதற்கு உரியன அவன் திருவடிகளே என்று குறிப்பிக்க, ''அடி போற்றுகின்றேனே!'' என்றார்.

மனம், மொழி, மெய் என்ற மூன்று கரணங்களாலும் கடவுளைப் போற்றுதல் மரபு. ''புந்தியில் வைத்து'' என்பது மனத்தால் நினைத்தலைக் குறித்தது. ''அடி போற்றுகின்றேன்'' என்றது மெய்யால் வழிபடுதலைக் குறித்தது. வாக்கால் வழுத்துகிறேன் என்று தனியே எடுத்துச் சொல்லாவிட்டாலும், இந்தப் பாட்டை அருளியதே வாக்கின் செயலாதலின் மொழியால் போற்றியதாயிற்று; இது உடம்படுபுணர்த்தல் என்பதன்பாற் படும்.

இந்தப் பாட்டுத் திருமந்திரத்தில் உள்ள காப்புச் செய்யுள்.



# நாணலும் கோணலும்

பசியினால் துடிக்கும் குழந்தை பால் பால் என்று கதறும். அப்போது அதற்கு விளையாட்டுப் பண்டங்களைக் கொண்டு வந்து குவியலாகத் தந்தாலும் அவற்றைக் கண்ணெடுத்தும் பாராது. இறைவனுடைய திருவருளைப் பெறு வதற்காக ஏங்கி நிற்கும் அன்பருடைய நிலையும் அத்தகையதே. பசி, தூக்கம், இன்பம், துன்பம் என்பவற்றை மறந்து, ''அவனை என்று காண்பேன்!'' என்று ஏங்கித் துடிக்கும் அன்பர் களுக்கு அவனுடைய தரிசனம் கிட்டும் வரையில் அமைதி பிறவாது; இருப்புக் கொள்ளாது; உலக வாழ்வு சுவைக்காது.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் இத்தகைய நிலையில் இருந்து அம்பிகையின் தரிசனத்தைப் பெற்றவர். கடவுள் தரிசனத்துக்காக ஏங்கும் நிலையை உணர்த்த ஒரு நல்ல உதாரணம் அவர் சொல்கிறார். ஒருவனைத் தண்ணீரில் ஒரு நிமிஷம் அமிழ்த்திவிட்டுப் பிறகு அவனை விடுதலை செய்து, ''உனக்கு எப்படி இருந்தது?'' என்று கேட்டால் அவன், ''எப்போது மூச்சுவிடப் போகிறோம்! எப்போது காற்றைச் சுவாசிப்போம்! என்ற துடிப்பையல்லாமல் வேறு நினைவே இல்லை'' என்று சொல்வான். அவ்வாறே இறைவனுடைய காட்சிக்காக வேசாறி நிற்கும் அன்பர்களும் கடவுள், கடவுள் என்ற நினைவையன்றி வேறு எதையும் நினைக்க இயலாத நிலையில் இருப்பார்கள்.

''என் அப்பனே! உன்னை என் கண்ணாரக் காணும்பேறு எப்போது கிடைக்கும்? இந்தப் பாவியின் முன் எப்போது எழுந்தருள்வாய்?'' என்று அவர்கள் கதறுவார்கள்; அவன் அருளைப் பெற்ற பழைய அன்பர்களை எண்ணி எண்ணி, ''அவர்கள் பெற்றது யாம் பெற்றிலமே!'' என்று வருந்துவார்கள்.

★

இறைவன் இல்லாத இடம் ஒன்று இல்லை. ஆனால் அவன் இருப்பதை உணரும் ஆற்றல் யாவருக்கும் இருப்பதில்லை. மழை எங்கும் பெய்தாலும் அது மேடான பாறையில் தங்கி நிற்பதில்லை. பெய்த சிறிது நேரத்தில் பாறையைப் பார்த்தால் மழை பெய்த சுவடே இராது. ஆனால் பள்ளத்தில் மழைத் தண்ணீர் தேங்கி நிற்கும். சில நாள் கழித்துச் சென்று பார்த்தாலும் மழை பெய்ததற்குரிய அடையாளமாக அங்கே நீர் இருப்பதைக் காணலாம். இறைவன் எவ்விடத்திலும் நீக்கமற நிறைந்து நின்று அருள் மழை பொழிந்து கொண்டே இருக்கிறான். அவ்வருள் மழையினால் ஈரம் கொள்ளாத பாறைகளாகப் பல உள்ளங்கள் இருக்கின்றன. அதைத் தேக்கிக் கொள்ளும் பள்ளங்களாகச் சில உள்ளங்கள் இருக்கின்றன. அடியார் உள்ளமாகிய பள்ளத்திலே அருள் தேங்குகிறது. இறைவனே அங்கு நிலைத்து நிற்கிறான்.

உலகத்து மக்களிற் பெரும்பாலோர் இறைவனைத் தரிசிக்க இயலாமல், அவன் அருள் மழை பெய்தும் பயன்படுத்திக் கொள்ளாமல் வாழ்நாளை வீணாக்கிக்கொண்டு கிடக்க, அன்பர்களோ அவனைத் தம் நெஞ்சக் கோயிலில் பூட்டித் தாழிட்டுவிடுகிறார்கள். அவனைக் காணும்வரையில் அந்த அன்பர்களும் மற்றவர்களைப் போலவே வாழ்ந்தாலும், அவனது காட்சி பெற்ற பிறகு அவர்கள் வாழ்க்கைப் போக்கே மாறிவிடுகிறது. அதுவரையில் அவர்கள் காணும் காட்சி ஒரு வகை; அருள் பெற்ற பின் அவர்கள் காணும் முறையே வேறு ஆகிவிடுகிறது. அதற்கு முன்பெல்லாம் அவர்கள் தங்களுடைய அறிவின் தூண்டுதலால் பொருள்களைப் பார்த்து அறிந்தார்கள்; நுகர்ந்தார்கள். ஆனால் இறைவன் அவர்கள் உள்ளத்தில் நின்ற பிறகு அவர்கள் தாமாக இயங்குவதில்லை; தமக்கென்று ஒரு செயல் உடையவராகவே எண்ணுவதில்லை. எல்லாம் அவன் செயலாகத் தற்போதம் இழந்து நிற்பார்கள். அவர்கள் உள்ளத்தில் நிற்கும் இறைவன் எந்தச் செயலுக்கும் மூலகர்த்தாவாகத் திகழ்வான்.

இத்தகைய அடியார்களின் உள்ளம் நேரான உள்ளம்; நேர்மையான உள்ளம்; காமம், கோபம் முதலிய கோணல்கள் இல்லாத உள்ளம். குடியில்லாத வீட்டிலே பாம்பும் தேளும் வாழும்; மனிதர்கள் குடிவந்துவிட்டால் அவை போய்விடும்.

மற்ற மக்கள் உள்ளம் காமம் முதலிய பாம்பும் தேளும் குடியிருக்கும் இடம். இறைவன் வந்து நிற்கும் அடியார் உள்ளமோ கோணல்கள் நில்லாத இடம். கோணல் நின்றால் இறைவன் நில்லான்; இறைவன் நின்றால் கோணல் நில்லாது.

கோணல்நில் லாத குணத்துஅடி யார்மனம்.

அந்த ,மனமே சிங்காதனமாக இருந்து இறைவன் அருளாட்சி புரிகின்றான். அவனே மாற்றறியும் உரையாணியாக இருந்து, உலகத்தைக் காட்டுகிறான். அவன் காட்டாதபோது கோணல் நின்ற மனத்தின் போக்குக்கு ஏற்பக் கண்ட காட்சிக்கும், அவன் காட்ட அவன் அருளே கண்ணாகக் காணும் காட்சிக்கும் எத்தனையோ வேறுபாடு உண்டு. இப்போது இறைவன் கோணல் நில்லாத மனத்தில் தானே உரையாணியாக அமர்ந்து நிலையாக நிற்கிறான்.

கோணல்நில் லாத குணத்துஅடி யார்மனத்து
ஆணிய னாகி அமர்ந்துநின் றானே.

*(கோணல்-அருள் நெறியினின்றும் திரும்புவதற்குக் காரணமான குற்றங்கள். கோணல் நில்லாத மனம், குணத்தையுடைய அடியார் மனம் என்று கூட்டிப் பொருள் செய்க, ஆணியன்-உரையாணியைப் போன்றவன். நின்றானே-நின்ற எம்பெருமானே; விளி.)*

★

'இப்படிக் கோணல் நில்லாத அடியார் மனத்திலே அவாகளுக்கு மாலுமிபோல இருந்து நடத்துவிக்கும் பெருமான் நம்மளவில் மறைந்து நிற்கிறானே! அவனைக் காணும் வாய்ப்பு இல்லையே!' என்று ஏங்குவது முன்னே சொன்ன அடியார்களின் இயல்பு. அப்படி ஏங்கும் நிலையில் உள்ள ஒருவர் இறைவனையே பார்த்துப் பேசுகிறார்.

''இறைவனே! நீ இங்கு வந்து நிற்கமாட்டாயா?'' என்றார் அவர்.

''நான் இல்லாத இடம் ஒன்றும் இல்லையே! வந்து புதிதாக நிற்கவேண்டுமோ?'' என்றான் இறைவன்.

''நீ நிற்கிறாய் என்பது உணமை. ஆனால் அடியேன் காணும்படி நிற்கவில்லையே!'' என்றா்ா அன்பர்.

''என்னைக் கண்டு உனக்கு என்ன பயன்?'' என்ற கேள்வி பிறந்தது.

''எனக்கு எல்லாப் பயனும் உன்னாலேதான் கிடைக்க வேண்டும்.''

''அதை வேறு யாரிடமேனும் முயன்று பெற்றுக் கொள்ளலாமே!''

''வேறு யாராலும் எனக்கு நன்மை செய்ய இயலாது. எனக்கு நின்னையன்றி உறவு வேறு யாரும் இல்லை.''

''நீ என்னைக் கண்டால் என்ன செய்வாய்?''

''உடனே ஓடிவந்து உன்னை இறுகத் தழுவிக் கொள்வேன்.''

''முன்னே காணாத கணவனைக் கண்டவுடன் நாணம் கொள்ளும் பெண்ணைப்போல நாணம் உண்டாகாதா? எப்படித் தழுவிக்கொள்ள முடியும்?''

''அடியேன் நாணி நிற்கமாட்டேன். என் ஆசையின் வேகம் அத்தகையது. அயலில் ஒரு பொருள் இருப்பதாக நினைவு இருந்தால்தானே, நாணம் உண்டாகும்? தாயை ஓடிச் சென்று கட்டிக்கொள்ளும் குழந்தை நாணம் அடைகிறதா? அப்படி நான் உன்னைத் தழுவிக்கொள்வேன்.''

''நான் பிறர் தழுவ நிற்பவன் என்று எவ்வாறு அறிந்தாய்?''

''கோணல் இல்லாத மனத்தையுடைய பக்தர்களின் உள்ளத்தில் நீ இணைந்து அமர்ந்து அவர்களுக்கு வழி காட்டிபாகவும் உரையாணியாகவும் நிற்பதை அறிவேன்.''

திருமூலர் பாட்டு ஒன்று இந்தக் கற்பனைக்கு இடம் தருகிறது.

*காணநில் லாய்;அடி யேற்குஉறவு ஆர்உளர்?*
*நாணநில் லேன்உன்னை நான்தழு விக்கொளக்*
*கோணல்நில் லாத குணத்துஅடி யார்மனத்து*
*ஆணியன் ஆகி அமர்ந்துநின் றானே!*

*(குற்றங்களாகிய கோணல்கள் நில்லாத குணசீலர்களாகிய அடியாருடைய மனத்தில் உரையாணியைப் போல எழுந்தருளி நிலையாக நிற்பவனே! நீ அடியேன் காணும்படி என்பால் வந்து நிற்பாயாக. எனக்கு நீ அருள் செய்யாவிடில் அடியேனுக்கு உறவாவார் வேறு யார் இருக்கின்றனர்? நீ அடியேன் காணும்படி வந்து நின்றால் உன்னைத் தழுவிக் கொள்வதற்கு நாணி நிற்க மாட்டேன்.*

*தழுவிக்கொள்ள நாணி நிலேன். நாண என்றது நாணி என்பதன் திரிபு; எதுகை நோக்கி. நாணம் நில்லேன் என்று பிரித்து நாணத்தில் நில்லேன் என்றும் பொருள் கொள்ளலாம். ஆணியன்-அச்சாணி போன்றவன் என்றும் சொல்லலாம். தேர் உருளுவதற்குப் பலமாக ஆணி இருப்பதுபோல அடியார்களின் வாழ்க்கைக்கு ஆதாரமாக இறைவன் இருக்கிறான். நின்றான் என்றது நிற்றலாகிய செயலைக் குறிக்காமல் நீடித்து இருந்தான் என்றதைக் குறித்தது.)*

இறைவனிடம் முறுகிய பக்தி உடையவர்களுக்கு நாணம் நழுவிவிடும். தலைவனைத் தனித்துக் கண்டு அளவளாவி இன்புறும் தலைவிக்கு நாணம் இருந்தால் இன்புற இயலாது. இறைவனுடைய அருளுக்காக ஏங்கி நிற்கும் பக்தர்களுக்கு நாணம் குறுக்கே நில்லாது.

"நாடவர் பழித்துறை பூணது வாக"

என்பது திருவாசகம். "உலகம் பழிக்குமே!" என்ற எண்ணம் இன்றி இறைவனைப் பற்றுபவருக்கே இன்பம் உண்டாகும்.

"ஊரூர் திரிந்தும் இவண்
தத்தம் மனத்தன பேசஎஞ் ஞான்றுகொல் சாவதுவே"

என்று மாணிக்கவாசகர் கூறுகிறார். உலகத்தவர் பக்தர்களைக் கண்டு தம் மனம் போனபடி இழித்துபேச, அதற்கு நாணாமல் இறைவன் அருளிலே ஒன்றுபடுவது அன்பர் இயல்பு. சீவபோதம் ஒழிந்து நிற்பவருக்கு உலகம் என்ன சொன்னாலும் அதைப் பற்றிய கவலை தோன்றாது.*

கோணல் உள்ளத்தில் இருந்தால் நாணல் இருக்கும். கோணல் ஒழிந்தால் நாணலும் ஒழியும்.

★

---

* *நாயேறி வீழ்ந்தென் நடாத்திலென் ஞானிக்குப், பேயாம் உலகம் பழித்தென் புகழ்ந்தென்"-ஒழிவிலொடுக்கம்.*

# ஆர் அறிவார்!

*அடியார்:* திருமூலதேவரே, தேவரீர் இறைவனைப் பற்றி எவ்வளவோ விரிவாகத் தெரிந்துகொண்டிருப்பீர்களே; அவற்றை ஒன்றும் குறைவின்றிச் சொல்லவேண்டும். இறைவன் பெருமையை முற்றும் கேட்க எங்களுக்கு ஆசை.

*திருமூலர்:* பெம்பெருமான் பெருமையையா கேட்கிறீர்கள்? எங்கள் அண்ணல் பெருமையை முற்றும் அறியும் ஆற்றல் உள்ளவர் யார்?

*ஆர்அறி வார்எங்கள் அண்ணல் பெருமையை!*

*அடியார்:* அப்படி எல்லாம் சொல்லக்கூடாது. நீங்கள் இறைவன் திருவருளில் மூழ்கியவர்களாயிற்றே. அவன் மிகமிகப் பெரியவன் என்று நூல்கள் சொல்கின்றனவே. அவன் எவ்வளவு பெரியவன்? அகலம், நீளம் என்று கணக்குச் சொன்னால்தான் எங்களுக்கு விளங்கும்.

*திருமூலர்:* அவனுடைய வியாபகத்தைக் கேட்கிறீர்களா? அவனுடைய அகலத்தையும் நீளத்தையும் அளக்க நம்முடைய அறிவுக்கு ஆற்றல் ஏது? சர்க்கரைப் பொம்மையைப் கடலில் விட்டு அதன் ஆழத்தைப் பார்க்கலாமோ? அளந்து பார்க்கும் உள்ளம் அவனூடே கரைந்து போகுமே யன்றித் தனியே நின்று பார்த்துக்கொண்டிருக்குமா?

*ஆர்அறி வார்அந்த அகலமும் நிகளமும்.**

*அடியார்:* அளவு தெரியாது என்றால் ஒன்று சொல்லுங்கள். அவனுக்கு எத்தனையோ பேர்களைச் சொல்லுகிறார்களே; அவனுக்குச் சொந்தமான பேர் எது? உங்களுக்கு அந்த இரகசியம் தெரிந்திருக்குமே!

---

* *"அகல நீளம் யாராலும் ஒருவராலுமாராய அரிய மோனமே கோயில் எனமேவி" -திருப்புகழ்.*

*திருமூலர்;* பலர் பல விதமாகச் சாட்சி சொன்னால் அத்தனை சாட்சியும் பொய் என்றுதானே கொள்ள வேண்டும்?

*அடியார்:* எல்லாப் பேர்களும் பொய்யானால் மெய்யான பெயர் எது?

*திருமூலர்:* அது பேர் அறியாத பொருள்.

*அடியார்:* எல்லோருக்கும் சம்மதமாக அவனை எவ்வாறு சொல்வது?

*திருமூலர்:* அவனைப் பெருஞ்சுடர் என்று சொல்லலாம். நட்சத்திரங்களும் சூரிய சந்திர அக்கினிகளும் சிறுசுடர்கள். இந்தச் சுடர்கள் எல்லாவற்றிற்கும் மேலான பெரிய சுடர் அது. அந்தச் சுடரின் ஒளியைத்தான் இந்தச் சிறிய சுடர்கள் பெற்று விளங்குகின்றன.

*அடியார்:* அவனுக்கு அளவு தெரியாது, பேர் தெரியாது என்று சொல்கிறீர்களே! பின்பு என்னதான் சொல்லப் போகிறீர்கள்? அவனுடைய ஆதி வரலாறு தெரியுமா?

*திருமூலர்:* ஆதியில்லாதவன் அவன்; அநாதி. அந்தக் கற்பக விருட்சத்துக்கு வேர் இன்னது என்று யாரும் உணர்ந்தார் இல்லை; நானும் உணர்ந்திலேன்.

*அடியார்;* நீங்கள் பாடத் தொடங்கினீர்க்ளே! ஒன்றும் தெரியாது என்று சொல்லும் நீங்கள் எதைத்தான் பாடப் போகிறீர்கள்?

*திருமூலர்:* அவனைப் பற்றித்தான் சொல்லப் போகிறேன். அவனுடைய வேரை அறியாமல் விளம்பத் தொடங்குகிறேன். அதனை அறிந்துவிட்டால் விளம்ப இயலாது: 'கண்டவர் விண்டிலர்' என்று கேட்டதில்லையா?

*அடியார்:* அதன் வேரை அறியாமல் எப்படி விளம்ப முடியும்?

*திருமூலர்:* எல்லை கட்டி இன்னதுதான் என்று சொல்ல இயலாதேயன்றி, அரைகுறையாகக் கண்ட அளவில் சொல்ல இயலாதா?' கடல் கண்டோம்' என்றால், 'கடல் முழுவதையும் கண்டோம்' என்றா பொருள்? அவரவர்கள் ஆற்றலுக்கும் சந்தர்ப்பத்துக்கும் ஏற்றபடி கடலின் பகுதியைக் காண்கிறார்கள். நானும் அவ்வாறே கண்டதை விளம்புகிறேன். என் சொல்லுக்கு

அடங்கிய அளவுடைய பொருள் அன்று அது. ஆயினும் நான் அதைப்பற்றி விளம்புகின்றேன்.

*ஆர்அறி வார்எங்கள் அண்ணல் பெருமையை!*
*ஆர்அறி வார்அந்த அகலமும் நிகளமும்!*
*பேர்அறி யாத பெருஞ்சுடர் ஒன்று; அதன்*
*வேர்அறி யாமை விளம்புகின் றேனே.*

*(எங்கள் பெருமானது பெருமையை யார் அறிவார்கள்? அவனுடைய அகலத்தையும் நீளத்தையும் யார் அறிவார்கள்? கடவுள் பலர் அல்ல. பேர் இன்னது என்பதை அறியாத பெரிய சுடர் ஒன்றுதான் உண்மைக் கடவுள்; அச்சுடரின் மூலத்தை அறியாமல் நான் இவற்றைச் சொல்லுகிறேன்.*

*அண்ணல்-தலைவன். நிகளம்-நீளம். அறியாமை-அறியாமல்.)*

இறைவன் அருளால் பேரறிவு பெற்றவரும், ஆகமத்தின் நுட்பங்களைத் தமிழிலே பாடப் புகுந்தவருமாகிய திருமூலரே அவையடக்கமாக, ''வேர் அறியாமை விளம்புகின்றேனே'' என்று சொன்னால் ஏனையோர்களைப் பற்றி என்ன சொல்வது!

★

இறைவனுடைய திருவருளில் ஈடுபட்டு இன்புறு பவர்கள் மற்ற மனிதர்களைப் போலவே உடம்புடன் உலகில் வாழ்கிறார்கள். அவர்களுக்கு இரண்டு நிலைகள் உண்டு. இந்த உலகையும் உடலையும் மறந்த இன்பத்தில் கரைந்து நிற்கும் நிலை ஒன்று. அந்த நிலையிலிருந்து மீண்டும் உலக நினைவுக்கு வரும் நிலை ஒன்று. உலக நினைவுக்குவரும்போது அவர்கள் பேசுகிறார்கள்; அந்தப் பேச்சில் அவர்கள் அநுபவித்த இன்பத்தின் வாசனை இருக்கும்; பெருமிதத்தோடு பேசுவார்கள். உலக நினைவும் இருப்பதால் உலகத்தோடு ஒட்டியும் பேசுவார்கள்; அப்படிப் பேசும்போது அது குணமும் பணிவும் நிறைந்த பேச்சாக இருக்கும். நன்றாகக் கனிந்த பழத்தில் கண்ணுக்குத் தெரியாதபடி உள்ளே கனிந்த சாறு நிறைந்திருக்கும்; அது கனிந்ததை அதன் நிறத்தில் உண்டான மாறுபாடு தெரிவிக்கும். மாம்பழம் கனிந்தால் அதன் புளிப்பு இனிப்பாக மாறுகிறது; அது உள் மாற்றம். அப்படியே இறைவன் திருவருளில் ஒன்றி இன்புற்றவர்களுக்கு அவர்கள் மாத்திரம் உணரும் அனுபவம் ஏற்படும். அதோடு

புறத்தாருக்கும் புலனாகும்படி அவர்களுடைய இயல்புகளில் மாறுபாடு உண்டாகும்; நெகிழ்ச்சியும் பணிவும் இனிமையும் அவர்களுடைய பேச்சிலும் செயலிலும் அமையும். அவை பழக்கத்தால் அமைவன அல்ல. அவர்கள் பெற்ற அநுபவத்தின் முதிர்ச்சி அந்த நிலையைப் புறத்திலும் உண்டாக்கும்.

இறைவனுடைய திருவருளில் ஈடுபட்டவர்களின் வாக்கில் இந்த இயல்புகள் யாவும் வெளியாகும். அவர்கள் உண்முகமாக இன்றி வெளி முகத்துக்கு வந்தவுடனே, பாடும்போது தாம் பெற்ற இன்பத்தைப் பெருமிதத்தோடு பாடுவார்கள். கருடன் தன் இரு சிறகுகளையும் விரித்து வானத்தில் எந்தப் பறவையும் செல்லாத உயரத்தில் மிதப்பதுபோல இருக்கும் அந்த நிலை. சற்றே கண் விழித்துப் பார்த்து உலகத்தவர் படும் வேதனைகளை உளம் கொள்ளும்போது அவர்கள் உள்ளத்தில் கருணை பிறக்கும். அப்போது மக்களைப் பார்த்து, ''வீணாகக் கெட்டுப் போகாமல் இப்படிச் செய்யுங்கள்'' என்ற உபதேசம் பிறக்கும். பின்னும் உலக நினைவு உள்ளத்திலே பதிந்து மற்ற மக்களோடு ஒருவராகக் கலந்து பழகும்போது, தாம் யாவரினும் இழிந்தவர்களைப் போலப் பேசும் பணிவு பிறக்கும். ''பணியுமாம் என்றும் பெருமை'' என்ற குறளுக்கு இலக்கியமாக இருப்பார்கள். பின்னும் மிகுதியாக உலகத்தில் நிலையை உணரும்போது; அவர்கள் மற்ற மக்களோடு தம்மையும் ஒருவராக வைத்து அவர்கள் செய்யும் குற்றங்களைத் தம்முடையனவாகவே ஏறட்டுக்கொண்டு இரங்குவார்கள். முதல் நிலையில் நின்று பேசும் பெருமிதப் பேச்சுக்கும், இந்த நிலையில் நின்று பேசும் இரக்கப் பேச்சுக்கும் உள்ள வேறுபாடு பெரிதாகத் தோற்றும். நிலத்தில் மலையும் மடுவும் உண்மையாகவே பலகாலம் இருக்கும் மேடு பள்ளங்கள். அத்தகையன அல்ல இந்த நிலைகள். கடற்பரப்பில் திடீரென்று பேரலையும் அதையடுத்துக் குழிவும் உண்டாவது அடுத்த கணத்தில் மாறிச் சமம் பெறும். உண்மையில் இருப்பது அந்தச் சம நிலைதான்.

திருமூலர் இந்த அவையடக்கம் கூறும் நிலை பணிவான நிலை. இது அவருடைய குணச் சிறப்புக்கு அடையாளமாக நிற்கிறது.

திருமந்திரத்தில் பாயிரத்தில் வரும் பாடல் இது.

# சூரிய காந்தம்

உபாத்தியாயர் விஞ்ஞானத்தைப் போதிக்கிறார். ஒளியைப் பற்றிச் சொல்லித் தருகிறார்; கண்ணாடி மூலமாக ஒளிக் கதிர்கள் எப்படிப் பாய்கின்றன என்பதை விளக்குகிறார். புடைத்திருக்கும் பூதக் கண்ணாடியில் கதிர்கள் பாய்ந்தால் அவை ஓரிடத்தில் ஒன்றுபட்டு அதிக உஷ்ணத்தை உண்டாக்கும் என்று ஒரு செய்தியைச் சொல்கிறார். அவர் அதை நிரூபித்துக் காட்டுகிறார். எப்படி?

பூதக்கண்ணாடியை எடுத்துக்கொண்டு சிறிது பஞ்சை அதன் முன் வைக்கிறார். பஞ்சு ஒன்றும் ஆகாமல் தன் இயல் பிலே இருக்கிறது. அதே பஞ்சைச் சூரியன் ஒளிவீசும் இடத்துக்குக் கொண்டுபோய் அதே பூதக் கண்ணாடிக்குமுன் வைத்துக் காட்டுகிறார். கதிர்கள் ஒன்றுபடும் இடத்தில் வைக்கும்போது பஞ்சு பற்றி எரிகிறது. விஞ்ஞான உண்மை தெரியாதவர்களுக்கு இது செப்பிடுவித்தையைப் போலத் தோன்றும்.

பழைய காலத்திலும் இந்த உண்மை தமிழர்களுக்குத் தெரிந்திருக்கிறது. பூதக் கண்ணாடியைக் கதிரவனுக்குமுன் வைத்துக்கொண்டு அதன் எதிரே பஞ்சை வைத்தால் அது எரியும் என்று தெரிந்து கொண்டிருந்தார்கள்.

பூதக் கண்ணாடிக்குச் சூரியகாந்தம் என்று பெயர். சூரியனுடைய கதிர்களை ஓரிடத்தில் செறிந்து கூடச் செய்வத னால் இந்த நிலை உண்டாகிறது. இதனையே சூரியனுக்கு முன்னே சூரியகாந்தம் நெருப்பை உண்டாக்கும் என்று பழங்காலத்தில் சொன்னார்கள்.

சூரிய காந்தம் பஞ்சை இயல்பாகவே எரித்துவிடாது. சூரியனுடைய சந்நிதியில்தான் அது சுட்டு எரிக்கும்.

இந்த உண்மையை உபமானமாக வைத்துக் குருவின் பெருமையை விளக்குகிறார் திருமூலர்.

★

மும்மலங்களால் பிணிப்புண்ட ஆன்மா பிறப்பு இறப்புக்களில் உழன்று துன்பத்தை அடைகின்றது. மலங்களி னின்றும் நீங்கி ஞானம் பெற்றால் பழவினைப் பற்றறுத்து ஆன்மா இறைவனோடு ஒன்றி முத்தியின்பத்தை அடையும். மலங்கள் பஞ்சுபோல எரிந்துவிட்டால் இன்பத்தைப் பெறும். அந்த மல நீக்கத்துக்கு அறிவு காரணம். ஆனால் இயல்பான அறிவு மாத்திரம் இருந்தால் மலம் நீங்காது. வெறும் சூரியகாந்தத்தைப் பஞ்சின் முன் காட்டினால் பஞ்சு எரியாது. குருவினுடைய சந்நிதானத்தில் ஆன்மாவுக்கு அறிவு விளக்கம் உண்டாகும். அப்போது மலங்களெல்லாம் பஞ்சு போல எரிந்து விடும். ஆன்மாவுக்கு அறியும் ஆற்றல் உண்டு. ஆனால் அது தானாக அறியாது. அறிவிக்க அறியும் இயல்பை உடையது. அது. குருவின் திருவருளால் அந்த அறிவு தெளிவும் விளக்கமும் பெற்று முதிர்ச்சி அடைகிறது. அந்த ஞானாக்கினியிலே மலங்கள் மூன்றும் முப்புரம் வெந்ததுபோல வெந்து ஒழிகின்றன.

> சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவே;
> சூரிய காந்தம்சூழ் பஞ்சைச் சுடமாட்டா;
> சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்,
> ஆரியன் தோற்றமுன், அற்ற மலங்களே.

*(சூரிய காந்தமும் அதனை வந்து சாரும் பஞ்சையும்போல உள்ளன அறிவும் மலங்களும்; சூரிய காந்தக் கற்கள் தம்பால் வந்த பஞ்சை இயல்பாகச் சுடும் ஆற்றல் பெறா; ஆனால் சூரியன் முன்னிலையில் சுடும்; அதுபோல் ஞானாசிரியன் முன்னே தோற்றினால் மலங்கள் அற்றுவிடும்.*

*போலவே என்றது அவாய் நிலையாய், போல உள்ளன, அறிவும் மலங்களும் என்பவற்றை அவாவி நின்றன. மாட்டா என்ற பன்மை சூரியகாந்தக் கற்கள் பலவற்றை நினைந்து வந்தது.*

*ஆரியன்-ஞானாசிரியன். முன்தோற்ற. மலங்கள் அற்ற; அற்ற-அற்றன. உறுதிபற்றி 'அற்ற' என்ற இறந்த காலத்தாற் சொன்னார்; 'அங்கே போனால் தொலைந்தான்' என்றது போல.)*

'வெற்று அறிவினால் மலங்களைப் போக்குவது என்பது இயலாது. குருவின் திருவருளால் பரஞானம் தலைப்டும் போது மல நீக்கம் உண்டாகும்' என்பதை இது தெளிவிக் கின்றது.

இது முதல் தந்திரத்தில் வரும் உபதேசம் என்னும் பகுதியில் 5-ஆம் பாட்டு.

★

# உப்பும் அப்பும்

அலைகள் மோதி வீசும்போது எவ்வளவு தெளிவாக அந்த நீர் இருக்கிறது! பொய்கை நீருக்கும் அதற்கும் வேறுபாடே இல்லையென்று தோன்றுகிறது. ஆனால் ஒரு கை எடுத்து வாயிலே விட்டுக்கொண்டால், ''சீசீ! உப்பு'' என்று உடனே துப்பி விடுகிறோம். கடல் நீர் உப்பாக இருக்கிறது என்பதைச் சுவையால் உணர்கிறோம்; கண்ணால் காண இயலாது.

கடல் நீரில் உள்ள உப்பைக் கண்ணால் காண வழி இருக்கிறது. நம்முடைய வீட்டில் உப்பு இல்லையா? கடையில் விற்கவில்லையா? அதைக் கண்ணில் நன்றாகக் காணுகிறோமே. அந்த உப்பு உப்பளத்தில் விளைந்த உப்பு.

உப்பளத்தில் விதை போட்டு உப்பை விளைக்கிற தில்லை; பாத்தி பாத்தியாகக் கட்டிக் கடல் நீரைப் பாய்ச்சித் தேக்கி வைக்கிறார்கள். சூரியனுடைய வெயிலில் நீர் மெல்ல மெல்ல ஆவியாக மாறுகிறது. நீரிலுள்ள உப்பு மாத்திரம் கீழே படிந்து உருப்பெற்று வெள்ளையாக நிற்கிறது. அதை வாரிக் கொண்டு போய் விற்கிறார்கள்.

கடல் நீரில் உப்பு என்னும் சுவை கண்ணாற் காண இயலாமல் இருந்தது. சூரியன் தன் வெம்மையால் அதைக் காணும்படி செய்தான். அதுவே உப்பு என்ற பேர் பெற்றது.

அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற்று உருச்செய்தது.

{*கடல் நீரில் மிகுதியாக உள்ள உவர்த்தன்மை சூரியனது வெப்பத்தால் (நீர் ஆவியாக மாற) எஞ்சி நின்று, உப்பு என்று தனியே பெயர் பெற்று உருவத்தையும் எடுத்தது.*

*அப்பு-நீர்; இங்கே கடல் நீர். கூர்மை-மிக்குள்ள தன்மை; என்றது உவர்ப்பை. உருச் செய்தது-உருவை மேற்கொண்டது.)*

★

ஒரு படி உப்பை எடுத்து ஒரு படி நீரிலே போடு கிறோம். அப்போது உப்பின் உருவம் மறைந்துவிடும். அந்த நீர் ஒரு படியாகத்தான் இருக்கும் உப்பும் தண்ணீரும் ஒன்றுபட்டு நிற்கும். தண்ணீரிலே உப்புக் கரைந்து போய், உப்பென்னும் தோற்றம் மாறித் தண்ணீர் என்ற தோற்றமே நிற்கும்.

அவ்வுரு
அப்பினிற் கூடியது ஒன்று ஆகும்.

*(உப்பென்னும் அந்தவுருவம் தண்ணீரில் சேர்ந்ததனால் அதனோடு ஒன்றாகிவிடும்.*

*அவ்வுரு-கண்ணுக்குத் தோற்றும் உருவாக நின்ற அந்த உப்பு. அவ்வுரு அப்பினிற் கூடியதாகி ஒன்றாகும்; கூடி அது என்றும் பிரிக்கலாம்.)*

★

உடம்பெடுத்துக் கொண்டு வாழ்வது உயிர். உலகமாகிய பாத்தியில் வினையாகி வெம்மையிலே உடம்பாகிய உருவம் எடுக்கிறது. அங்கும் இங்கும் திரிந்து பிரபஞ்ச வியாபாரத்தில் ஈடுபடுகிறது. எப்போதும் உடம்போடே காணப்படுகிறது; தூல உடம்பில் இராதபோதும் சூக்கும உடம்பாகிய சட்டையை அது கழற்றுவதே இல்லை.

இப்படி உள்ள சீவன் இறைவன் திருவருளினால் சிவஞானம் பெற்றுப் பாசக்கட்டை அறுத்துவிடுகிறது. பாத்தியிலும் மூட்டையிலும் பாத்திரங்களிலும் உருவத்தோடு சென்று வந்து கிடந்த உப்பு ஒருநாள் தண்ணீரில் கரைந்து விடுவதுபோல, பலபல உருவங்களை யெடுத்து வாழும் உயிர் பாசக்கட்டை அறுத்தபோது இறைவனோடு ஒன்றிவிடுகிறது; அவனிலே அது கரைந்துவிடுகிறது. உப்பை நீர் தனக்குள் அடக்கிக் கொண்டது போலச் சிவன் சீவனைத் தனக்குள் அடக்கிக் கொள்கிறான். சீவனுக்குத் தனியே உருவம் இல்லாமல் மறைந்து போகிறது. வெள்ளை நிறமும் வடிவும் பெற்றிருந்த உப்பு நீரினையே தனக்குரிய வடிவமாகப் பெற்று

விடுகிறதுபோலச் சீவன் சிவ சொரூபமாகி நிற்கிறது. அதுவே அத்துவித முத்தி.

செப்பின்இச் சீவன் சிவத்துள் அடங்குமே.

*(சொல்லப் புகுந்தால், வெவ்வேறு உடம்போடு வாழும் இந்தச் சீவன் சிவத்துக்குள் அடங்கித் தன் தோற்றம் இழந்து ஒன்றிவிடும்.*

*செப்பின்-சொன்னால். யாவரும் காண உடம்பெடுத்து உலாவுவதால் இச் சீவன் என்று அண்மைச் சுட்டாற் சொன்னார்.)*

இறைவனோடு ஒன்றுபடுவதே முத்தியாகும். அந்த நிலையில் சீவன் தன் இயல்பை இழந்து, சார்ந்த பொருளாகிய இறைவனுடைய மயமாக நிற்கும்;

அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற்று உருச்செய்தது; அவ்வுரு
அப்பினிற் கூடியது ஒன்றுஆகு மாறுபோல்
செப்பின்இச் சீவன் சிவத்துள் அடங்குமே.

முதல் தந்திரத்தில் உபதேசம் என்னும் பகுதியில் வரும் 24-ஆம் பாட்டு இது.



# ஊரெல்லாம் கூடி

அவன் மனிதன் என்ற அளவில் வாழ்ந்தான். நாலுபேர் கவனித்து வந்துகூடும்படி அவனிடம் ஓர் ஆற்றலும் இல்லை. ஊரில் வாசம் செய்யும் மக்களில் அவனும் ஒருவனாக இருந்தான். வீட்டில் இருப்பவர்களுக்கு அவனைப் பற்றிய சிரத்தை இருந்தது. அவனுடைய மனைவி அவனைக் கணவனென்று கொண்டாடி இன்பம் பெற்றாள். அவன் மக்கள் அவனைத் தந்தையென்று அழைத்தார்கள்.

ஒரு நாள் திடீரென்று ஊரார் யாவரும் சேர்ந்து அவனைக் கவனிக்கும்படி நேர்ந்தது. அதற்கு முன்பு அவனுடைய சொந்த வீட்டில் உள்ளவர்கள் அவனை அறிவார்களே ஒழிய மற்றவர்களுக்கு அவனைப்பற்றி மிகுதியாகத் தெரியாது. அவன் கிழப்பருவம் எய்தி நோய் வாய்ப்பட்டுக் கிடந்தான். அப்போது வீட்டில் உள்ளவர்களுக்குக்கூட முன்பு அவனிடம் வைத்திருந்த கவனம் குறைந்தது.

அவன் இன்று இறந்துவிட்டான். ஊரில் இருப்பவர்கள் யாவரும் துக்கம் கேட்க வந்துவிட்டார்கள். அவன் உயிரோடு இருந்தபோது, ''ஒரு பயலாவது நம்மிடம் வந்து, இருக்கிறாயா, போய்விட்டாயா என்று விசாரிக்கிறானா?'' என்று ஏங்கியிருக்கலாம். இப்போது ஊர் முழுவதும் கூடியிருக்கிறது. அதைப் பார்த்து மகிழ்ச்சியடைய அவன் எங்கே?

ஊரெல்லாம் கூடி ஒவென்று கதறுகிறார்கள். அழுகிற அத்தனை பேரும் அவன் போனமையால் தாம் பெற வேண்டியதை இழந்துவிட்டார்களா? அப்படி ஒன்றும் இல்லை. அவனுடைய மனைவி ஒருத்திதான் தன் மங்கல வாழ்வு போயிற்றே என்று வருந்துவாள். மற்றவர்களில் யாருக்கும் அவன் போனதனால் நஷ்டம் ஒன்றும் வந்துவிடவில்லை. ஆனாலும் எல்லோரும் சேர்ந்து அடுத்த ஊருக்கும் கேட்கும்படி

அழுகிறார்கள். அவன் இறந்து போனதற்கு வேறு விளம்பரம் வேண்டியதே இல்லை.

மற்றச் சமயங்களில் ஊரினர் ஒன்று கூடுவது சந்தேகம்; ஆயிரம் கட்சி பேசுவார்கள். கல்யாணத்துக்குப் போகா விட்டாலும் இழவுக்குப் போகாமல் இருக்கக் கூடாது என்று சொல்வார்கள்; அதனால் ஊரே இப்போது கூடியிருக்கிறது.

ஊர்எலாம் கூடி ஒலிக்க அழுதிட்டு.

*(ஊரில் உள்ள யாவரும் கூடி ஒலி எழும்படியாக அழுது.)*

★

''அதோ வருகிறாரே, அவர் யார்?''

''அவரை உங்களுக்குத் தெரியாதோ! அவர்தாம் வைரவநாத பிள்ளை.''

''ஓ அப்படியா! நான் அவரைப் பார்த்ததில்லை''

இப்போது கண்ணால் பார்க்கிற வைரவநாதபிள்ளை நெட்டையாய்க் கறுப்பாய் இருக்கிறார். அவர் வடிவம் அப்படி இருக்கிறது. அதற்குப் பேர்தான் வைரவநாத பிள்ளை.

''முத்துக்கிருஷ்ணப்பருக்கு அசௌக்கியமாமே!''

''ஆமாம்; அவர் எங்கேயோ விழுந்துவிட்டார்; காலில் காயம் பட்டுவிட்டது.''

விழுந்தது அவர் உடம்புதான். முத்துக்கிருஷ்ணப்பர் என்ற விலாசம் அந்த உடம்புக்குத்தான்.

''கிருஷ்ணனுக்கும் அவன் தம்பி ராமனுக்கும் வித்தியாசம் தெரியவே இல்லை; ஒரே மாதிரி இருக்கிறார்கள்.''

''கொஞ்சம் கவனித்துப் பார்த்தால் வித்தியாசம் தெரியும். கிருஷ்ணன் சற்றே கனமானவன்; உயரங்கூட ஓரங்குலம் அதிகம்.''

கிருஷ்ணனென்றும் ராமனென்றும் பேசும் பேச்செல்லாம் அந்த உடம்புகளைப் பற்றியவையே.

இப்படி உயிருடன் வாழும் ஒவ்வோர் உடம்புக்கும் ஒரு பேர் உண்டு; ஒரு வீடு உண்டு; அந்த வீடு உள்ள ஒரு வீதி

உண்டு; அந்த வீதியைக் கொண்ட ஊர் ஒன்று உண்டு. இன்ன ஊரில் இன்ன வீதியில் இன்ன வீட்டில் இன்ன பேருடையவர் என்று பூரண விலாசத்தை ஒவ்வொருவரும் பெற்றிருக்கிறார்கள். அந்த விலாசம் உடையவர்கள் இறந்துபோனால் அவர்கள் அத்தனை பேருக்கும் தனித் தனியே வழங்கின பேர்கள் மாறிவிடுகின்றன. அத்தனை உடம்புகளுக்கும் பேர் வேறு, ஊர் வேறு என்று இருந்தது போய், ஒரே பேர் வந்துவிடுகிறது. அந்த அருமையான பெயர் என்ன தெரியுமா? பிணம் என்பதே. முன்பு பல பேர்களைச் சொல்லி அழைத்தவர்களே இப்போது இந்தப் பேரை இட்டு அழைக்கிறார்கள்.

பவளசாமி. பாணராயர் வாழ்ந்த காலத்தில், நாலுபேர் தூக்கும் பல்லக்கினால் போனார்; ''அதோ மணியகாரர் பவளசாமி பாணராயர் போகிறார்'' என்றார்கள். அவர் இறந்துபோய் அதே நாலு பேர் தூக்கும் பச்சைப் பல்லக்கில் போகிறார். அப்போது, ''யார் போகிறார்கள்?'' என்றால், ''பிணம் போகிறது'' என்றுதான் சொல்வர்கள். அதுவரையில் அந்த உடம்புக்கு வழங்கின பேர் இப்போது செல்லாமற் போய்விடுகிறது.

பேரினை நீக்கிப் பிணம்என்று பேர்இட்டு.

★

இறந்த பிறகு அந்தப் பிணத்தைக் கொண்டுபோய்க் கொளுத்திவிடுகிறார்கள். சூரை முதலிய முள்ளுச்செடிகள் வளரும் சுடுகாட்டில் கொளுத்திவிடுகிறார்கள். அதற்கு முன் அந்த உடம்பால் பலவகையில் இன்பமும். ஊதியமும் பெற்றவர்கள்கூட அதைத் தொட அஞ்சுகிறார்கள்; அருவருக் கிறார்கள். தம்மோடு பழகிய அந்த வடிவத்தை ஒரு மாதம் இரண்டு மாதம் வைத்திருக்கிறார்களா? எவ்வளவு விரைவில் அதை வீட்டிலிருந்து எடுத்துச் கொண்டு போகலாம் என்றே நினைக்கிறார்கள்.

அந்த மனிதரே கட்டிய வீடு அது. ஆராய்ந்து ஆராய்ந்து கருவிகளை வாங்கிச் சிந்தித்துச் சிந்தித்துக் கட்டினார். தாம் சாய்ந்து கொள்ளச் சாய்மானத் திண்ணை, தாம் படுத்துக்கொள்ள வசதியான அறை, குழந்தைகளுடன் விளையாடக் கூடம், தாம் நீராட எல்லா வசதிகளும் உள்ள ஸ்நான அறை-இப்படி

யெல்லாம் வைத்துக் காட்டினார். அந்த உடம்பு இவ்வளவை யும் பயன்படுத்திக் கொண்டது. இப்போது அது வீட்டில் வைக்கத் தகாதது என்று வெளியே கொண்டுபோகத் திட்டம் போடுகிறார்கள்! வேறு வீட்டுக்கு அன்று; காட்டுக்கு, மரம் அடர்ந்த காடும் அன்று; சூரை படரும் சுடுகாட்டுக்கு. அட மனித வாழ்வே! அங்காவது அதைப் போற்றிப் பாதுகாக்க ஏற்பாடு செய்கிறார்கள்? அந்த வடிவமே அழிந்து ஒழியும்படி சுட்டு விடுகிறார்கள். மறு படியும் எழுந்து வீட்டுக்கு வந்து விட்டால் என்னசெய்வது என்ற பயமா?

சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு.

*(சூரைபடர்ந்த சுடுகாட்டிற்குக் கொண்டுபோய்ச் சுட்டு விட்டு.)*

*சூரை-பாலை நிலத்திலும் சுடுகாட்டிலும் படரும் ஒரு வகை முட்செடி. காடு என்றது சுடுகாடு. அம்-சாரியை. அழகிய என்று பொருள் செய்து, இழிப்புக் குறிப்பாகவும் கொள்ளலாம். அழகான சூரைக்காட்டுக்குக் கொண்டு போகிறார்கள்.)*

★

அவரைச் சுட்டுவிட்டார்கள். பாவம்! மார்ச்சு மாதம் தொடங்கிவிட்டாலே அவருக்குச் சூரிய வெப்பம் தாங்காது; கோடைக்கானல் பங்களாவுக்குப் போய்விடுவார். வீட்டிலே உள்ள மின்சார விசிறிக்குக் கணக்கே இல்லை; எப்போதும் சுழன்றபடியே இருக்கும். கொஞ்சம் வெப்பமான காற்று வீசினால், ''என்ன அனல் காற்று!'' என்று தவிப்பார். அவரை ஆம், அந்த வெப்பத்தைத் தாங்காத உடம்பைத்தான் - இப்போது சூரையங் காட்டிலே தீ மூட்டிச் சுட்டுவிட்டார்கள். பிறகு சுட்டவர்கள் என்ன செய்கிறார்கள்? குளிர்ந்த தண்ணீரில் மூழ்குகிறார்கள்! அந்த உடம்பு வெய்ய தீயில் வேகிறது; இந்த உடம்புகள் குளிர்ந்த நீரில் மூழ்குகின்றன!

அதற்குப் பின்பு இரண்டு மூன்று நாள் வீட்டிலுள்ளவர்கள் இறந்தவரைப்பற்றி அடிக்கடி பேசினார்கள். பிறகு அவரைப் பற்றிய பேச்சுக் குறைந்தது. ஆண்டுக்கு ஒருமுறை நினைத் தார்கள். கடைசியில் அடியோடு மறந்து போனார்கள்.

இவர்கள் கிடக்கட்டும். ஊரிலுள்ள அத்தனை பேரும் கூட்டமாக வந்து ஒலிக்க அழுதார்களே, அவர்கள் செய்தி

என்ன? உயிரோடு இருக்கும்போதே அவரைக் கவனிக்காத வர்கள் இறந்த பிறகா கவனிப்பார்கள்? நீரில் மூழ்கி அவர் நினைப்பை அழித்தவர்கள்போல, தங்கள் வீடு சென்றவுடன் அந்தப் பிணத்தைப் பற்றி நினைப்பதையே விட்டுவிட்டார்கள்.

செத்துப்போனவர்கள் சொப்பனத்தில் வருவது கூடா தென்று, நினைக்கவே பயப்பட்டார்கள். நினைப்பதுீ கூடா தென்றே திட்டமிட்டு நினைப்பொழிந்தார்கள்.

*நீரினில் மூழ்கி நினைப்புஒழிந் தார்களே!*

*(நினைப்பு - நினைப்பை.)*

★

மனிதனுடைய உடம்பு உயிர் இருக்குமளவும் போற்று வதற்குரியது. உயிர் ஒழிந்தால் அது அருவருப்பதற்கு உரியதா கிறது. அதை வைத்துக்கொண்டு அதன் நிலையாமையை உணர்ந்து கொள்ளாமல் அதைப் போற்றிப் பாதுகாப்பதே முடிவான பயனென்று எண்ணி வாழும் மக்களைப் பார்க்கும் போது திருமூலருக்கு இரக்கம் உண்டாகிறது.

ஊர்எலாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணம்என்று பேர்இட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்புஒழிந் தார்களே!

முதல் தந்திரத்தில் யாக்கை நிலையாமை என்னும் பகுதியில் உள்ள 3-ஆம் பாட்டு இது.

★

# காக்கையின் உபதேசம்

உடம்பை எடுத்த அனைவருக்கும் பசி என்பது பெரிய பிணி. அதைப் போக்கிக்கொள்ள ஒவ்வொருவரும் பாடுபடு கின்றனர். உடம்போடு பிறந்தது பசி. பசியைப் போக்கும் தானத்தைக் காட்டிலும் சிறந்தது வேறு ஒன்றும் இல்லை.

''உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே''

என்பது புறநானூறு.

பணக்காரருக்கு ஒரு பசி, ஏழைக்கு ஒரு பசி எனபது இல்லை. பசி யாவருக்கும் பொதுவானது. பசித்தவன் யாராக இருந்தாலும் அவனுக்குச் சோறிடுவது சிறந்தது.

''அவர் எனக்குத் தெரியாதவர்; இவர் ஏனக்குத் தெரிந்தவர்'' என்ற வேறுபாடே இன்றி அ்ன்னதானம் செய்யவேண்டும்.

ஆர்க்கும் இடுமின்; அவர்இவர் என்னன்மின்.

*(பசித்து வந்தார் யாரானாலும் அன்னம் இடுங்கள்; அவர் இவர் என்று வேறுபாடு கருதவேண்டாம்.)*

உண்ணும்போது பிறருக்கும் இட்டு உண்ணுவதே இந்நாட்டு மரபு. தம்முடைய வீட்டில் சோறு சமைக்க உலையில் பானையை வைப்பதே, வந்த விருந்தினர்களுக்கு உணவிட வேண்டு மென்பதற்காக. யாரும் விருந்தாளி இல்லாமல் இருந்தால், ''நாமே சமைத்து நாமே உண்பதற்கா பிறந்தோம்? இன்று உலை வைக்கவேண்டாம்'' என்று இருப்பார்களாம்.

''தமக்கென்று உலையேற்றார்''

என்று ஒரு புலவர் பாடுகிறார். ஆகவே விருந்தோடு உண்பதையே உணவாகக் கருதுவது சான்றோர் இயல்பு.

''அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே''*

என்று இளம் பெருவழுதி என்ற பாண்டியன் கூறுகிறான்.

உணவு சமைத்த பிறகு விருந்தினர் யாரும் இல்லாவிடின், யாரேனும் வரமாட்டார்களா என்று அவர் வரவை எதிர்நோக்கிக் காத்திருப்பார்கள். விருந்தினர் வந்தால் அவர்களுடன் இருந்து உண்ணுவார்கள்.

''செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பார்''

என்பது வள்ளுவர் வாக்கு.

பார்த்துஇருந்து உண்மின்.

*(விருந்தினர் வருவாரா என்று பார்த்து, யாரேனும் வந்த பிறகு அவருடன் இருந்து உண்ணுங்கள்.)*

'இது நாம் பலகாலமாகச் சேமித்து வைத்தபொருள் அல்லவா? இதை இப்படிக் கரைத்து விடலாமா?' என்ற எண்ணம் உடையவர்கள் அறம் செய்யமாட்டார்கள்; அந்தப் பொருளை அவர்களும் உண்ணாமல் இழந்து விடுவார்கள்.

''ஊரெல்லாம் புது அரிசிதான் சமைக்கிறார்கள். நாம் இரண்டு வருஷத்துப் பழைய அரிசியைப் பாதுகாத்து வைத்திருக்கிறோம். இதைக் கண்டவர்களுக்கு வடித்துக் கொட்டுவதா?'' என்று நினைக்கும் நினைப்புச் சான்றோர்களுக்கு இராது.

பழம்பொருள் போற்றன்மின்.

*(பலகாலமாக ஈட்டி வைத்துப் பாதுகாக்கும் பழம்பொருளைப் பிறருக்கு உதவாமல் பின்னும் வைத்துப் பாதுகாக்க வேண்டாம்.)*

★

''**நா**ம் நன்றாக வாழவேண்டும். எக்காலத்தும் பசியின்றி வாழவேண்டும்'' என்ற ஆசையோடு, பிறருக்கு அளிக்காமல் சிலர் உண்ணுகிறார்கள். ''பிறருக்கு அளித்தால் குறைந்துவிடும்'' என்று எண்ணுகிறார்கள். அந்தோ பாவம்!

---

*புறநானூறு, 182.

அவர்கள் ஈட்டி வைத்ததை எதிர்பாராதபடி வேறு யாரேனும் அடித்துக் கொண்டு போய்விடுகிறார்கள்; அல்லது அப் பொருளை அநுபவிப்பதற்கு முன்னரே அவர்களுடைய ஆயுள் முடிவடைந்துவிடுகிறது.

ஒரு மூட்டை அரிசியைக் கடையிலிருந்து காசு கொடுத்து வாங்கிச் செல்கிறவன், 'இந்த மூட்டை தீரும் வரையில் நான் நிச்சயமாக உயிரோடு வாழ்வேன்' என்று உறுதியாகச் சொல்ல முடியுமா? அந்த நிலையில் அதைப் பிறருக்கு அளிக்காமல் போற்றிப் பாதுகாப்பதன் பயன் என்ன?

உண்மையில் பிறர் பசியைத் தீர்ப்பவன் எந்தக் காலத்தும் மக்களின் அன்புக்கு உரியவனாவான். அவன் ஒருநாளும் பசி என்று வருந்தும் நிலையை அடையமாட்டான். இம்மையிலும் சரி, மறு பிறவிகளிலும் சரி, அவனுக்குப் பசியினால் தீங்கு வராது.

*''பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்*
*தீப்பிணி தீண்டல் அரிது''*

என்பது திருக்குறள்.

ஆதலின், தமக்குப் பசியினால் ஒருகாலும் துன்பம் வரக்கூடாதென்று உணவுப் பொருளின் மீது வேட்கை யுடையவர்கள், தாம் நினைத்தது பலிக்கவேண்டுமானால் பசித்த வருக்கு இட்டு உண்ணவேண்டும். தமக்குப் பசி வந்துவிட்ட தென்று விருந்தினர் இல்லாமல் விரைவில் உண்ணுதல் அறமாகாது. ''யாரேனும் வந்துவிடப் போகிறார்களே!'' என்று உணவு நேரத்துக்கு முன்பே விரைவில் உண்டுவிட்டுப் பாத்திரத்தை மூடிக் கவிழ்த்து விடுபவர்களைப் பற்றி என்ன சொல்வது? தமக்குப் பசிக்கிற தென்று விரைந்து உண்ணாமல், விருந்தினர் வரவில்லையே என்று பசியோடு காத்திருப்பவர்கள் அறநெறி வழுவாத ஆன்றோர்.

*வேட்கை உடையீர்! விரைந்துஒல்லை உண்ணன்மின்.*

*(உங்கள் பசியைப் போக்கிக்கொள்ளும் ஆசை உடையவர்களே, விருந்தினர் வாரா முன்னர் விரைந்து அவசரமாக உண்ணாதீர்கள்.*

*வேட்கை-விருப்பம். ஒல்லை-விரைவில்.)*

★

சோறு சமைத்தவுடன் இந்த நாட்டில் காக்கைக்கு ஒரு பிடி சோறு போட்டுப் பின்பே உண்ணுவது வழக்கம். காக்கையைக் கா, கா என்று கூப்பிட்டுச் சோறிடுவார்கள்.

காக்கையைக் கூவி அழைத்துச் சோறு இடுவானேன்? நாய்க்குப் போடலாம்; வேறு பிராணிக்குப் போடலாமே! அதில் ஒருண்மை இருக்கிறது. காக்கையின் அருமையான குணம் ஒன்றை நாம் கற்றுக்கொள்ள வேண்டும் . நாம் சோற்றைப் போட்டால் காக்கை வேறு ஒரு பிராணியும் அறியாமல் தனியே வந்து உண்ணுவதில்லை. அது சோற்றுக்கு அருகே வந்து உட்கார்ந்து கா, கா என்று கரையும்; தன் இனத்தாரை அழைக்கும். நாலைந்து காக்கைகள் அதன் ஒலியைக் கேட்டுப் பறந்து வரும். அவற்றோடு சேர்ந்து முன்னே வந்த காக்கை சோற்றைக் கொத்தி உண்ணும்.

நாய் சோற்றுக்கு அலைகிறது. ஆனால் அதன் குணம் நேர் விரோதமானது. உண்ட பிறகு எச்சில் இலையை வீதியில் போடுகிறோம். அதை ஒரு நாய் வந்து பார்க்கிறது. அப்போது மற்றொரு நாய் அங்கே வந்தால் போதும்; இது இலையை விட்டுவிட்டு அதன்மேலே பாயும். மனிதன் உணவு உண்ணும்போது காக்கையைப் போல நடக்க வேண்டுமே ஒழிய, நாயைப் போல இருக்கக்கூடாது. காக்கையைப்போல மற்றவர்களுக்கும் இட்டு உண்ணவேண்டும் என்ற நினைப்பு மற்றச் சமயங்களில் இருந்தால் போதாது, சாப்பிடுவதற்கு முன் அந்த நினைப்பு இருக்க வேண்டும். அதனால்தான் சமைத்தவுடனே காக்கைக்குச் சோறு போடுகிறார்கள்.

*''காக்கை கரவா கரைந்துண்ணும்''*

என்றும்,

*''காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர்''*

என்றும் பெரியோர்கள் அறிவுறுத்துகிறார்கள். திருமூலரும் அதை நினைப்பூட்டுகிறார். ''காக்கை தன் இனத்தைக் கூவி அழைத்து உண்ணுகிறதே! அது எந்தக் காலம்? தெரிகிறதா? நாம் உண்ணுவதற்கு முன் சோறு சமைத்தவுடனே நிகழும் நிகழ்ச்சி அல்லவா அது? அந்தக் காலத்தில் மறவாமல் நினைக்கவேண்டும் உண்மையைக் காக்கை காட்டுகிறது'' என்று அறிவுறுத்துகிறார்.

காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே.

*(காகம் தன் இனத்தையும் கூவி அழைத்து உடனுண்ணும் காலத்தை அறிந்து நீங்களும் அதைப் போல இட்டு உண்ணுங்கள்.)*

சோறு இடுவதற்குரிய தகுதி பசி ஒன்றுதான். பசித்தவன் யாராக இருந்தாலும் அவனுக்கு இடவேண்டும். அவன் இன்னான் இனியானென்று ஆராய்ச்சி பண்ணுதல் கூடாது. பசித்தவர் வந்து சோறு என்று கேளாவிட்டாலும், நம் வயிறு பசிக்கும்போது பிறரும் இப்படிப் பசியுடையவர் இருப்பாரே என்று அவரைத் தேடவேண்டும். மற்றச் சமயங்களில் பசித்தோரை நினைக்காவிட்டாலும், நம் வயிறு பசியை நினைவூட்டும்போது, நம் வயிற்றுப் பசியை மாத்திரம் எண்ணாமல், அதுவே நினைப்புக் குறியாகக் கொண்டு பிறர் பசியை எண்ணி, பசியுடையார் யாரேனும் வரமாட்டார்களா என்று பார்த்து, வந்த பிறகு உண்ண வேண்டும். இதைப் பறவையாகிய காக்கை அறிவுறுத்துகிறது.

ஆர்க்கும் இடுமின்; அவர்இவர் என்னன்மின்;
பார்த்திருந்து உண்மின்; பழம்பொருள் போற்றன்மின்;
வேட்கை உடையீர்! விரைந்துஒல்லை உண்ணன்மின்;
காக்கை கரைந்துஉண்ணும் காலம் அறிமினே.

இது முதல் தந்திரத்தில் தானச் சிறப்பு என்னும் தலைப்பில் உள்ள பாட்டு.



# அன்பில்லாத் தவம்

பசிபோக வயிற்றுக்கு உண்டு வாழ்வது இயல்பான வாழ்வு. எந்த அளவுக்கு வேண்டுமோ அவ்வளவுக்கு உண்டு வாழவேண்டும். அந்த அளவுக்கு மிஞ்சி உண்பது அறத்திற்கு விரோதம். குறைய உண்டால் உடம்பு மெலியும். தவம் செய்பவர்கள் உடம்புக்கு உரிய காலத்தில் உரிய அளவு உணவு ஊட்டாமல் சில நியமங்களை மேற்கொண்டு விரதம் இருப்பார்கள். உடம்பிலே சோம்பல் உண்டாவதும், கொழுப்பு மிகுதியால் காமம் முதலியன மிகுவதும் உணவினால் ஆவனவென்றறிந்து, அவ்வுணவைக் குறைப்பதனால் அவ்விரண்டினாலும் உண்டாகும் தீங்குகள் குறையும்.

பல நாள் பட்டினி கிடப்பதும், உணவு வகைகளில் மிகக் குறைவானவற்றையே உண்பதும் போல விரதம் பல வகைப்படும். உடல் பருத்துக் கொழுப்பு மிகுதியாவதைக் தடுப்பது மாத்திரம் அன்று; உடல் இளைக்கும்படியாகவே விரதம் இருப்பார்கள்.

''உண்ணாது நோற்பார் பெரியர்''

என்று குறளாசிரியரும் கூறுகின்றார் அல்லவா?

மகாத்மா காந்தியடிகள் தம் உணவில் இத்தனை பொருள்களைச் சேர்த்துக் கொள்வது என்ற வரையறையுடன் இருந்தார். வாரந்தோறும் விரதம் இருப்பதும் மாதந்தோறும் இருப்பதும் முதலிய முறைகள் நம் நாட்டில் உள்ளன. இவை யாவும் உடம்பை ஒறுக்கும் தவத்துக்கு ஆரம்பப் பாடங்கள்.

தவம் என்பது இந்திரிய நிக்கிரகத்துக்குச் சாதனமாக இருப்பது. தாமே நுகர்ச்சிகளைக் குறைத்துக் கொண்டு அதனால் வரும் துன்பங்களை மேற்கொள்வது தவத்துக்கு ஓர் உறுப்பாகும். மனம், வாக்கு, காயம் என்ற மூன்றையும்

அடக்கிச் சாதனம் செய்வது தவத்திற்கு இன்றியமையாதது. மனத்தை அடக்கி அன்பைப் பெருக்க வேண்டும். உரையைக் குறைத்துப் பேசுவது அனைத்தும் இனிமையும் பயனும் உள்ள சொல்லாகப் பேச வேண்டும். உடலால் விளையும் இன்பத்தைப் புறக்கணிக்க வேண்டும்.

இந்த மூன்றிலும் தலைமையானது மனத்தைத் தவநெறியில் பயிற்றல்; அடுத்தது உரைப் பயிற்சி; அடுத்தது புலனடக்கம். மனம் போனபடி கற்பனையும் சிந்தனையும் செய்து கொண்டு உண்ணாவிரதம் இருந்தால் அது தவமாகாது.

மனிதன் ஆற்றவேண்டிய அறங்களில் பொதுவென்றும் சிறப்பென்றும் இருவகை உண்டு. பிறரிடம் அன்புடன் பழகுதல், உபகாரம் செய்தல், ஜீவஹிம்சை செய்யாமை முதலியவை மனிதர்களின் பொதுவான அறம். வருணம், ஆசிரமம் என்ற பேதமின்றி யாவரும் மேற்கொள்ள வேண்டியவை அவை. பட்டினி கிடத்தல், உடம்பை ஒறுத்தல் முதலியவை சிறப்பான அறம். அவை தவம் புரிபவருக்கே உரியவை. தவம் புரிபவர்கள் முதலில் மனித இலக்கணத்தை உடையவராகிப் பிறகு துறவிலக் கணத்தைப் பெறவேண்டும். எந்தப் பாட்டுக்கும் சுருதி இன்றியமையாதது. எந்த மனிதனுக்கும் பொதுவான அறங்கள் மேற்கொள்ளுதல் அவசியம்.

பொதுவான அறம் அல்லது சாமான்ய தர்மங்களைப் புறக்கணித்துவிட்டுச் சிறப்பான அறம் அல்லது விசேஷதர்மங் களை மேற்கொள்வதனால் நல்ல பயன் உண்டாகாது. அஸ்திவாரம் இல்லாத கட்டிடம் நில்லாதது போல மக்களுக்கு இன்றியமையாத பொது அறத்தைப் புறக்கணித்துவிட்டு விசேஷ தர்மங்களைச் செய்பவர் முயற்சி பயன் தராது.

பொது அறங்களில் மிக மிக முக்கியமானது அன்பு. உடம்பும் உயிரும் ஒன்று பட்டு வாழ்வதே அன்பு செய்யத்தான். அன்பு இல்லாவிடில் உயிரும் உடம்பும் ஒன்றியிருப்பதற்குப் பயன் இல்லை.

அன்பைப் புறக்கணித்து உடம்பை ஒறுத்துத் தவம் செய்வதனால் யாருக்கும் நன்மை இல்லை. அந்தத் தவத்தால்

முதலில் பேராற்றல் உண்டாகலாம். ஆனால் முடிவில் அந்த ஆற்றலால் பிறருக்கும் தமக்கும் தீங்கையே உண்டாக்கிக் கொள்வார்கள்.

இராவணன், சூரபன்மன் முதலிய அரக்கர்களும் அசுரர்களும் ஏனைய மக்கள் பெறாத ஆற்றலையும் செல்வத்தையும் பெற்றார்கள். தவம் புரிந்தே அத்தகைய ஆற்றலை அவர்கள் பெற்றார்கள். ஆனால் பிற உயிர்களிடத்தில் அன்பு செய்யவில்லை. தாம் பெற்ற ஆற்றல் அவ்வளவையும் கொண்டு தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் துன்பத்தை இழைத்தனர். விளக்கிலே எண்ணெய் விட்டால் இருளைப் போக்கி ஒளிபரப்பும். எரியும் வீட்டிலே எண்ணெயை ஊற்றினால் பின்னும் படர்ந்து எரிந்து அண்டை அயல் வீடுகளையும் எரித்துவிடும்.

முனிவர்கள் செய்த தவத்தைக் காட்டிலும் கடுமையாகத் தவம் செய்தனர் அசுரர்கள். ஆனால் முனிவர்கள் சர்வஜீவதயை யுடையவர்களாக இருந்தார்கள். அவர்கள் பெற்ற தவ ஆற்றல் அவர்களுக்கு நலம் தந்ததோடு உலகத்துக்கெல்லாம் நற்பயனை உண்டாக்கியது. அசுரர்களோ சுயநலமே கண்ணாக வாழ்ந்தமையால் மற்றவர்களை யெல்லாம் வாழவிடாமல் தாம் மட்டும் வாழ எண்ணினார்கள்; வாழ்வது போலச் சில காலம் வாழ்ந்தார்கள். இறுதியில் அவர்கள் தாம் செய்த தீங்குகளுக்கு ஏற்ற தண்டனையை அடைந்தார்கள்.

சூரபன்மன் செய்த யாகத்தைக் கந்த புராணம் பின்வருமாறு கூறுகிறது

*"வான கத்திடை நிற்புறு சூரபன் மாவாம்*
*தான வர்க்கிறை வாள்கொடே ஈர்ந்துதன் மெய்யின்*
*ஊன்அ னைத்தையும் அங்கிமேல் அவியென ஓங்கிச்*
*சோனை ஒத்ததன் குருதியை இழுதெனச் சொரிந்தான்."*

*(அசுரர் யாகப் படலம், 86)*

தன்னுடைய மெய்யில் உள்ள ஊன் அனைத்தையும் வாளால் அரிந்து தீயினில் அவியாக இட்டானாம். இத்தகைய யாகம் செய்தமையால் அவன் பல அண்டங்களை ஆளும் வலிமையைப் பெற்றான். எல்லாம் இருந்தும் அவனுக்குப் பிற

உயிர்களிடம் அன்பு இல்லை. அதனால் அவன் வலிமை பிறருக்குத் தீங்கை விளைக்கும் வகையில் சென்றது. இத்தகைய தவம் மெய்த்தவம் ஆகுமா? இறைவனுடைய திருவருளைப் பெற வழி ஆகுமா?

திருமூலர் அன்பு இன்றியமையாதது என்பதைச் சொல்ல வருகிறார். இறைவனுடைய திருவருளைப் பெறுவதற்கு இன்றியமையாத உணர்ச்சி அன்பு. அது இன்றித் தம் உடம்பைத் தாமே ஒறுத்து யாகம் புரிந்தும் பயன் இல்லை.

> என்பே விறகாய் இறைச்சி அறுத்திட்டுப்
> பொன்போற் கனலில் பொரிய வறுப்பினும்
> மணியினை எய்தஒண் ணாதே.

பின் எப்படி எய்தலாம்? அன்பினால் எய்தலாம். அன்பு ஒருவர்பால் உண்டானால் அதனுடைய விளைவாகச் சில நிகழ்ச்சிகள் அமையும். அன்புடையார் தம் சிறுமையையும் இறைவ்ன் கருணையையும் நினைந்து உருகுவார்கள். அவர்களுடைய நெஞ்சம் கடினமாக இரா; பிறர் துன்பம் கண்டு குழையும். உருக்கமும் குழைவும் அன்பின் விளைவுகள்.

அன்பினால் உருகியும் அகம் குழைந்தும் இறைவனை எண்ணிப் போற்றினால் தூண்டா மணிவிளக்காக இருக்கும் எம்பெருமானுடைய அருளைப் பெறலாம்; அவனை அடைந்து இன்புறலாம். இயற்கையாகவே ஒளியையுடைய மணியைப் போல இறைவனும் சுயம்பிரகாச முடையவன், அந்த மணியை அடைய அன்போடு உருகி அகங்குழைய வேண்டும்; இன்றேல் அடைய முடியாது.

இப்படித் திருமூலர் சொல்கிறார். ''இப்படி நீங்கள் சொல்வதற்கு ஆதாரம் யாது?'' என்று அவரைக் கேட்கிறோம். அவர், ''நான் அன்போடுருகி அகங் குழைந்தேன்; அதனால்தான் இறைவனை அடைந்தேன். நீங்களும் என்னைப் போல அடைய வேண்டுமானால் அப்படி அன்பு செய்யுங்கள்'' என்று விடை பகர்கிறார்.

> என்பே விறகாய் இறைச்சி அறுத்திட்டுப்
> பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
> அன்போ டுருகி அகம்குழை வார்க்குஅன்றி
> என்போல் மணியினை எய்தஒண் ணாதே.

*(எலும்பையே விறகாக அறுத்து இட்டு இறைச்சியை அறுத்துப் பொன் போன்ற தீயில் பொரியும்படி அவியாக இட்டு வறுத்தாலும், அன்பினால் உருகி உள்ளம் நெகிழ்பவர்களுக்கல்லாமல், 'மணியைப் போன்ற இறைவனை நான் அடைந்ததுபோல் அடைய இயலாது.*

*என்பு - எலும்பு. அறுத்து இட்டு. பொன்போற் பொரிய என்றும் கூட்டிப் பொருள் கொள்ளலாம். குழைவார்- நெகிழ்ந்து இரங்குபவர். மணி-மாணிக்கம்; இங்கே இறைவன். மணியினை என்போல் எய்த ஒண்ணாது.)*

திருமூலர் திருவாவடுதுறையில் அரசின் கீழிருந்து தவம் புரிந்தவர். அத்தலத்தில் இறைவன் மாசிலாமணி என்ற திருநாமத்தோடு எழுதருளியிருக்கிறான். மணி என்றது அந்தப் பெருமானை நினைத்துக் கூறியதாகவும் கொள்ளலாம்.

முதல் தந்திரத்தில் அன்புடைமை என்னும் பகுதியில் 3-ஆம் பாட்டு இது.



# அவர் கற்ற கல்வி

இறைவன் உடம்பையும் கரணங்களையும் புவனபோகங் களையும் உயிர்களுக்குக் கொடுத்திருக்கிறான். அவற்றை வைத்துக் கொண்டு வினை மூட்டைகளையெல்லாம் உதறி விட்டுத் தன்னை வந்து அடைய வேண்டும் என்பதே அவனுடைய திருவுள்ளக் குறிப்பு. உடம்பைப் பெற்று வாழ்வது, மீட்டும் இந்த உடம்பு வராமல் இருக்கும் வழியை நாடத்தான். அப்படியின்றி அவாவின் வசப்பட்டு மேலும் மேலும் உலகில் உழன்று முடிவில்லாப் பிறவிக் கடலில் ஆழும் செய்கை, இறைவன் திருவுள்ளக் குறிப்புக்கு ஏற்றது அன்று.

உலகத்துப் பொருள்களைப் பற்றிப் பல பல நூல்களைக் கற்கிறோம். பூமியின் தத்துவத்தையும் பூதங்களின் இயல்பையும் அறியும் கல்வியைக் கற்கிறோம். பூமிக்குப் புறம்பே நின்று ஒளி தரும் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் முதலியவற்றைப் பற்றியும் தெரிந்து கொள்கிறோம். நம் உடற் கூறுகளையும் இதற்கு வரும் நோய்களையும் அந்நோய்களுக்குரிய மருந்து களையும் மிக மிக முயன்று கற்றுக் கொள்கிறோம். வாழ்நாள் முழுவதும் ஒரு துறையிலே புகுந்து விரிவாகவும் ஆழமாகவும் அறிவு பெறுகிற நிபுணர்கள் பலர் உலகில் இருக்கிறார்கள். அவர்கள் கற்ற கல்வி யாவும் இறைவனுடைய திருக்குறிப்பை உணரப் பயன்படுவதில்லை. உடம்பின் கூறுகளையெல்லாம் கற்றுக்கொண்ட அளவில் நின்றால் அது மெய்க்கல்வி யாகாது; அந்த நுட்பமான யந்திரத்தை அமைத்த இறைவனை உணர்ந்து அன்பு செய்யவேண்டும். பௌதிக ரஸாயன ஆராய்ச்சியின் விளைவுகளையெல்லாம் இக்காலக் கல்வியில் உணர முடிகிறது. ஆனால் இந்தப் பூதங்கள் அழிந்தாலும் அழியாமல் நிற்கும் ஒருவனைப் பற்றியும், இந்த ரஸாயன விளைவுகள்

உண்டாகும்படி ஓர் இயல்பைப் படைத்தவனைப் பற்றியும் அறிய முடிவதில்லை.

அந்தக் கல்வியனைத்தும் உயிரில்லாத உடம்பைப் போன்றதுதான். இறைவனுடைய பெருமையை உணர்ந்து, இந்த உடம்பைக் கொடுத்த அவன் திருவுள்ளக் குறிப்பினை உணர்ந்தால் மீண்டும் இப்பிறவியை அடையாத நிலையைப் பெற முயல்வோம். அதற்குத் துணையாக இருக்கும் கல்வியே மெய்க்கல்வி.

''சாவாமற் கற்பதே கல்வி.''

நாம் கற்கும் கல்வியினால் நம்முடைய விருப்பு வெறுப்பு வளர்கின்றன. ஒரு நிலையில் நமக்கே அலுப்பு உண்டாகி விடுகிறது. பலவற்றை அறிய அறியப் பின்னும் அறியாதவை பல என்ற உணர்வே மிகுகிறது.

''அறிதோ றறியாமை கண்டற்றால்''

என்பது குறள்.

விஞ்ஞானிகள் மிக மிக நுட்பமாக ஆராய ஆராய அவர்களுடைய ஆராய்ச்சிக்கு முடிவே காண முடிவதில்லை. அவர்கள் ஒன்று நினைக்க விளைவு ஒன்றாகிறது. பூதங்களை அடக்கி இதைச் செய்யலாம் என்று புகும்போது அவர்களை அறியாமல் மற்றொன்று குறுக்கிடுகிறது. அப்போது எல் லோரையும்விட மேலான சக்தி ஒன்று இருந்து யாவற்றையும் இயக்குகின்றது என்ற உண்மை அவர்களுக்குப் புலனாகிறது. அதனால் மனித சக்தியின் சிறுமையும் தாம் கற்ற கல்வியின் சிறுமையும் தெளிவாகின்றன. ''என்ன கற்று விட்டோம்!'' என்று தாம் கற்ற கல்வியைக்கூடக் கறித்துப் பேசும் நிலை வருகிறது.

ஆனால் இறைவன் குறிப்பை அறிந்து ஒழுகும் கல்வியோ இந்த அருவருப்புக்கு உட்படுவதில்லை; கறிப்பறியாதக் கல்வி அது; எல்லாக் கல்விக்கும் மேலாக மிக்கிருக்கும் கல்வி. அதைத் திருமூலர் கற்றுக் கொண்டாராம்.

கறிப்புஅறி யாமிகும் கல்விகற் றேனே.

*(வெறுப்பை அறியாமல் மேலாகச் சிறந்து விளங்கும் கல்வியை நான் கற்றேன்.*

*கறிப்பு - வெறுப்பு. அறியாக் கல்வி, மிகும் கல்வி என்று கூட்டவேண்டும். அறியா என்பது அறியாது என்ற எச்சத்தின் விகாரமாகவும் கொள்ளலாம்.)*

★

அந்தக் கல்வியைக் கற்றுக்கொண்டதனால் எவற்றை அறிந்து கொண்டார் திருமூலர்? அவர் சொல்வதைக் கேட்கலாம்.

இறைவனுடைய திருவுள்ளக் குறிப்பை அவர் அறிந்து கொண்டாராம். பிற மக்கள் உள்ளத்தில் உள்ள குறிப்பை அறியும் கலை ஒன்று உண்டு. அதுவும் பயனில்லாமல் ஒழிந்து விடும். ஆண்டவனுடைய உள்ளக் குறிப்பை அறிய் வல்ல கல்விதான் பயனுள்ள கல்வி.

''அவன்றன் குறிப்பே குறிக்கொண்டு
போமாறு அமைமின்'' (யாத்திரைப் பத்து, 3)

என்று மாணிக்கவாசகர் அறிவுறுத்துகிறார்.

திருமூலர் அந்தக் குறிப்பை அறிந்தார்

குறிப்பு அறிந்தேன்.

*(இறைவனது திருவுள்ளக் குறிப்பை அறிந்து கொண்டேன்.)*

உயிர்கள் எல்லாம் பாசத்தினின்றும் நீங்கித் தன்னை அடையவேண்டும் என்பதே அப்பெருமானுடைய திருவுள்ளக் குறிப்பு. அதன் பொருட்டே அவன் உடம்போடு உயிரைக் கூட்டி உலகில் வாழ விடுத்திருக்கிறான். தன்பால் அன்பு செய்து பிறவித் தளையை அறுக்க வேண்டும் என்பதற்காகவே இந்தச் செறிப்பை உண்டாக்கியிருக்கிறான். இதையும் திருமூலர் உணர்ந்தார்.

உடல் உயிரது கூடிச்
செறிப்பு அறிந்தேன்.

*(உடலை உயிரானது சேர்ந்து பொருந்தியிருப்பதை உணர்ந்தேன். இவ்வாறு பொருந்தியிருப்பது இன்னதற்காக என்று அறிந்து கொண்டதையே இவ்வாறு சொன்னார்.*

உடல் - உடலை. உயிரது; அது, பகுதிப் பொருள் விகுதி. *செறிப்பு- பொருந்தி நிற்றல்.)*

''அன்போ டியைந்த வழக்குஎன்ப ஆருயிருக்கு
என்போ டியைந்த தொடர்பு''

என்று வள்ளுவரும் இந்தச் செறிப்புக்குக் காரணத்தைக் கூறினார்.

பின்பு, தேவர்களுக்கெல்லாம் தலைவனையும் திருமூலர் அறிந்தார்.

அறிந்தேன்மிகு தேவர்பிரானை.

*(எல்லாப் பொருள்களுக்கும் மேம்பட்ட பரம்பொருளாக மிக்கு நிற்கின்ற தேவர் தலைவனாகிய எம்பெருமானை அறிந்தேன்.*

*தேவர்பிரான் என்பதால் தேவருக்கு மிக்கு நின்ற தலைவன் என்பது பெறப்படும்; அது மாத்திரம் அன்று; எல்லாப் பொருள்களுக்கும் மேலாக நின்றவன் என்பதையும் உணர்த்த, மிகுதேவர் பிரானை என்றார். 'செறிப்பறிந்தேன் மிகு தேவ பிரானை' என்ற இரண்டாவது அடியில் அறிந்தேன் என்றசொல் செறிப்பு அறிந்தேன், தேவர் பிரானை அறிந்தேன் என்று இரண்டோடும் சேர்ந்து பொருள் தரும். அது நடுநிலைத் தீவகம்.)*

தேவர்பிரானை அறிந்தேன் என்று சொன்னவுடன் திருமூலர் விழித்துக்கொண்டார். ''நான் அவனை அறிவதாவது! அவனே கருணையினால் என் உள்ளத்துக்குள்ளே வந்து புகுந் தான்'' என்கிறார். அப்படிப் புகுந்ததனால் அவர் கற்ற கல்வி யின் பயன் கிட்டிவிட்டது. அந்தப் பயன் சாவாமை; மறிப்பு அறியாத நிலை. அமுதமயமான இறைவன் வந்து புகுந்த அக்கணத்திலே மரணமில்லாப் பெருவாழ்வு சித்தித்துவிட்டது.

மறிப்புஅறி யாதுவந்து உள்ளம் புகுந்தான்.

*(நான் மறித்தலை அறியாமல் இருக்கும்படி தானே கருணையினால் வந்து அடியேனுடைய உள்ளத்தில் அத்தேவர் பிரான் புகுந்தான்.*

*மறிப்பு - இறத்தல். அறியாது என்பது காரியப் பொருளில் வந்தது. இறைவன் உள்ளம் புகுந்த காரணத்தால், இனி மறிப்பு அறியாத காரியம் சித்தித்தது என்றபடி.)*

★

இறைவனுடைய அருள்பெற்று இனிப் பிறவா வழி பெறுவதற்குச் சாதனமான கல்வியே நாம் வெறுக்காமல் விரும்பிக் கற்க வேண்டிய கல்வி. அக்கல்வி கற்றால் இறைவனுடைய திருவுள்ளக் குறிப்பை உணரலாம். உடம்பும் உயிரும் கூடிப் பிறந்த பிறவிக்கு எது பயன் என்பதை அறிந்து கொள்ளலாம். இறைவன் பெருமையை உணர்ந்து அன்பு செய்யலாம். அவன் நம் உள்ளத்தே அநுபவப் பொருளாக எழுந்தருளவும், அதனால் மரணமிலாப் பெரு வாழ்வு நமக்குக் கிடைக்கவும் வாய்ப்பு உண்டாகும்.

> குறிப்புஅறிந் தேன் உடல் உயிரது கூடிச்
> செறிப்புஅறிந் தேன்,மிகு தேவர் பிரானை;
> மறிப்புஅறி யாதுவந்து உள்ளம் புகுந்தான்;
> கறிப்புஅறி யாமிகும் கல்விகற் றேனே.

முதல் தந்திரத்தில் கல்வியென்னும் பகுதியில் வரும் முதற்பாட்டு இது.

★

# நால்வகைச் சங்காரம்

**ம**னிதன் செயலற்றுக் கிடந்தால், ''பிணம் போலக் கிடக்கிறான்'' என்று கூறுவர். அவன் கைகால் இருந்தும் இயங்காமையால் அப்படிச் சொல்லத் தோன்றுகிறது. மனிதன் தினமும் உறங்குகிறான். அப்போது அவன் செயலற்றுக் கிடக்கிறான். கொலையாளியும் குழந்தையும், குடும்பியும் துறவியும் தூக்கத்தில் ஒரே நிலையை அடைகிறார்கள். ஒன்று, இரண்டு, மூன்று என்ற எண்களின் மதிப்பில் வேறுபாடு உண்டு. ஆனால் ஒன்றில் ஒன்றைக் கழித்து வந்த பூஜ்யமும், இரண்டில் இரண்டைக் கழித்துவந்த பூஜ்யமும், பூஜ்யத்தை மற்ற எண்களால் பெருக்கி வந்த பூஜ்யமும் ஒரே நிலையை உடையன. சுழுத்தியவத்தையில் தம்மை மறந்து தூங்கு கிறவர்கள் அந்தத் தூக்கத்துக்கு முன்னும் பின்னும் வேறுபட்ட நிலையில் இருந்தாலும் அப்போது செயலற்றுப் பூஜ்யமாக ஒரே நிலையில் இருக்கிறார்கள்.

இறைவன் மனிதனுடைய உடம்புக்கு ஓய்வு கொடுக்கத் தூக்கம் என்ற ஒன்றை அளித்திருக்கிறான். எல்லோரையும் சில மணி நேரம் ஒன்றும் செய்யாமல் துயிலில் ஆழப் பண்ணி விடுகிறான். அப்போது சிறிது நேரத்துக்குச் செத்துப் போனவர்களைப் போலவே ஆகிவிடுகிறார்கள்.

ஒருவிதத்தில் உறக்கமும் சாவும் ஒப்புமை உடையன.

''உறங்கு வதுபோலும் சாக்காடு, உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு''

என்பது குறள். மரணத்தை நெடுந்துயில் என்று சொல்வதுண்டு.

உயிர்கள் ஒரு நாள் உறங்குவது அற்றை நாளில் பிறந்து வாழ்ந்து அந்த நாள் வாழ்வை முடித்துக் கொண்டு இறந்து விடு வதற்குச் சமானம். மறுநாள் விழிப்பது மீட்டும் பிறப்பதற்குச்

சமமானது. மரணத்தை நெடுந்துயில் என்பதற்கு மாறாகத் துயிலைக் குறு மரணம் என்று சொன்னால் தவறு இல்லை.

மரணம் என்பது உடலைப் பெற்றவர்கள் நிலையினின்று சொல்லும் சொல். அதை உண்டாக்கும் கடவுள் நிலையிலிருந்து பார்த்துச் சொன்னால் அது அவன் செய்யும் சங்காரம். மரணம் உயிர்களின்பால் நிகழும் செயல்; அதை அவற்றினிடம் நிகழ்த்தும் செயலுக்குச் சங்காரம் என்று பெயர். இறைவன் சங்காரம் செய்கிறான்; அதனால் உயிர்கள் மரணம் அடைகின்றன.

தாய் தூங்க வைக்கிறாள்; குழந்தை தூங்குகிறது. மக்கள் தூங்குவதாகிய குறு மரணம் அடைகிறார்கள். இறைவன் எல்லோரையும் தூங்கச் செய்வதாகிய சிறிய சங்காரத்தைச் செய்கிறான். உறங்குவது குறு மரணமானால் உறங்கச் செய்வது குறுஞ் சங்காரமாகத்தானே இருக்கும்?

இந்தக் குட்டிச் சங்காரம் ஒவ்வொரு நாளும் நிகழ்கிறது. அதை நித்தசங்சாரம் என்று சொல்லலாம். உயிர்கள் தினந்தோறும் உறங்குவதாகிற குறுமரணம் அடையச் செய்வதாகிய செயலே நித்தசங்காரம்.

நித்தசங் காரம் உறக்கத்து நீள்மூடம்.

*(நித்தசங்காரம் என்பது உயிர்கள் உறங்கும்போது அவ்வுறக்கத்தில் யாவற்றையும் மறந்து நிற்கும் நீண்ட நிலை.*

*மூடம் என்றது சுழுத்தி நிலையை. அப்போது எல்லாம் மறந்து ஒன்றையும் அறியாமல் இருத்தலின் மூடம் என்றார்.)*

★

சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம் என்று கூறும் முத்தொழிலையும் இறைவன் இயற்றுகிறான். அவை உயிர்களை உடம்புடன் பொருத்திப் படைத்தலும், உடம்புடன் வாழும்படி பாதுகாத்தலும், உடம்பினின்றும் நீக்குதலும் ஆகும். இம்மூன்றும் உயிர்க் கூட்டங்களைச் சாரும் தொழில். சிருஷ்டியால் தோற்றமும், ஸ்திதியால் வாழ்வும், சங்காரத்தால் மரணமும் உயிர்களுக்குச் சம்பவிக்கின்றன.

வாழ்வு விழித்திருப்பதைப் போன்றது; மரணம் உறங்குவதைப் போன்றது. விழித்திருக்கும் நிலையைச் சாக்கிரம் என்று சொல்வார்கள். அதையே வாழ்வுக்கும் ஒரு குறியீடாகக் கொள்ளலாம். அதன்பின் உள்ள அவஸ்தையை வாழ்வுக்குப் பின் வரும் மரணத்துக்கு ஒப்பிடலாம். வாழ்வுக்குப் பின்வரும் நிலை சாக்கிரத்துக்குப் பின் உள்ள நிலை போன்றது; ஆகவே அதைச் சாக்கிராதீதம் என்று சொல்லலாம். அப்போது சங்காரம் நிகழ்கிறது.

முன்னே சொன்னது ஒரு நாளின் முடிவிலே நிகழும் சங்காரம்; இதுவோ வாழ்நாளில் முடிவிலே நிகழும் சங்காரம். இது அந்தச் சங்காரத்துக்கு அடுத்தபடி வைத்து எண்ணக் கூடியது.

*வைத்தசங் காரமும் சாக்கிரா தீதமாம்.*

*(அடுத்தபடியாக வைத்த சங்காரம் சாக்கிரமாகிய வாழ்நாளுக்குப் பின்னதாகிய மரணத்தை நிகழ்த்துவதாம்.*

*சங்காரம் காரணம்; மரணம் காரியம். காரணத்தைக் காரியமாக உபசரித்தல் என்ற மரபுப்படி சங்காரம் சாக்கிராதீதமாம் என்றார். முன்பு சொன்னது இத்தகையதே. அதீதம் - கடந்தது.)*

★

மரணம் என்பது எல்லோருக்கும் ஒருங்கே நிகழ்வது அன்று. ஒவ்வோருயிரும் தன் வாழ்நாள் முடிந்தபின்பு இறந்து படுகிறது. ஒரு நாளில் ஓய்வுபெற உறக்கம் இருப்பதுபோல ஒரு வாழ்நாளில் ஓய்வுபெற மரணம் இருக்கிறது. அடுத்தபடி எல்லோருக்கும் பொதுவான ஓய்வுகாலம் ஒன்று உண்டு. அதைச் சர்வ சங்கார காலம் என்பார்கள்.

எல்லா உயிர்களையும் மூல மலத்தில் ஒடுங்கியிருக்கும் படி அந்த மகா சங்கார காலத்தில் இறைவன் செய்வான். துயிலைக் குறுமரணமென்றும், இறப்பை மரணமென்றும் சொன்னால், சர்வ சங்கார காலத்து ஒடுக்கத்தைக் கூட்டு மரணம் என்று சொல்லலாம். வீட்டிலுள்ள எல்லாப் பிள்ளைகளையும் தூங்க வைத்துவிட்டுத் தாய் இளைப்பாறும் காலத்தைப் போன்றது அக்காலம். அந்த மரணம் மூன்றாவது மரணம். அப்போது இறைவன் செய்யும் சங்காரம் முழுமையானது;

யாரையும் விட்டுவைக்காமல் எல்லா உயிரையும் ஒடுக்கத்தை யடையச் செய்யும் செயல் அல்லவா? மற்றச் சங்காரங்களில் ஏனைய தொழில்களும் நடந்துகொண்டுதான் இருக்கும். எல்லோரும் தூங்கும்போது சிலர் விழித்துக் கொண்டிருப் பார்கள். சிலர் மரணமடையும்போது எஞ்சியவர்கள் வாழ்ந்து கொண்டிருப்பார்கள். ஆனால் சர்வ சங்கார காலத்தில் எல்லா உயிரும் மரண நிலையை அடைகின்றன. ஆதலால் அதுதான் சுத்த சங்காரம் என்று சொல்வதற்குரியது.

சுத்தசங் காரம் தொழில்அற்ற கேவலம்.

*(சுத்த சங்காரம் என்பது வேறு எத்தொழிலும் இன்றி இறைவன் பிறருக்கு ஓய்வளித்துத் தானும் தொழிலின்றித் தனி நிற்கும் நிலை.*

*தொழில் அறுதல் இறைவனுக்கு. கேவலம் - ஆன்மாக்கள் மூலமலத்தில் ஒடுங்கியிருக்கும் நிலை.)*

★

குறுஞ்சங்காரம், தனிச் சங்காரம், சுத்த சங்காரம் என்ற மூன்றுக்கும் மேலே மற்றொரு சங்காரம் உண்டு. அதைச் சங்காரம் என்று குறிப்பதில்லை; அநுக்கிரகம் அல்லது அருளல் என்று ஐந்தாவது தொழிலாகக் குறிப்பிடுவார்கள்.

முன்னே சொன்ன மூவகை மரணங்களில், நித்திய மரணத் தில் உடம்பும் உயிரும் ஒட்டி நின்று, உடம்பு தொழிலின்றி இருக்கிறது; உடம்பு இயங்குதல் ஒழிகிற நிலை அது. இரண்டாவது மரணம் பருவுடம்பு ஒழிகிற நிலை. மூன்றாவது உயிரும் மூலமலமும் ஒன்ற, மற்றவை ஒழிந்த நிலை.

இதற்கு அடுத்த முடிவான நிலை ஒன்று உண்டு. அதுதான் உயிர் மலத்தினின்றும் விடுபடும் நிலை. சீவன் என்ற உணர்வொழிந்து இறைவனுடன் ஒன்றுபடுவது அது. அப்பால் அதற்கு இயக்கம் இல்லை. சீவன் சிவசொரூபமாகும் நிலை யாகிய அதில் சீவன் மரணமடைகிறது.* 'எஞ்ஞான்றுகொல் சாவதுவே' என்று மணிவாசகர் பேசுவார். இந்த மரணத்தை உண்டாக்குபவன் இறைவன்தான். இது மரணமல்ல; அமுதக்

---

* *''பேச்சற்ற இன்பத்துப் பேரானந்தத்திலே, மாச்சற்ற என்னைச் சிவமாக்கி மாள்வித்து''* என்பது ஆறாந்தந்திரத்தில் வரும் பாட்டு.

கடலில் ஆழ்ந்தால் மரணம் இல்லை; ஆனால் செயலும் இல்லை. அதுபோன்றது இது. இந்த மரண நிலையை உண்டாக்கும் தொழிலும் ஒருவகைச் சங்காரந்தானே? இது ஆன்மாக்களை முத்தி நிலத்துக்குச் செலுத்தும் சங்காரம்; இதுதான் சிவபிரான் செய்யும் அநுக்கிரகம்; அருள் உளதாகும் நிலைமை.

*உய்த்தசங் காரம் சிவன்அருள் உண்மையே.*

*(ஆன்மாக்களை மீளாத நிலையிற் செலுத்தும் சங்காரம் சிவபிரானுடைய அருள் உளதாகும் நிலைமை.*

*உய்த்த - செலுத்திய. உண்மை - உளதாம் தன்மை.)*

இந்த மரணம் ஒளிமரணம்; அமுதச் சாவு; மாறாத வாழ்வாகிய இறப்பு; அத்துவித நிலை தரும் இன்பத் தூக்கம். இதையே சாசுவத மரணம் என்று சொல்லலாம்.

உயிர் அடையும் நால்வகை மரணங்களையும் அவற்றை நிகழ்த்தும் நால்வகைச் சங்காரங்களையும் இந்தப் பாட்டில் திருமூலர் புலப்படுத்துகிறார். அந்த நான்கு மரணங்களுக்கும் வேறுபெயர், துயில், இறப்பு, ஒடுக்கம், முத்தி என்பன.

*நித்தசங் காரம் உறக்கத்து நீள்மூடம்;*
*வைத்தசங் காரமும் சாக்கிரா தீதமாம்;*
*சுத்தசங் காரம் தொழில்அற்ற கேவலம்;*
*உய்த்தசங் காரம் பரன்அருள் உண்மையே.*

இது இரண்டாந் தந்திரத்தில் சங்காரம் என்ற பகுதியில் வரும் ஐந்தாவது பாட்டு.

★

# என்ன மாயம்!

ஒரு பெரிய வீடு. அதற்குள் ஓர் அறை; சிறிய அறை தான். வீட்டுக்குச் சொந்தக்காரனுடைய சேமிப்பை வைக்கும் அறை அது. அந்த அறையில்தான் அவன் பெரும்பாலும் இருப்பான்.

அதே அறையில் வேறு ஒருவனும் இருக்கிறான். வெளி யில் பெருங்கூட்டத்தில் ஒருவன் நிற்கிறான் என்றால் அடை யாளம் கண்டு கொள்ள முடியாது. இதுவோ சிறிய அறை. இங்கே மூன்றாவது பேர்வழி யாரும் இல்லை. வீட்டுக்கு உடையவனும் அந்த 'ஒருவனு'ம் இருக்கிறார்கள். ஆனால் அவனை வீட்டுக்கு உடையவனால் தெரிந்து கொள்ள முடியவில்லை. என்ன மாயம்!

உள்ளத்து ஒருவனை... உரு அறியாதே.

அது கிடக்கட்டும். ஒரே இருளாக இருந்தால் அறையில் இருக்கிற பொருள் தெரியாது. அவனோ ஒரு பெரிய சோதிப்பிழம்பாக நிற்கிறான். அறைக்குள் விளக்கை ஏற்றினால் உள்ளே இருக்கும் பொருள் யாவும் தெரியுமே! அந்த விளக்குத் தெரியாமல் இருக்குமா? இங்கே, அந்த அறையில் சோதியாக நிற்கும் அவனைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. என்ன மாயம்!

உள்ளுறு சோதியை... உரு அறியாதே.

★

அந்த ஒருவன் அடிக்கடி வெளியிலே போய் விடுவானா னால் அவனை அந்தச் சமயங்களில் காண இயலாது. ''நான் பார்க்கும்போதெல்லாம் அவன் வெளியிலே போய்விடுகிறான்'' என்று சொல்லலாம். ஆனால் அவன் எப்போதும் அங்கே

இருக்கிறான். அந்த இடத்தை விட்டு ஓரடியும் நகர்வதே இல்லை. வீட்டுக்காரன் அயர்ந்து மறந்து நழுவினாலும் அவன் அவ்விடத்தை விட்டுச் செல்வதே இல்லை. அப்படியிருந்தும் அவனைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. என்ன மாயம்!

உள்ளம் விட்டு நீங்கா ஒருவனை
உரு அறியாதே.

★

இறைவன் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் இருக்கிறான். ஒருவன் தன் உள்ளத்தில் நினைப்பதை அயலார் அறிய இயலாது. இறைவனோ அவன் உள்ளத்தில் இருப்பதனால் அங்கே தோன்றும் எண்ணங்களையெல்லாம் அறிந்துகொள்கிறான். புறஉலகத்திலே காணும் பொருள்களையும் நிகழும் நிகழ்ச்சிகளையும் கண்ணால் கண்டும் பிற பொறிகால் நுகர்ந்தும் அவற்றின் நினைவுகளை உள்ளம் சேமித்துக் கொள்கிறது. அவற்றை மீட்டும் காணுகிறது. பல்லாயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள பொருள்களை இருந்த இடத்திலிருந்தே உள்ளம் நினைக்கிறது; அகக் கண்ணால் காணுகிறது. இல்லாத பொருள்களையும் நடவாத செயல்களையும் கற்பனையினால் அமைத்துக் கொண்டு காணுகிறது. பகற் கனவுகளும், மனோராஜ்யங்களும், கற்பனைக் கதைகளும், காவியங்களும் இந்தப் பொய்யான காட்சிகளின் விளைவுகள் என்றுதானே சொல்லவேண்டும்?

இவ்வளவு விரிந்தும் உயர்ந்தும் ஆழ்ந்தும் ஆராய்ந்தும் காட்சி காணும் உள்ளம், தன்னிடம் உள்ள ஒருவனைக் காண்பதில்லை. மற்றவை யாவும் வெறும் நினைவுகள். அவனோ உண்மையில் உள்ளவன். அவனையன்றி வேறுயாரும் அங்கே இல்லை; இருக்கவும் இயலாது. ஆயினும் அவனை உள்ளம் உணர்வதில்லை.

இறைவன் இருளாக இல்லை; ஒளிமயமாக இருக்கிறான். அந்த ஒளி இந்த உள்ளத்துக்குப் பயன்படுவதில்லை.

உள்ளத்துக்குள்ளே உறையும் பெருமான் அவன். உள்ளமும் தானுமாக ஒட்டியிருக்கும் பெருமான். அப்படி

இருப்பினும் உள்ளம் அவனை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை.

இதற்கு என்ன காரணம்? குருடனுக்குக் கண் முகத்தில் இருந்தும் அதில் படலம் படர்ந்திருக்கிறது. அதனால் எவ்வளவு பெரிய விளக்கை வைத்தாலும் காண முடியாது. எவ்வளவு அருகில் இருந்தாலும் தெரியாது. எவ்வளவு காலம் இருந்தாலும் உருவை அறிய இயலாது. அப்படியே உள்ளத்தில் ஒரு படலம் இருக்கிறது. அதனை அங்கே வைத்து மறைக்கிறவன் இறைவன். அப்படிச் செய்வதைத் திரோபவம் அல்லது மறைத்தல் என்று சொல்வார்கள். சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்னும் பஞ்ச கிருத்தியங்களில் திரோபவம் ஒன்று.

இந்த மறைப்பை ஞானமென்னும் கத்தியால் கிழித்து இறைவனைக் காண்பவர் சிவஞானிகள்.

உள்ளத்து ஒருவனை, உள்ளுறு சோதியை,
உள்ளம்விட்டு ஓரடி நீங்கா ஒருவனை,
உள்ளமும் தானும் உடனே இருக்கினும்
உள்ளம் அவனை உருஅறி யாதே.

*(உள்ளத்துள் இருக்கும் ஒருவனை, அதன் உள்ளே இருக்கும் சோதிப்பிழம்பை, அவ்வுள்ளத்தினின்றும் ஓரடியேனும் நீங்காமல் நிற்கும் ஒருவனை, உள்ளமும் அவனும் எப்போதும் இணைபிரியாமல் உடன் இருந்தாலும், உள்ளம் அப்பெருமானை இத் தகையன் என்று அடையாளம் கண்டு கொள்ளாது. இது திரோபவம்.*

*ஓரடி என்றது சிறிதளவு இடங்கூட என்றபடி. தானும்-அவனும். உரு அறிதல்-அடையாளம் தெரிந்துகொள்ளுதல்.)*

தன் தோளின் மேல் ஆட்டுக் குட்டியைப் போட்டுக் கொண்டு ஊரெல்லாம் தேடிய ஆயனைப் போல உள்ளத்திலே அவனை வைத்துக்கொண்டு அலைகின்றனர் மக்கள். இறைவனுடைய மாயா லீலை இருந்தவாறு என்னே!

இரண்டாந் தந்திரத்தில் திரோபவம் என்னும் பகுதியில் உள்ள முதற்பாட்டு இது.

★

# உத்தமன் கோயில்

தரிசாகக் கிடக்கிறது ஒரு நிலம். அதில் கள்ளியும் எருக்கும் படர்ந்திருக்கின்றன. பாம்புப் புற்றும் ஒருபால் இருக்கிறது. அந்த இடத்துக்கு யாருமே போவதில்லை. கிணறு வெட்டினால் பாதாளம் வரைக்கும் சென்றால்தான் தண்ணீரைக் காணலாம். அந்த நிலத்தைப்பற்றி யாருக்கு என்ன கவலை இருக்கும்?

திடீரென்று ஒருநாள் அதற்கு மதிப்பு உண்டாயிற்று. அந்தப் பக்கத்தில் வெறும் வெளியாக இருந்த நிலங்களையும் இந்த நிலத்தையும் நில நூல் வல்லவர்கள் ஆராயத் தொடங்கி னார்கள். நில மகளின் வயிற்றை அகழ்ந்து பார்க்கும் விஞ்ஞானி கள் அவர்கள். அங்கே தங்கம் கொடியோடிக் கிடக்கிறதென்று அவர்கள் தெரிந்து கொண்டார்கள்; ஆராய்ச்சி நடத்தினார்கள்.

ஆராய்ச்சியின் முடிவில் அந்த நிலப்பரப்பின் கீழே தங்கம் இருக்கிறது என்று தெளிவாகத் தெரிய வந்தது. பின்னும் பல ஆராய்ச்சியாளர்களும், அரசாங்க அதிகாரிகளும் வந்தார்கள். அந்த இடத்தைச் சுற்றி மதில் எடுத்தார்கள். கள்ளியும் முள்ளும் இருந்த இடம் தெரியாமல் ஒழிந்தன. இதற்குமுன் இருந்த கள்ளிக்காடா அது? தங்கச் சுரங்கம் அல்லவா?

தங்கம் அங்கே புதியதாக உண்டாகவில்லை. மக்கள் இதுவரை அதை வெறும் கள்ளிக்காடாக எண்ணியிருந்தார்கள். அறிஞர்கள் அதன்கீழ் உள்ள மதிப்புள்ள பொருளை இப்போது கண்டு கொண்டமையால் அந்த நிலத்தின் மதிப்பு உயர்ந்துவிட்டது. இந்த மதிப்பு நிலத்துக்காக வந்தது அன்று; அதற்குள்ளே இருக்கும் பொருளாகிய தங்கத்தால் வந்தது. தங்கம் இருப்பது தெரியாத வரையில் மதிப்பு உண்டாக வில்லை; தெரிந்தபிறகே மதிக்கத் தொடங்கினார்கள்.

★

இந்த உடம்பு கள்ளிக்காட்டைப் போலத்தான் இருக்கிறது. புழுவும் அழுக்கும் பொதிந்த இடம் இது. சற்றே சிந்தித்தால் உடம்பைக் காட்டிலும் அருவருக்கத் தக்க பொருள் ஒன்றும் இல்லை என்று சொல்லலாம். அருவருக்கத்தக்க அழுக்குகளும் ஆபாசங்களும் உடம்பிலிருந்து உண்டாகின்றவைகளே.

பல பெரியார்கள் இந்த உடம்பை அருவருத்துப் பாடியிருக்கிறார்கள். ''இதை எப்படிச் சகித்துக்கொண்டிருப்பது?'' என்று சொல்லியுள்ளார்கள்.

> ''புறந்தோல்போர்த் தெங்கும் புழு அழுக்கு மூடி
> மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடில்''

என்று மாணிக்க வாசகர் சொல்கிறார்.

இந்த உடம்புக்குள்ளேதான் உயிர் வாழ்கிறது. மனிதனுக்கு எல்லாப் பொருள்களிலும் சிறந்தது உயிர். அது குடியிருக்கிற வீடு இது என்ற நினைவினால் நாம் இதைச் சோறு போட்டுக் காப்பாற்றுகிறோம். ஞானிகளோ இது சில காலம் குடியிருக்க வந்த ஓட்டைக் குடில் என்று அருவருக்கிறார்கள்.

உடம்பு உயிர் வாழும் இடம் என்பதோடு, உயிர்க்குயிராகிய இறைவன் வாழும் திருக்கோயில் என்ற உண்மையையும் தெரிந்து கொண்டால் உடம்பின் அருமை புலப்படும். தங்கம் உள்ள நிலத்தைப் பாதுகாப்பதுபோல இதைப் பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணம் உண்டாகும். தங்கம் உள்ள நிலம் என்று அறிந்தவர்கள் நிலத்தைப் பாதுகாப்பதோடு நின்று விடுவார்களா? அதில் உள்ள தங்கத்தை அகழ்ந்து எடுத்துப் பயனடைவார்கள்.

உடம்பினுக்குள்ளே உத்தமனாகிய இறைவன் இருக்கிறான் என்பதை உணர்ந்த பின் அந்த உடம்பைப் பாதுகாப்பதோடு நில்லாமல் அந்த உத்தமனைக் கண்டு இன்புற முயல்வார்கள். நாம் உடம்பைப் பாதுகாப்பது, உடம்பினால் வரும் சிறிய இன்பங்களைக் கருதி. யோகிகள் இறைவன்

ஆலயம் இது என்று பாதுகாத்து அவனது தரிசனத்தைச் செய்ய முற்படுவார்கள்.

உடம்பால் ஆன பயனைப் பெற்றபிறகு இந்த உடம்பை நீத்துவிட அவர்கள் சித்தமாக இருப்பார்கள். நிலத்தின் அடியிலிருந்த தங்கத்தையெல்லாம் வெட்டி எடுத்து பிறகு அந்த நிலத்தை மாத்திரம் வைத்துக் கொண்டு பாதுகாக்க மாட்டார்கள். சிவயோகிகள் உடம்பை எப்படிப் பாதுகாக்க வேண்டுமோ அப்படி மிகவும் கவனமாகப் பாதுகாப்பார்கள். உடம்பு போய் விடும் காலம் வந்தால் அதற்காக வருந்த மாட்டார்கள். கரும்பை ஆலையில் ஆட்டிச் சக்கையை எறிந்து விடுவது போல, உடம்பினால் ஆன பயனைப் பெற்ற பின்பு இதனை உதைத்துத் தள்ளுவதில் அவர்களுக்குத் துக்கமே இராது.

நாமோ? உடம்பை உடம்புக்காகவே பாதுகாக்கிறோம். உடம்பு எத்தனை நாளைக்கு இருந்தாலும் நமக்குப் போதாது. தேகமே நமக்குச் சொர்க்கம்.

திருமூலர் பெரிய சிவயோகி. அவர் உடம்பைப் பல ஆயிரம் ஆண்டுகள் வாழ வகை செய்து கொண்டார். ''இந்த நாற்ற உடம்பை எதற்காக இவ்வளவு காலம் வைத்திருக் கிறீர்கள்?'' என்று அவரைக் கேட்டால் அவர் என்ன விடை சொல்வார்? இந்தப் பாட்டைத்தான் சொல்வார்.

> உடம்பினை முன்னம் இழுக்குஎன்று இருந்தேன்;
> உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்;
> உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று
> உடம்பினை யான்இருந்து ஓம்புகின் றேனே.

*(உடம்பை முன்பு குறைபாடுடையதென்று எண்ணியிருந் தேன். இப்போது உடம்புக்குள்ளே இருக்கும் உயர்ந்த பொருள் இன்ன தென்பதைத் தெரிந்து கொண்டேன். உடம்புக்குள்ளே உத்தமனாகிய இறைவன் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கிறான் என்று உணர்ந்து, இவ்வுடம்பையான் உலகில் இருந்து பாது காக்கிறேன்.*

*இழுக்கு - குறைபாடு; இழிவு; இங்கே இழுக்குடைய பொருள் என்று கொள்ளவேண்டும். ஓம்புகின்றேன் - பாதுகாக்கிறேன்.)*

திருமூலர் கைலையில் வாழ்ந்த சித்தர். திருவாவடு துறைக்கு வந்து ஓர் இடையன் உடம்பிற் புகுந்துகொண்டார். அதில் இருந்தபடியே யோகம் செய்து பல காலம் வாழ்ந்தார். ''இந்த உடம்பில் இருந்துகொண்டு ஏன் பாதுகாக்கிறீர்கள்?'' என்று கேட்பதற்கு நியாயம் இருக்கிறதல்லவா?

ஊற்றைச் சரீரம் என்று எண்ணாமல் உத்தமன் கோயில் என்று பாதுகாத்ததைச் சொல்லும் இப்பாடல் மூன்றாந் தந்திரத்தில் சரீர சித்தி உபாயம் என்ற பகுதியில் வரும் இரண்டாவது பாட்டு.

★

# அஞ்சுள ஆனை

ஒருவன் பெரிய காட்டுக்குள் சிக்கிக்கொண்டான். அந்தக் காட்டில் வாழும் கொடிய பிராணிகளுக்குக் கணக்கு வழக்கே இல்லை. பாம்பு, தேள், பூரான் ஆகியவை எங்கும் நெளி கின்றன. முள்ளும் கல்லும் குண்டும் குழியும் எங்கும் இருக் கின்றன. இவற்றினின்றும் எப்படியோ தப்பி மீளலாம் என்றால், எல்லாவற்றிற்கும் மேலாக எப்போதும் தீங்கு விளை வித்துக் கொண்டிருக்கும் யானைகள் ஐந்து இருக்கின்றன. அவை இந்தக் காட்டை விட்டு அவனை வெளியிலே போகாத படி சுற்றி நின்று பிளிறுகின்றன. உலகத்துக்கு எட்டு யானைகள் காவல் என்றால், இந்தக் காட்டுக்கு ஐந்து யானைகள் காவல், காவல் என்று மட்டும் சொன்னால் போதாது. அவற்றின் ராஜ்யம் இக்காடு என்றே சொல்லவேண்டும்.

காட்டைவிட்டுப் போகவேண்டுமானால் இந்த ஐந்து யானைகளையும் அடக்கவேண்டும். இல்லையானால் காட்டிலே கிடந்து நலியவேண்டியதுதான்.

இத்தகைய காட்டில் வாழ்ந்த வேறு சிலர் யானைகளை அடக்கிவிட்டுக் காட்டினின்றும் புறப்பட்டுத் தாம் நினைத்த இடத்துக்குச் சென்றிருக்கிறார்கள். ஒரு பெரிய தலைவனுடைய வீடு காட்டுக்கு அப்பாலே இருக்கிறதாம். காட்டு வாழ்க்கையை நீத்துச் சென்றால் அந்த மாளிகையிலே வாழலாம். காட்டு வாழ்க்கையில் ஒவ்வொரு கணமும் அச்சத்தால் நடுங்க வேண்டும். அந்த மாளிகையில் அச்சம் இல்லை; துன்பம் என்பதே இல்லை. ''இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை'' என்று அங்கே சென்று சேர்ந்தவர்கள் சொல்கிறார்கள்.

யாரும் அஞ்சும் அந்த யானைகள் அஞ்சையும் எப்படி அடக்குவது? யானை அங்குசத்துக்கு அடங்கும். இந்தக் காட்டு

யானைகள் சாமான்யமான அங்குசத்துக்கு அடங்குமா? இவற்றை அடக்குவதற்கென்று அஞ்சு அங்குசங்கள் இருக் கின்றன; சாமர்த்தியமுடையவர்கள் அவற்றைப் பெறும் வகையில் பெற்று ஐந்து யானைகளையும் அடக்கிக் காட்டி னின்றும் விடுதலை பெற்று அந்தப் பெருஞ் செல்வனுடைய மாளிகையில் வாழத் தலைப்படுகிறார்கள்.

★

உடம்புதான் அந்தக் காடு. காட்டில் இருக்கும் மரஞ்செடி கொடிகளையும் விலங்குகளையுமாவது கணக்கெடுத்து விடலாம். உடம்பில் இருக்கும் நரம்பு ஊன் முதலிய வற்றையும், இதற்குள் வாழும் தீய குணங்களையும் அள விட்டுக் கூற முடியாது. ஐந்து பொறிகளாகிய யானைகள் இந்தக் காட்டில் வாழ்கின்றன. அவற்றின் ஆட்சிக்குள் அடங்கி ஆன்மா உடம்பில் சிறைப்பட்டுக் கிடக்கின்றது.

அஞ்சுள ஆனை அடவியுள் வாழ்வன.

*(உடம்பாகிய காட்டில் வாழ்பவைகளாகிய பொறிகள் என்னும் யானைகள் ஐந்து உள்ளன.)*

இந்த அஞ்சையும் அடக்கும் அங்குசம் அஞ்செழுத்தாகிய பஞ்சாட்சரம். பஞ்சாட்சரத்தை உச்சரித்துச் செபித்தலால் மனம் ஒருமைப்படும். இறைவனுடைய திருவருட் கருணை கிடைக்கும். அதனால் பொறிகளின் விளையாட்டு அடங்கும். ஐந்து எழுத்துக்களும் சேர்ந்த தொடராகப் பஞ்சாட்சரம் இருந்தாலும் ஒவ்வோர் எழுத்தும் தனித் தனிப் பொருளை உடையது; அதனால் ஒவ்வோரெழுத்தும் ஒவ்வொரு சொல்லேயாகும். இக்காரணத்தால் ஐந்தெழுத்தை, ''அஞ்சு பதம்'' என்றும் சொல்வதுண்டு.

அஞ்சுக்கும் அஞ்செழுத்து அங்குசம் ஆவன.

*(பொறிகளாகிய ஐந்து யானைகளுக்கும் திருவைந் தெழுத்துக்கள் அங்குசமாக உதவுபவை.)*

★

இறைவன் இருக்கும் முத்தி வீட்டை அடையாமல் உடம்பாகிய காட்டினில் உயிர்கள் வாழ்கின்றன. காட்டைக் கடந்தால் வீட்டை அடையலாம். அந்த வீட்டுக்கு உடையவன் உலகத்துக்கெல்லாம் முதல்வன். உலகம் ஐந்து பூதங்களால் ஆனது. கீழிருந்து பார்த்தால் தத்துவங்களின் வரிசையில் பஞ்ச பூதங்கள் முதலில் நிற்கின்றன. அவற்றை முதலாகக் கொண்ட தத்துவங்கள் எல்லாம் தோற்றும்போது ஆதியாக நிற்பவன் இறைவன்.

> ''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
> பகவன் முதற்றே உலகு''

என்று திருக்குறள் முதற் செய்யுளில் அறிவிக்கிற உண்மை அல்லவா அது?

அத்தகைய ஆதியின் அகமாகிய முத்தியென்னும் வீட்டை, ஐம்புலனை வென்று அருள் பெற்றவர்கள் அடைவார்கள்.

அஞ்சு பூதங்கள் முதலிய தத்துவங்களுக்கு முதல்வனாகிய இறைவன் உள்ள இடம் முத்தி. அது துன்பமில்லாத இன்ப நிலையம். அவ்விடத்தை அடைய முடியாமல் உயிர்கள் உடம்பாகிய காட்டில் இருந்து வாழ்கின்றன. காட்டைவிட்டுப் போகமுடியாமல் ஐம்பொறிகளாகிய யானைகள் தடுத்துக் காவல் செய்கின்றன. திருவைந்தெழுத்தாகிய அங்குசத்தைக் கொண்டு அந்த யானைகளை அடக்கி வென்றவர்களே காட்டை விட்டு நீங்கி இறைவனுள்ள இடத்தை அடைய முடியும்.

> அஞ்சுள ஆனை அடவியுள் வாழ்வன;
> அஞ்சுக்கும் அஞ்செழுத்து அங்குசம் ஆவன;
> அஞ்சையும் கூடத் தடுக்கவல் லார்கட்கே
> அஞ்சாதி ஆதி அகம்புகல் ஆமே.

*(காட்டில் வாழ்வனவாகிய யானைகள் ஐந்து இருக்கின்றன. அந்த அஞ்சுக்கும் அங்குசமாக இருப்பவை அஞ்செழுத்துக்கள். அஞ்சு யானைகளையும் ஒருங்கே அடக்க வல்லவர்களுக்கே ஐம் பூதங்கள் முதலாகிய தத்துவங்களுக்கு முதல்வனாகிய இறைவனது வீடாகிய முத்தியை அடைதல் சாத்தியமாகும்.*

ஆனை என்றது பொறிகளை. அடவி-காடு; உடம்பாகிய காடு. கூட-ஒருங்கே. தடுக்க-தம்மைப் புறம் போகவிடாமல் ஊறு செய்வதைத் தடுக்க. அஞ்சு ஆதி-அஞ்சு பூதம் முதலிய தத்துவங்கள்; அன்மொழித்தொகை. தத்துவங்கள் ஒடுக்க முறையில் ஐந்து பூதங்களிலிருந்து தொடங்குவதால் அஞ்சு ஆதி என்றார். ஆதி-அவற்றிற்கு மூலமாகிய தலைவன்; எல்லாத் தத்துவங்களுக்கும் ஆதியாய் நிற்பவன். முப்பத்தாறு தத்துவங்களில் முதல் தத்துவம் சிவம்; இறுதித் தத்துவம் பிருதுவி. தோன்றும் முறையில் சிவதத்துவம் ஆதி. ஒடுங்கும் முறையில் பிருதுவி தத்துவம் முதல். ஆதியினுடைய அகம், முத்தி. புகல் ஆம்-புகுதல் கை கூடும்.)

நாலாந் தந்திரத்தில் திருவம்பலச் சக்கரம் என்ற பகுதியில் 64-ஆம் பாட்டாக உள்ளது இது.



## குன்றும் நாயும்

சிறிய ஊராக இருந்தால் அதற்குப் போகிறவர்கள் மிகச் சிலரே இருப்பார்கள். அதற்குச் செல்லும் வழியும் சிறிதாக இருக்கும். பெரிய நகரமாக இருந்தால் நாலு திசையிலிருந்தும் மக்கள் வருவார்கள். வியாபார நிமித்தமாகவும், நகரத்தில் வாழ்பவர்களைக் காணும்பொருட்டும், வேறு வேலையாகவும் அளவற்ற மக்கள் வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருப்பார்கள். அவர்கள் வந்து செல்லப் பெரிய சாலைகள் பல இருக்கும்.

முத்தி என்பது பெரிய ஊர். எத்தனை பேர் அங்கே வாழ்கிறார்கள் என்று கணக்கிட முடியாது. எப்போதிலிருந்து அதில் உயிர்கள் வாழத்தொடங்கின என்பதையும் சொல்ல முடியாது. அந்த ஊர் எப்போது உண்டாயிற்று? அதையும் சொல்ல ஆள் இல்லை. ஒன்றுமட்டும் தெரியும்; அந்த ஊருக்கு எப்போதும் ஒருவனே தலைவன். அவனுக்குத்தான் கடவுள் என்று பெயர். அந்தத் தலைவனை வெவ்வேறு பேர் கொண்டு அழைக்கிறார்கள். அந்த அந்த ஊரில் சென்று கேட்டால் அவர்கள் சொல்லும் ஒவ்வொரு பெயரும் வெவ்வேறு தலைவனுடைய பேர் என்று தோன்றும். ஆனால் அந்தப் பேரூருக்குச் சென்று பார்த்தால் எல்லாப் பேர்களும் ஒருவனையே குறிக்கும் என்று தெரிந்து கொள்ளலாம்.

அவர்கள் வருகிற வழிகள் எப்படி இருக்கின்றன? ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதம். வடக்கேயிருந்து வருபவர்களுக்கு ஒரு வழி இருக்கிறது; அந்த வழியில் வியாழக்கிழமையன்று யாரும் வரமாட்டார்கள். அன்று தெற்கே சூலமல்லவா? மற்ற வழிகளில் வியாழக்கிழமையன்று மக்கள் பேரூரை நோக்கி வந்துகொண்டிருப்பார்கள்.

இப்படி வெவ்வேறு வகையாக அந்த வழிகள் இருப்பதற்குக் காரணம், அவரவர் புறப்படும் இடம் வேறு வேறு வகையாக இருப்பதுதான். சென்று சேர்கிற பேரூரோ, அதில் இருக்கிற தலைவனோ வேறு வேறு நிலையில் இருப்பதாகக் கொள்ளக்கூடாது. எந்தத் திசையிலிருந்து எப்படி வந்தாலும் அந்த ஊருக்குள் புகுந்துவிட்டால் இன்ப வாழ்வைப் பெறலாம்.

''நான் ஆயிர மைல் நடந்து வந்தேன்; வரும்வழியில் எவ்வளவோ நாள் பட்டினி கிடந்தேன்'' என்றால் அவனுக்குக் கொஞ்சம் அதிகமாக விருந்து கிடைக்கும் என்பதற்கில்லை.

''நான் அருகிலுள்ள ஊரிலிருந்து ப்றப்பட்டேன்; இரண்டு நாளில் வந்தேன்'' என்றால் அவனிடம், ''இன்னும் கொஞ்ச நாள் இரு. அப்புறம் உண்ணலாம்'' என்று சொல்ல மாட்டார்கள். வேறு எந்த எந்த ஊரையோ நோக்கிப் போகாமல் இந்த ஊரை நோக்கி வந்ததே எல்லோருக்கும் பொதுவான கௌரவம். இந்தப் பேரூரை அடையும் வரைக்குந்தான் அவர்களுடைய வருத்தமும் தளர்ச்சியும் இருக்கும். இங்கே வந்துவிட்டால் அப்புறம் தளர்வு ஏது? துன்பம் ஏது?

★

இறைவனுடைய இடமாகிய முத்தி என்னும் பேரூரை அடையவே எல்லாச் சமயங்களும் வழி கூறுகின்றன. சமயங்களை மார்க்கம் என்று வடமொழியிலும் நெறியென்று தமிழிலும் சொல்வார்கள். இறைவனாகிய தலைவன் உள்ள ஊரை அடையும் வழியே சமயம். சமயம் என்னும் வழியில் புகுந்து நடந்து கொண்டே இருக்க வேண்டும். வேறு வகையான இடங்களுக்குச் செல்லும் பிற வழிகள் உயிர்களைப் பிறவியென்னும் பெருங் கடலிலே கொண்டுபோய் ஆழ்த்திவிடும்.

சமயங்கள் பலவானாலும் அக்காலத்தில் வேதத்தை ஆதாரமாகக் கொண்ட சமயங்கள் ஆறு என்று வரையறுத் திருக்கிறார்கள். சைவத்தில அகச் சமயம் ஆறு என்ற வரையறை உண்டு.

முத்தியென்ற ஊருக்குச் செல்லும் வழிகளைப்போல அவை இருக்கின்றன. எப்படியாவது அந்த வழிகளில் ஒன்றை அடைந்து நடந்தால் முத்தியென்னும் பேரூரை அடைவது நிச்சயம்.

ஒன்றது பேரூர், வழிஆறு அதற்குஉள,
என்றதுபோல இருமுச் சமயமும்.

சமய நெறியில் புகுந்து நடக்கத் தொடங்கினவர்களுக்கு, அந்த வழி நல்லது. இந்த வழி நல்லது என்று ஆராய்ச்சி செய்ய நேரம் இல்லை. எந்த வழியிலும் செல்லாமல் நெடுந்தூரத்தில் நின்று, ''அது நல்லது, இது தீயது'' என்று திண்ணைப் பேச்சுப் பேசுகிறவர்களுக்கு ஒரு நன்மையும் உண்டாகாது. நேர்மை யுடன் உழைக்கும் ஒருவனுக்கு வேறு ஓர் உழைப்பாளியைக் கண்டால் மதிப்பு உண்டாகும். சோம்பேறிதான் இரண்டு பேரையும் எடைபோட்டுப் பார்ப்பான்; மேல் கீழ் என்று வேற்றுமையைக் காட்டுவான்; சில சமயங்களில் சண்டைகூட மூட்டிவிடுவான்.

தாம் எந்த வழியிலும் சாராமல் வாழ்நாளை வெறும் பேச்சிலே கழிக்கிறவர்களின் பேச்சை வழிச் செல்லும் அன்பர்கள் காதில் வாங்கிக் கொள்ளமாட்டார்கள்.

மலையைப் பார்த்து நாய் குரைத்தால் அந்த மலை அதைக் கேட்கிறதா? அதற்காகப் பயந்து விலகுகிறதா? நாய் குரைத்துக் குரைத்துப் பலம் இழந்து அடங்கிவிடும். மலை எப்போதும்போல் சலனமின்றி உயர்ந்தோங்கி நின்று கொண்டிருக்கும்.

வீண்வாதம் செய்து, ''நீங்கள் பைத்தியக்காரர்கள்; குருட்டு நம்பிக்கை உடையவர்கள். உண்மை எப்போதும் ஒன்றுதானே? நீங்கள் செல்லுகிற வழி உண்மையாக இருந்தால் அது ஒன்றாகத்தானே இருக்கவேண்டும்?'' என்றெல்லாம் அறிவுடை யோரைப் போலப் பேசித் தம் வாக்கு வன்மையை யெல்லாம் காட்டுகிறவர்களைக் கண்டு சமய நெறியில் செல்பவர்கள் சிறிதும் சோர்வடைய மாட்டார்கள். அவர்கள் ஒருகாலைக்கு ஒருகால் இறைவன் திருவருளில் ஈடுபட்டுத் தாம் பெறும் இன்பத்தை எண்ணி, ''யார் என்ன சொன்னால் என்ன?'' என்று தம் வழியே போய்க் கொண்டிருப்பார்கள்.

ஒரு மங்கைக்குத் திருமணம் ஆயிற்று. சில ஆடவர் களுக்கு முகத்தில் ரோமம் முளைப்பதில்லை. அத்தகைய ஆடவன் ஒருவன் அவளுக்குக் கணவனாக வாய்த்தான். அவனுடன் அவள் இல்வாழ்க்கை நடத்தினாள். மணம் செய்த நாலைந்து ஆண்டுகள் ஆயின. அவர்களுக்குக் குழந்தை பிறக்கவில்லை. என்ன என்னவோ விரதம் இருந்தார்கள்.

பெண்களின் வம்பர் மகாசபை ஒன்று இந்த மங்கை யிருந்த தெருவில் ஒரு வீட்டில் கூடுவது வழக்கம். அங்கே எப்போதாவது இந்தப் பெண்மணியும் போய் விட்டு வருவாள்.

ஒரு நாள் இவள் போயிருந்தபோது, ''அவள் சஷ்டி விரதம் இருக்கின்றாளாமே!'' என்று ஒருத்தி சொன்னாள்.

''அவருங்கூட இருக்கிறாராம்!'' என்று ஏளனக் குரலோடு மற்றொருத்தி பேசினாள்.

''என்ன இருந்து என்ன? குழந்தை பிறக்க வழி இல்லை'' என்றாள் ஒரு வம்பி.

''ஏன்?'' என்று ஒருத்தி கேள்வி போட்டாள்.

''இவள் ஆணைக் கல்யாணம் பண்ணிக் கொண்டிருந் தாலல்லவா குழந்தை பிறக்கும்? அலியைக் கல்யாணம் செய்து கொண்டால்?''

இதைக் கேட்டவுடன் இந்தப் பெண்மணிக்குத் தூக்கி வாரிப்போட்டது. கோபம் மூண்டது. ஆனால் இவள் வாயில்லாப் பூச்சி; எதிர்த்துப் பேச அறியாதவள்.

அந்த வம்பி தன் கட்சியைக் காரண காரியங்களுடன் மெய்ப்பிக்க முன்வந்தாள். ''மீசை முளைத்த ஆண்பிள்ளை யென்று பழமொழி சொல்வார்கள். அந்த லட்சணம் இவளுடைய கணவருக்கு இல்லை. இவ்வளவு நாள் சேர்ந்து வாழ்ந்தும் குழந்தை பிறக்கவில்லை. இன்னும் என்ன வேண்டும், அவரை அலியென்று சொல்ல?''

இப்படி அவள் கூறவே எல்லோரும், ''ஆம், ஆம்'' என்று தலையாட்டினார்கள்.

இதைக் கேட்ட இந்தப் பெண்மணிக்கு முதலில் கோபம் வந்தாலும் பிறகு அவர்களுடைய அறியாமையைக் கண்டு

சிரிப்பே உண்டாயிற்று. தன் கணவன் ஆண் என்பதை இவள் அல்லவா அறிவாள்? அவனால் தனக்கு உண்டாகும் இன்பத்தை இவள் பிறருக்கு விளம்பரம் செய்யவேண்டுமா, என்ன? இந்த உலகமெல்லாம் சேர்ந்து மேற்கோள் காட்டி, 'உன் கணவன் ஆண் அல்ல' என்று முழங்கினால் என்ன? அவர்களுக்கு அவன் ஆண்தான் என்று மெய்ப்பிக்கவேண்டிய அவசியந்தான் என்ன? ''அந்தோ, பாவம்! இவர்களுடைய பேதைமைதான் என்னே!'' என்று இவள் உள்ளே நகைப்பாள்.

சமய நெறியில் புகுந்து மேன்மேலும் அன்பு செய்து வருபவர்களுக்கு இறைவனுடைய திருவருளால் சில வகை அநுபவங்கள் உண்டாகி வரும். அந்த அநுபவத்தை உணர்ந்த பிறகு, மற்றவர்கள் என்ன வாதம் செய்தாலும் அவை பொருளாகப் படா.

சமயத் துறையில் வாழப் புகாமல், சமய நூலறிவை மாத்திரம் ஓரளவு பெற்று, அது நன்று, இது தீது என்ற வாசாஞானம் பேசும் மக்கள் தங்கள் வாழ்நாளை வீணாக்கிக் கொள்கிறார்களேயன்றி, சமயத் துறையில் உண்மையில் புகுந்து அநுபவம் பெற்றவர்கள் அவர்களுடைய வாதங்களால் சிறிதும் தம் நெறியினின்றும் பிறழமாட்டார்கள்.

இந்த நாட்டில் சமய வாழ்வு என்பது நூலறிவு பெறுவது அல்ல; வாதத் திறமை பெறுவது அல்ல; பிறரை அறிவினால் வெல்வதும் அல்ல. இறைவனுடைய அருளநுபவத்தைப் பெறுவது அது; ஒரு காலைக்கு ஒரு கால் தம்முடைய மலச்சுமை அணு அணுவாகக் குறைந்து வருவதை உணரும் நிலையில் நிற்பது.

அநுபவம் இல்லாதவர்கள் சமய நெறியில் வாழ்பவர்கள் அல்ல. அவர்களே, ''நன்றிது, தீதிது'' என்று உரைப்பவர்கள்; குன்றைக் கண்டு குரைக்கும் நாய்க்குச் சமானமானவர்கள்.

> "ஒன்றது பேரூர்; வழிஆறு அதற்குஉள"
> என்றதுபோல இருமுச் சமயமும்;
>
> ''நன்றிது, தீதிது'' என்றுஉரை யாளர்கள்
> குன்று குரைத்தெழு நாயைஒத் தார்களே.

(''பெரிய ஊர் ஒன்று; அதற்குப் போக ஆறு வழிகள் இருக்கின்றன'' என்று சொல்வதுபோல ஆறு சமயங்களும் உள்ளன. அவற்றில், ''இது நன்று, இது தீது'' என்று வேற்றுமையைப் பெரிதாக்கி உரைப்பவர்கள் குன்றைக் கண்டு குரைத்துத் துள்ளுகின்ற நாயை ஒத்தார்கள்.

ஒன்றது-ஒன்று; அது: பகுதிப் பொருள் விகுதி. பேரூர் ஒன்றுதான். என்றதுபோல் என்பது அவாய் நிலையாய் என்றதுபோல உள்ளன என்று ஒருசொல்லை வருவித்து முடிக்க, முடியும். உரையாளர்கள்-செயலைச் செய்யாமல் உரையை ஆள்பவர்கள்; வெறும் பேச்சுக்காரர்கள். இத்தகையவர்களையே வள்ளுவர், ''பயனில்சொல் பாராட்டுவான்'' என்று கூறினார்.)

நாய் அருகிலே நின்ற வேறு நாயையோ மனிதனையோ கண்டு குரைத்தால் நாயும் விலகும்; மனிதனும் அஞ்சி ஒதுங்குவான். குன்றைப் பார்த்துக் குரைத்தால் அது நகருமா? அது எப்போதும்போலவே நிற்கும். இறைவனுடைய திருவருள் அநுபவம் உடையவர்கள் சிறிதும் சலனமடையாத மனத் திண்மை பெற்று மலையைப்போல நிற்பார்கள்.

''அஞ்சுவது யாதொன்றும் இல்லை
அஞ்ச வருவதும் இல்லை''

என்று பேசுவதுதானே அவர்கள் நிலை?

வெறும் பேச்சுப் பேசுகிறவர்கள், தன் இனத்தைக் கண்டு வலியக் குரைத்துச் சண்டை செய்யும் நாயின் இயல்பை உடையவர்கள்.

இது ஐந்தாந் தந்திரத்தில் உட்சமயம் என்ற பிரிவில் வரும் இரண்டாவது பாட்டு.

★

# உள்முகப் பார்வை

உள்ளத்திலே நல்ல குறிக்கோளும், அந்தக் குறிக்கோளில் பற்றும், அதை அடையும் முயற்சியும் இல்லாதவர்களுக்கு எது கிடைத்தாலும் அது வீணாகிவிடும். ஆற்றல் பெற்ற அசுரர்கள் பிறரை நலிந்தார்கள். வீமன் தீயவரைச் செற்று நல்லோரைக் காத்தான். இராவணன் அறிவு நிரம்பப் பெற்றும் நல்ல குறிக்கோள் இன்மையால் அழிந்தான். தீய உள்ளம் படைத்தவர்களுக்கு எந்தப் பொருளும் பிறருக்குத் தீங்கு புரியவே உதவும்.

பணம் மக்களுக்குச் செருக்கை உண்டாக்குவதைப் போலவே நூலறிவும் செருக்கை உண்டாக்கும். நூலைக் கற்றல் அறிவு தெளிவடைய வேண்டி; அறிவு தெளிந்தால் இறைவனிடம் அன்பு பிறக்கும்.

> ''கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன்
> நற்றாள் தொழாஅர் எனின்''

என்ற குறளில், கல்வியின் பயன் இறைவன் தாள் தொழல் என்று வள்ளுவர் சொல்கிறார். அந்தப் பயனை அடையும் நெறியிற் செல்லாத 'அறிவாளிகள்' எந்தக் காலத்திலும் இருக்கிறார்கள். அவர்களுக்குச் சாத்திரம் பெரிதே ஒழியச் சமய வாழ்வு பெரிது அன்று.

> ''சாத்திய ரம்பல பேசும் சழக்கர்காள்
> கோத்தி ரமுங்குல முங்கொண் டென்செய்வீர்
> பாத்தி ரஞ்சிவ மென்று பணிதிரேல்
> மாத்தி ரைக்குள் அருளும்மாற் பேறரே''

என்றும்,

''குறிக ளும்அடை யாளமும் கோயிலும்
நெறிக ளும்அவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்
பொறியி லீர்மனம் என்கொல் புகாததே''

என்றும் இத்தகைய செருக்கர்களைப் பார்த்து இரங்குகிறார் அப்பர் சுவாமிகள்.

நூல்களை ஏணியாகக் கொண்டு இறைவனை அறியும் நெறியிலே புகுந்து செயல் செய்யவேண்டும். அதனைவிட்டு நூலிழையை ஆயிரம் கூறிட்டுக் காட்டுதல்போல அறிவின் சாமர்த்தியத்தாலும், வாக்கு வன்மையாலும், வாதத் திறமையாலும் சாத்திரங்களின் நுட்பங்களைக் காட்டிச் சமருக்குக் கச்சை கட்டுவோர், ஏணியைச் சுமந்துகொண்டு, ஏறவேண்டிய இடத்தில் ஏறாமல் இருப்பவர்களுக்குச் சமானமானவர்களே.

நூல்களைப் படிப்பதற்கும் அவற்றைத் தெளிவதற்கும் எத்தனை காலம் கழிகின்றது! அவ்வளவு காலத்தைச் செலவிட்டும் நன்மை பெறாமல் செருக்கு மிஞ்சிப் போவதைக் காட்டிலும் துரதிருஷ்டம் வேறு என்ன வேண்டும்? தம்முடைய கட்சியே வெல்ல வேண்டுமென்று மண்டையைக் குடைந்து கொண்டு நிற்பவர்கள், இறைவனைக் காணவேண்டும் என்ற ஏக்கத்தையுடையவராகி அந்த நெறியில் வாழத் தொடங்கினால் எவ்வளவு நன்மை உண்டாகும்!

நம்முடைய பார்வையைப் புறத்தே போகவிட்டு, அறிவை வெளியிலே அலைய விட்டு, அதனால் தெரிந்து கொண்டவற்றை வைத்துக் கொண்டு, ''நான் மெத்தப் படித்தவன்; அகன்ற அறிவுடையவன்'' என்று சொல்லுகிறோம். நம்மைக் காட்டிலும் அகலமான அறிவு படைத்தவன் வந்து வாதம் பேசினால் நம் வாய் அடங்கிவிடுகிறது. புறத்திலே செலுத்தும் அறிவு மேலே மேலே போய்க்கொண்டேதான் இருக்கும். அதை நிறுத்த இயலாது. போகப் போக இடம் விரிந்துகொண்டே போகும். ஆனால் இந்தப் பயணத்தை மாற்றிச் சிறிது உள்ளே திருப்பிவிட்டால் நிச்சயமாக ஓரிடத்தில் வந்து நிற்கவேண்டும். அகமுகமாக நம் பார்வையைத் திருப்பிவிட்டால் அகலம் குறைந்துவிடும்; ஆழம் உண்டாகும்.

உலகத்தையும் நூலையும் பார்த்த பார்வையைத் திருப்பி உயிராகிய தம்மையும் அதனூடே உயிர்க் குயிராக நிற்கும் இறைவனையும் பார்க்க முயலவேண்டுமென்பதைச் சொன்னார். ஆணிபோல் பதிய என்று ஒரு சொல்லைக் கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். ஆர்த்த - கட்டிய.)

பிறவியினாற் கட்டுண்டு கிடக்கும் ஆன்மாக்கள் அக்கட்டினின்றும் நீங்கினால் வீடு பெறும்.

"ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்தாடும் தீர்த்தன்."

என்று மாணிக்கவாசகரும் 'ஆர்த்த பிறவி'யைச் சொன்னார்.

இது ஆறாந் தந்திரத்தில் தவம் என்னும் பகுதியில் வரும் 8-ஆவது பாட்டு.



# உடம்பாலயம்

தமிழ் நாட்டில் உள்ள கோயில்களின் அமைப்பு வியக்கத்தக்கது. மனித சரீரம் போல அமைந்தது ஆலயம். ஆலயத்தின் உறுப்புக்களை மக்கள் உடம்பின் உறுப்புக்களோடு ஒப்புமை காட்டி அதன் தத்துவத்தை விளக்குவார்கள் அறிஞர்கள்.

உடம்பைப் போன்றது ஆலயம் என்பதன் விரிவை இப்போது காணுவதை விட்டுவிட்டு, உடம்பு ஆலயத்தைப் போன்றிருக்கிறது என்று திருமூலர் சொல்வதைக் கேட்கலாம்.

ஆலயத்தில் நம் கண்ணுக்கு முதலில் தோன்றுவது கோபுரம். அது கோயில் வாசலின்மேல் இருப்பது. பலநிலைகளால் ஆகியது அது. கோயிலில் பல பிராகாரங்கள் இருக்கும். சிவலிங்கப் பெருமான் இருக்கும் மூலஸ் தானத்துக்குப் போவதற்கு முன் பிராகாரங்களையும் பலவகை மண்டபங்களையும் கடக்கவேண்டும். இறைவன் உறையும் இடத்துக்குக் கர்ப்பக்கிருகம் என்று பெயர். அதை நடுவாக வைத்து மற்ற அமைப்புக்களையெல்லாம் கட்டியிருக்கிறார்கள்.

சிவபெருமானை ஆலயத்தில் தரிசனம் செய்துவிட்டு வந்தால் போதாது. ஆலய் தரிசனத்தின் பயன் நம்முடைய உள்ளம் தூய்மையடைவதே. இறைவனைக் கண்களால் கண்டு உருகி அவனுடைய கோலத்தை உள்ளத்திலே படம் பிடித்துக் கொள்ளவேண்டும். தியானம் செய்கையில் நம் உள்ளத்தில் அப்பெருமானை எழுந்தருளச் செய்து இன்புறவேண்டும். பல வேறு கோயில்களுக்குச் சென்று வழிபடுவதற்குப் பயன் இது.

ஊரில் உள்ள கோயிலில் சிவபெருமானைத் தரிசித்தது போல உடம்பாகிய கோயிலில் உள்ள சிவபெருமானையும் தரிசிக்கலாம். ஆலயத்தில் உள்ள சிவலிங்கம், உள்ளத்தில்

இறைவனைக் காணவேண்டும் என்பதை நினைப்பூட்டும் சின்னமேயாகும்.

இந்த உடம்பே பெரிய ஆலயம். மனிதன் கட்டும் கோயிலில் இதில் உள்ள நுட்பமான அமைப்பைக் காண முடியாது. இறைவனே இந்த ஆலயத்தைக் கட்டிக் கொடுத்திருக்கிறான். இதற்குள்ளே உள்ளம் அல்லது இருதயம் இருக்கிறது; அதுதான் இறைவன் உறையும் கர்ப்பக்கிருகம். கோயில் எவ்வளவு பெரிதாகவும் அழகாகவும் இருந்தாலும் கர்ப்பக்கிருகம் தூயதாக இல்லாவிட்டால் பக்தர்கள் இறைவனைத் தரிசிக்க இயலாது. உடம்பு பெரிதாக இருந்தால் போதாது; உள்ளம் தூயதாக இருக்கவேண்டும்.

கோயில்களில் பல பிராகாரங்களையுடையவைகளும் உண்டு; ஒரே பிராகாரத்தையுடைய கோயில்களும் உண்டு. ஆனால் எல்லாவற்றிலும் கர்ப்பக்கிருகம் இருக்கும். அதுபோல் உடம்பினால் அழகியவர்களும், பெரியவர்களும், அழகற்ற வர்களும், உறுப்புக் குறைவுடையவர்களும் இருக்கலாம்; ஆனால் எல்லோருக்கும் உள்ளம் என்பது சிறிது பெரிதின்றி இருக்கிறது.

உள்ளமாகிய கர்ப்பக் கிருகத்தில் சிவன் இருக்கிறான். ஆலயத்தில், இறைவன் சிவலிங்கத்துக்குள் இருக்கிறான். சிவலிங்கம் அவனுடைய உருவம். அதுபோல் உடம்பாகிய ஆலயத்தில் உள்ளமாகிய கர்ப்பக்கிருகத்தில் சீவனாகிய உருவத்துக்குள்ளே சிவபெருமான் இருக்கிறான். உடலுக்குள் உயிர் இருப்பதுபோல உயிருக்குள் உயிருக்குயிராகிய இறைவன் இருக்கிறான். உயிர் இருப்பதனால் உடம்பு இயங்குகிறது. உயிருக்குயிர் இருப்பதனால் உயிர் இயங்குகிறது. சீவனை இடமாகக்கொண்டு சிவன் விளங்குகிறான். சீவன் சிவ சொரூபம். இது தூய்மைபெற்ற நிலையிலுள்ள ஞானியர் திறத்தில் அமைவது.

சிவஞானத்தால் தெளிவு பெற்ற ஞானிகளுக்குச் சீவன் சிவசொரூபமாக நிற்கும்; இன்ப வாழ்வு உண்டாகும். அவர்கள் தெள்ளத் தெளிந்தோர்.

உள்ளம் பெருங்கோயில்; ஊனுடம்பு ஆலயம்;

... ... ...

தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்.

*(சிவஞானம் பெற்று நன்றாகத் தெளிந்தவர்களுக்கு அவர்களுடைய உள்ளமே பெருமையையுடைய கர்ப்பக்கிருகம்; ஊனாகிய உடம்பே ஆலயம்; சீவனே சிவலிங்கம்.*

*பெருங்கோயில் பெருமை, தலைமையைக் கருதியது. ஊனால் ஆகிய உடம்பாக இருந்தாலும் அது கோயிலாகத் திகழும். சிவலிங்கம்-சிவன் ஆவிர்ப்பவித்திருக்கும் லிங்கவடிவம்.)*

இந்த உடம்பிலே சிறப்பாகத் தோன்றுவது தலை; தலை என்பதே அதன் தலைமையைக் காட்டுகிறதல்லவா? எவரையும் முகத்தைக் கொண்டு அடையாளம் தெரிந்து கொள்கிறோம். ஆலயத்தில் கோபுரம் சிறப்பாகக் காட்சி தருவதுபோல, உடம்பாகிய ஆலயத்தில் தலை காட்சி தருகிறது. கோபுரத்தின் கீழே பெரிய வாயில் இருக்கிறது. இங்கும் தலையின்கீழ்ப் பெரிய வாசலைப் போல வாய் இருக்கிறது. வாய் என்பதே வாயில் என்ற பொருளை நினைப்பிக்கிறதல்லவா?

வேண்டியார் வேண்டியனவற்றைத் தரும் வள்ளலாகிய இறைவன் எழுந்தருளிய இந்த உடம்பென்னும் ஆலயத்தைப் பற்றித் திருமூலர் சொல்லுகிறார். எல்லாருடைய உடம்பும் ஆலயமாவதில்லை. தெள்ளத் தெளிந்த சிவஞானிகளுடைய உடம்பே ஆலயமாகின்றது.

உள்ளம் பெருங்கோயில்; ஊன்உடம்பு ஆலயம்;
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்;
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்.

*(தெள்ளத் தெளிந்தாருக்கு அவர்களுடைய உள்ளமே வள்ளற் பிரானுக்குரிய பெருங்கோயில். அவர்களுடைய உடம்பே வள்ளற் பிரானுக்குரிய ஆலயம் என்று ஒவ்வொன்றனுடனும் கூட்டிக் கொள்ளவேண்டும்.)*

★

**ஊ**னால் அமைந்து மற்றவர்களிடம் அருவருக்கத் தக்கதாக உள்ள உடல் தெள்ளத் தெளிந்தவர்களிடம் ஆலயமாக மாறிவிடுகிறது. அப்படியே மற்றொரு மாற்றமும் உண்டாகிறது.

நம் உடம்பில் நுகர்ச்சிக் கருவிகளாக இருக்கும் புலன்கள் ஐந்தும் நம்மைப் பல இடங்களில் ஈர்த்துச் செல்கின்றன. அவற்றால் நாம் அடையும் தீங்குகளுக்குக் கணக்கு வழக்கே இல்லை. ஆனால் அந்தப் புலன்களே சிவஞானம் பெற்ற வர்களிடம் வாலாட்டுவ தில்லை. மற்றவர்களை மதமுடைய யானைகளாக அச்சுறுத்தும் அவை அவர்களிடம் கட்டுப்பட்ட யானைகளாகி விடுகின்றன; அவர்களுக்கு ஏவல் செய்கின்றன.

புலன்களால் அறியாமையாகிய இருள் நமக்கு மிகுதியாகிறது. தெள்ளத் தெளிந்த சிவஞானிகளுக்கு உடம்பு ஆலயமாகவும் உள்ளம் கர்ப்பக்கிருகமாகவும் சீவன் சிவலிங்கமாகவும் மாறும்போது ஐம்புலன்களும் கோயிலில் வைக்கும் தீபங்களாகி விடுகின்றன. கோயிலில் பெரிய விள்க்குகளை ஏற்றுவார்கள். அவற்றைக் காளா விளக்கு என்று சொல்வார்கள்; இப்போது காடா விளக்கு என்று வழங்குகிறது. புலன்கள் சிவஞானிகளின் ஒழுக்கத்துக்குத் துணையாக ஞான வாசனை வீசுகின்றன. அவர்களுடைய கரணங்கள் யாவுமே சிவ கரணங்களாகி மாறிவிடுகின்றன.

கள்ளப் புலன்ஐந்தும் காளா மணிவிளக்கே.

*(திருட்டுத்தனத்தையுடைய ஐம்புலன்களும் பெரிய அழகிய விளக்குகளாகும்.*

*மற்றவர்களுக்குக் கள்ளப் புலன்களாக இருந்தவை அவை; இவர்களுக்கே தெள்ளத் தெளிவதற்கு முன்பு அப்படி இருந்தவை. கள்ளம்- தம்மை உடையாருக்குத் தீங்கு செய்யும் கரவு. காளாவிளக்கு என்று கூட்டுக. மணி - அழகு; மணி விளக்கு - மணியாகிய தூண்டா விளக்கு என்பதும் பொருந்தும்.)*

★

அருவருப்பதற்குரிய உடம்பும், ஆறு தீய குணங்களுக்கு இடமாகிய உள்ளமும், தீயவை பேசும் வாயும், தீய வழியிற் செலுத்தும் புலன்களும் இறைவன் திருவருள் பெற்ற பிறகே ரஸவாதத்தால் செம்பு பொன்னாக மாறியது போல மாறிவிடும்.

உள்ளம் பெருங்கோயில்; ஊன்உடம்பு ஆலயம்;
வள்ளல் பிரனார்க்கு வாய்கோ புரவாசல்;
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்;
கள்ளப் புலன்ஐந்தும் காளா மணிவிளக்கே.

''ஊனுடம்பு சுற்றாலை'', ''தெள்ளித் தெளிவார்க்கு'', ''காள மணிவிளக்கு'' என்று வேறு பாடங்களும் உண்டு. சுற்றாலை என்ற பாடத்திற்குத் திருச்சுற்று மதிலாகிய பிராகார மென்று பொருள் கொள்ள வேண்டும்.

கயிலாய சித்தர் உரையில் உள்ள சில பகுதிகள் இங்கே அறிவதற்குரியன. 'பாலின்கண் நெய் இருந்தாற்போலவே பூரண சிவலிங்கம் உள்ளமாகிய சீவாத்மாவை இடங்கொண்டிருக்கை யினாலே, ''உள்ளம்பெருங்கோயில்''...... உள்ளப்பெருங் கோயிலாகிய சீவாத்மாவுக்கு ஐம்பூத வடிவு வளையமாகை யினாலே, ''ஊனுடம்பு சுற்றாலை''..... வைகரி வாக்குச் சுற்றாலாகிய வடிவுக்கு முன்னிலையாகையினாலே, ''வள்ளற் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்''..... காரணகுரு கைகாட்டும் படியே உள்ளமாகிய சீவாத்மா கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற் போலவே பூரணமாகிய சிவலிங்கத்தில் ஐக்கிய பதம் பெற்ற படியினாலே, ''தெள்ளித் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்''.. தெளிந்தபின் புலன் ஐந்தும் சிவாம்சமாகத் தோற்றுகையினாலே, ''கள்ளப் புலனைந்தும் கால மணிவிளக்கே.''...'

ஈது ஏழாந் தந்திரத்தில் சிவபூசை என்னும் பகுதியில் வரும் முதல் பாட்டு.



# திருக்கூத்து

மனிதனுக்கு எல்லாப் புலன்களையும்விடச் சுவைப் புலன் மிகவும் வலிமையுடையது. குழந்தைப் பருவ முதல் இறக்கும் பருவம் வரையில் அந்தப் புலன் மாத்திரம் வலியிழக்காமல் இருக்கிறது. வேறு புலனுக்கு இனிமைதரும் பொருளுக்கு உவமை சொல்ல வேண்டுமானாலும் நாவுக்கு இனிமை தருவதையே எடுத்துச் சொல்கிறான். ''இசைத்தேன் பருகினேன்'' என்று சொல்கிறார். ''அவன் முகத்தில் பால் வடிகிறது என்று பேசுகிறான். குழந்தையை, ''தேனே, கரும்பே'' என்று கொஞ்சுகிறான்.

உணவுப் பண்டத்தின் பெயர்களை ஒருவர் சொல்லிக் கொண்டே வந்தால், காதில் கேட்டால் போதும், நாவில் நீர் ஊறுகிறது. உணவை உண்ணும்போது நாவில் நீர் ஊறுவதனால் அவ்வுணவு ஜீரணமாகிறது; இது உடற்கூற்றின் உண்மை. சுவைப் புலனுக்கு நாம் அடிமையாக இருக்கிறோம் என்பது மற்றோர் உண்மை. அதனால்தான் காதில் பெயர் கேட்ட மாத்திரத்தில் நாவில் நீர் ஊறுகிறது. அப்பண்டத்தைக் கண்ணால் கண்டுவிட்டால் சொல்லவே வேண்டாம்.

இறைவன் திருப் பெயரைச் சொன்னாலும், அவன் புகழைக் கேட்டாலும், அவன் திருவுருவத்தைக் கண்டாலும் அன்பர்களுக்குக் கண்ணில் நீர் ஊறுகிறது. 'அது ஏன் ஊறுகிறது? காரணம் தெரியவில்லையே!' என்று மற்றவர்கள் கேட்கிறார்கள்.

நல்ல புளியோதரையை ஓரன்பர் வைத்துக்கொண்டு சாப்பிடுகிறார். அருகில் இருப்பவனுக்கு நாக்கில் நீர் ஊறுகிறது. புளியோதரையின் காட்சி நாவில நீர் ஊறச் செய்கிறதற்குக் காரணம் என்ன? மனிதனுக்குச் சுவைப் பண்டங்களில் உள்ள மீதூர்ந்த விருப்பந்தான். அது போலவே இறைவனிடம் உள்ள

முறுகிய பக்தியினால் அவன் திருவுருவத்தைக் கண்டால் அன்பர்களுக்குக் கண்ணில் நீர் ஊறுகிறது.

நாவில் ஊறும் நீர் சுவைக்கு அடிமையானதைக் காட்டுகிறது. கண்ணில் ஊறும் நீரோ, இறைவனுடைய அன்பு மிகுதியினால் அவனுடைய திருவருளுக்கு ஆளாகி நிற்பதைக் காட்டுகிறது.

கண்ட அன்பர்களையெல்லாம் ஆனந்தக் கடலில் ஆழ்த்தும் பேரழகு நடராசப் பெருமானுடைய கோலத்துக்கு உண்டு. இந்த மானிடப் பிறவியில் எவ்வளவு நாள் உழலுவேன் என்று ஏங்கும் உள்ளம் உடைய பெரியோர்களும், ''இறைவா, நின்னுடைய திருக்கூத்தைத் தரிசிக்கும் பேறு பெற்றால் இம்மனிதப் பிறவியும் வேண்டுவதே''* என்று கூறுகிறார்கள்.

அவ்வளவு இன்பத்தைத் தரும் ஆனந்தத் தாண்டவத்தைக் கண்ட அன்பர்களுக்கெல்லாம் இறைவன் வழங்கிய அருளின் அடையாளமாகக் கண்ணீர் உண்டாகும்; நெஞ்சம் நெக்கு நெக்கு உருகும்.

> புளிக்கண் டவர்க்குப் புனல்ஊறு மாபோல்
> களிக்கும் திருக்கூத்துக் கண்டவர்க்கு எல்லாம்
> அளிக்கும் அருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கும்.

*(புளிச்சுவையையுடைய உணவுப் பண்டங்களைக் கண்டவர்க்கு நாவில் நீர் சுரப்பதுபோல, ஆனந்தத் தாண்டவமானது தன்னைக் கண்ட அன்பர்களுக்கெல்லாம் இறைவன் வழங்கும் அருளநுபவத்தால் கண்ணீர் சோரச் செய்யும்; அதற்குக் காரணமான நெஞ்சை உருக்கும்.*

*புளி - புளிச் சுவையுள்ள உணவுப் பொருள்; ஆகுபெயர். புளியைக் கண்டவர்க்குப் புனல் ஊறுவது நாவில். ஊறுமாறு போல் என்பது ஊறுமாபோல் என வந்தது. களிக்கும் திருக்கூத்து ஆனந்தத் தாண்டவம்; எழுவாய். அன்பர்கள் கண்டுகளிக்கும் நடனம் என்றும்*

---

* *''குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயிற் குமிண் சிரிப்பும், பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும், இனித்த முடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்றால், மனித்தப் பிறவியும் வேண்டுவ தேஇந்த மாநிலத்தே'' - திருநாவுக்கரசர் தேவாரம்.*

சொல்லலாம். கண்டவர்க்கு எல்லாம் என்றது, காணும் முறைப்படி கண்டவர்கள் யாவருக்கும் என்று பொருள் கொள்வதற்குரியது. இறைவன் திருவுருவத்தை வெறும் விக்கிரகமாகவாவது, கலைப் பொருளாகவாவது காணுதல் அந்த உருவத்தைக் காணுவதாக ஆகுமேயன்றி, இறைவனைக் காணுவதாகாது. இறைவன் திருக்கூத்தையே கண்டாற்போன்ற ஆதராதிசயம் உடையவர்களையே இங்கே கருதினார்.

இறைவன் அளிக்கும் அருள்; அந்த அருள் காரணமாக வரும் கண்ணீர். இறைவன் திருவருளநுபவம் உடையாருக்கு மெய்ம்மயிர் பொடிக்கும்; கண்ணீர் சோரும்.

''பேரானந்தம் உற்றவர்க்கே கண்ணீர்கம் பலை உண்டாகும்'' என்று தாயுமானவர் உணர்த்துகிறார்.

கண்ணீர் சோர்வதற்குக் காரணம் உள்ளத்தில் தோன்றிய உருக்கம். கண்ணீர் சோர்வதற்குக் காரணமான நெஞ்சைத் திருக்கூத்து உருகச் செய்யும். கண்ணீர் சோர்தலும் நெஞ்சு உருகுதலுமாகிய இரண்டையும் இங்கே கொள்ளவேண்டும்.

கூத்து உருக்கும் என்று கூட்டுக.)

★

திருக்கூத்தைக் கண்டவுடன் கண் நீர் சோர நெஞ்சு உருகும். பின்பு மாறிலா மகிழ்ச்சி உள்ளத்தே உண்டாகும். ஒரே ஒளி மயமான சூழலாக நெஞ்சம் இருக்க, அங்கே ஆனந்த அமுது ஊறும்.

ஒளிக்குள் ஆனந்தத்து அமுதூறும் உள்ளத்தே.

*(தேஜோமயாணந்த அமுதம் உள்ளத்தில் ஊறும்.*

*இருள் மாய்ந்து துன்பம் நீங்கி ஒளியும் ஆனந்தமும் உள்ளத்தில் இடங்கொள்ளும். ஆனந்தத்து அமுது - ஆனந்தமாகிய அமுது; அத்து : வேண்டா வழிச் சாரியை.)*

சுந்தரமூர்த்தி நாயனார் நடராசப் பெருமானுடைய ஆனந்தத் தாண்டவத்தைத் தரிசித்து இத்தகையதோர் ஆனந்த நிலையை அடைந்தாரென்று சேக்கிழார் சொல்கிறார்.

"ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணம்ஒரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே ஆக
இந்துவாழ் சடையான் ஆடும்ஆ னந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்."

"தெண்ணிலா மலர்ந்த வேணியாய் உன்றன்
திருநடம் கும்பிடப் பெற்று
மண்ணிலே வந்த பிறவியே எனக்கு
வாலிதாம் இன்பமாம் என்று
கண்ணில்ஆ னந்த அருவிநீர் சொரியக்
கைம்மலர் உச்சிமேற் குவித்துப்
பண்ணினால் நீடி அறிவரும் பதிகம்
பாடினார் பரவினார் பணிந்தார்."

இப்பாடல்களில் சொல்லப்பெற்ற அநுபவம் திருமூலர் திருவாக்கில் உள்ள அநுபவமேயாகும். திருமந்திரப் பாட்டுக்கு ஒரு வகையில் இவற்றைச் சிற்றுரையாகவே கொள்ளலாம்.

புளிக்கண் டவர்க்குப் புனல்ஊறு மாபோல்
களிக்கும் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
அளிக்கும் அருட்கண்ணீர் சோர்நெஞ்சு உருக்கும்;
ஒளிக்குள்ஆ னந்தத்து, அமுதுஊறும் உள்ளத்தே.

இது ஒன்பதாம் தந்திரத்தில் அற்புதக் கூத்து என்ற பகுதியில் உள்ள 17-ஆம் பாட்டு.

நிறைந்தது



கி.வா.ஜ. அவர்களுக்கு சிறு வயதிலேயே தமிழ் இலக்கியங்கள் மீது பற்று ஏற்பட்டது. டாக்டர் உ.வே. சுவாமிநாதையர் அவர்களுடைய தலை மாணாக்கராக இருந்து தமிழ் பயின்று, அவர்களது அருந்தமிழ் பணிக்கும் துணை நின்று, 'கலைமகள்' மாதப் பத்திரிகையின் ஆசிரியராக ஐம்பதாண்டுகளுக்கு மேல் பணி யாற்றியுள்ளார்.

தமிழ் ஆராய்ச்சி, இலக்கியம், பக்தி இலக்கியங்கள், கவிதைகள், நாடோடிப் பாடல் கள், பழமொழிகள் என இவரே எழுதியும், தொகுத்தும் அளித்துள்ள நூல்கள் இருநூற்றுக் கும் மேற்பட்டனவாகும்.

குறிப்பாக, இலக்கணத்துக்கு விளக்கம் தருவதில் வல்லவர். சிலேடையாய்ப் பேசுவதில் இவருக்கு நிகர் இவரே.

எந்த இலக்கிய நூலிலே சந்தேகம் ஏற்படினும் உடனடியாக விளக்கம் கி.வா.ஜ. அவர்களிடமிருந்து கிடைக்கும் என்பதைத் தமிழ் அறிஞர்கள் பலரும் அறிவர்.

இவர், பல காலமாக உள்ள ஐயங்களைப் போக்குகின்ற வகையில், 'கலைமகள்' மாத இதழில் பதிலளித்து வந்தார். இவை என்றென்றும் நமக்குப் பயன் விளைக்கக் கூடும்.

